# அணிந்து மகிழ அழகிய ஆடை ரகங்கள்

■ உயர்ரக பின்னி ரெடிமேட் காட்டன், டெரீன்/காட்டன் ஷர்ட்டுகள் ■ பின்னி டெரீன்/காட்டன் ஸூட்டிங்குகள், ஷர்ட்டிங்குகள்—காட்டன் ஸூட்டிங்குகள், ஷர்ட்டிங்குகள்—காபர்டைன்ஸ்—கான்ஸல்—டிரில்கள் மற்றும் அநேக சிறந்த ரகங்கள். ■ பின்னியின் அசல் பட்டுப் புடவைகள், வேஷ்டிகள், அங்கவஸ்திரங்கள்—ஸில்க் ஷர்ட்டிங்குகள் ■ குவாலியர் 100% டெரீன் ஸூட்டிங்குகள் ■ அசோக் 100% டெரிலின் ஷர்ட்டிங்குகள், டெரீன்/வுல் மற்றும் வுல்லன் ஸூட்டிங்குகள் ■ காம்டிரஸட் & காஜோரி பனியன்கள், ஜட்டிகள் ■ ஸோடியாக் டைகள், ஸாக்ஸ்கள்.



இந்திய ஜவுளி ரகங்களில் இணையற்றவை. எல்லாம் நிர்ணயிக்கப்பட்ட மில் விலைகளிலும், கண்ட்ரோல்ட் விலைகளிலும் கிடைக்கும்.

*வேலை நேரங்கள்:-*
*காலை 9-30 மணி முதல் 1 மணி வரை*
*மாலை 3-30 மணி முதல் 8 மணி வரை*

## ஸ்ரீ கிருஷ்ணா டெக்ஸ்டைல்ஸ்




2, தம்புசெட்டி தெரு மதராஸ்-1
**போன்: 22222**

EP-SKT-28

# இருமலா?

# க்ளைகோடின்

## சாப்பிட்டதும் போய்விட்டதே!



சற்று முன்புதான் அவள் இருமலால் தவித்துக் கொண்டிருந்தாள் என்றால் நம்புவீர்களா? பிறகு க்ளைகோடின் சாப்பிட்டாள். க்ளைகோடின் அவள் இருமலை வெகுசீக்கிரம் பூரணமாக நிறுத்திவிட்டது

## பூரண இருமல் கட்டுப்பாட்டுக்கு க்ளைகோடினுக்கு இணை எதுவுமில்லை!

பாதிக்கப்பட்ட எல்லா பகுதிகளிலிருந்தும் இருமலை விரட்டியடிக்க மருத்துவரீதியாக அங்கீகரிக்கப்பட்ட க்ளைகோடின் புதிய ஃபார்முலா செயல்படுவது எப்படி என்று பாருங்கள்:

**தொண்டையில்—**
சளி அடைப்பை அகற்றி, எரிச்சலைச் சமனப்படுத்துகிறது.

**நுரையீரல்களில்—**
அடைத்துக் கொண்டிருக்கும் கோழையைத் தளர்த்தி, சளியை வெளியேற்றுகிறது.



**மூளையில்—**
இருமல் கேந்திரத்தைக் கட்டுப்படுத்துகிறது.

**மார்பில்—**
இறுகிய தசைநார்களுக்கு இதமளித்து சுலபமாக சுவாசிக்க உதவுகிறது.



**க்ளைகோடின்**
டெர்ப் வசாகா

இருமல்களுக்கு, மிக அதிகமாக விற்பனையாகும் வீட்டு நிவாரணி

Alembic

அலெம்பிக் கெமிகல் ஒர்க்ஸ் கோ. லிட்., பரோடா-3

everest/352e/AWC tm

வீணா

தரத்தினை விரும்புவோர், உயர் ரகத்தினை விரும்புவோர், எம்ப்ராய்டரியில் மிகச் சிறந்ததை விரும்புவோர் என்றும் தேடுவது

# Veena
## எம்ப்ராய்டரீஸ்



ரிஜிஸ்டர்டு
டிரேட் மார்க்
நெ. 236096









*தயாரிப்பாளர்கள் :*

**S. S. M. பிரதர்ஸ் (பி) லிட்.,**
த. பெ. எண் : 8
குமாரபாளையம் போஸ்ட், (ஈரோடு வழி)

எங்கள் இதர உற்பத்திகள் :
யாழ் (வீணா) மார்க்
பருத்தி & ரயான் வேஷ்டிகள்,
சர்ட்டிங்ஸ், பட்டுத் துணிகள்,
விசேஷ ரக பவானி பட்டு சிப்பன்கள்,

*சென்னை நகர ஸ்டாக்கிஸ்ட் & ஏஜண்ட் :*
அமர்ஜோதி டிரேடர்ஸ்
99, கிடங்கு தெரு, சென்னை-1.

VE.104




## ஆப்கன் ஸ்னோ அழகு சாதனங்கள்
## எல்லா வயதினருக்கும் மிகச் சிறந்தது

சத்து மிகுந்த மூலப்பொருள்களால் விசேஷமாகத் தயாரிக்கப்பட்ட ஆப்கன் ஸ்னோ, மேனியை இயற்கையாகவே மழமழப்பாகவும் சுருக்கம் விழாமலும் பாதுகாக்கிறது. உங்கள் மேனி மிருதுவாகவும், பிரகாச மாகவும் இருக்க உதவுகிறது. நாள் முழுதும் நீடித்த அழகுடன் இருப்பதோடு மேனி இயற்கையான பொலிவோடு விளங்குகிறது.

ஆப்கன் முகப் பவுடர், கிரீம், லிப்ஸ்டிக் உங்களுக்குப் பிடித்தமான கலர்களில் கிடைக்கும். ஆப்கன் நகப் பாலிஷ் உங்கள் கைகளுக்கு ஒரு புதிய அழகை உண்டாக்குகிறது.

**ஆப்கன் ஸ்னோ** அழகு சாதனங்கள்



ஈ. எஸ். படான்வாலா, பம்பாய்-77 (இந்தியா)

# தலைவலியா?

# அவேதன்

## சாப்பிட்டு உடனடியாக நிவாரணம் பெறுங்கள்

SQUIBB

SARABHAI CHEMICALS

ⓡ இ. ஆர். ஸ்க்விப் அண்ட் ஸன்ஸ் இன்கார்ப்பொரேடட் அவர்களின் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்தாகும். காம்சந்த் ப்ரேம்சந்த் ப்ரைவேட் லிமிடெட் இதை உபயோகிக்க உரிமைபெற்றவர்கள்.

அற்புத 'எபேப்' அடங்கிய அவேதன தலைவலி, ஜலதோஷம், ஃப்ளூ மற்றும் இதர சாதாரண வலிகளிலிருந்தும் நோவுகளிலிருந்தும் துரிதமான, தீமையற்ற, நிச்சயமான நிவாரணத்தை அளிக்கிறது.

Shilpi SC 51A/67 Tam

# சங்கர்
பிராண்ட்
# சிமெண்ட்




ஏகோபித்த
முடிவு.

உறுதியின் இருப்பிடம்.
தரத்தின் பிறப்பிடம்.

அனுமதிச்சீட்டு இல்லாமல்
உடனே சுலபமாகக் கிடைக்
கிறது. இன்றே கட்டுங்கள்
உங்கள் வீட்டை.

இந்தியா சிமெண்ட்ஸ் லிட்.
மத்ருஸ்-2
தொழிற்சாலைகள்:
சங்கர்நகர்
சங்கரி



# கல்கி

## பொருளடக்கம்

கீலக புரட்டாசி 20 :: அக்டோபர் 6


| | |
|---|---|
| காந்தியடிகளின் நூற்றாண்டு | 11 |
| என்ன சேதி? | 12 |
| ராஜாஜியின் கருத்துக்கள் | 16அ |
| மறுபடியும் வெல்லும் | 16ஆ |
| பொன்னியின் செல்வன் | 18 |
| வாஸவேச்வரம் | 31 |
| மகாபாரதம் | 34 |
| ஒலிம்பிக் கிராமம் ! | 38 |
| சினிமா சிந்தனை | 40 |
| இனிக்கும் நினைவுகள் | 44 |
| ஒட்டும் இரண்டு உள்ளங்கள் | 57 |
| ஒரு பொய் (நாடக விமரிசனம்) | 61 |
| பொன்னிவனத்துப் பூங்குயில் | 63 |
| பிணைப்பு (அட்டைப்படக் கதை) | 72 |
| வட்ட மேஜை | 80 |


காட்டு மலரானாலும்
எழில்மிக்க மலர்
— போட்டோ ஜி. என். ரவி.

கல்கியில் வெளிவரும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.




நம்பிக்கை
அழிவதில்லை!

PK



சுதந்திர சிந்தனைக்கு
அனுமதி கிடையாது!

—ருஷ்யாவின்
ஆக்ஞை



PK



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 28 ★ இதழ் 10

# காந்தியடிகளின் நூற்றாண்டு

**நூ**ற்றாண்டு விழா என்பது மகிழ்ச்சி நிரம்பிய திருநாளாக இருக்கவேண்டும், ஆனால் காந்தி ஜன்ம தினத்தின் நூற்றாண்டு நிகழும்போதோ, நம் தேச விவகாரங்களும் சரி, உலக விவகாரங்களும் சரி ஒரேயடியாகச் சீர்கெட்டுப் போயிருக்கின்றன.

ஒவ்வொரு இரவிலும் கனவில் காந்தியடிகளைக் காண்கிறேன். இதற்கு பௌதிக சாஸ்திரத்தில் ஏதேனும் காரணம் இருக்கலாம். அதெப்படி ஆயினும், இது ஓர் அன்றாட நிகழ்ச்சியாக உள்ளது. இவ்வாறு அவரிடம் ஒரு கனவில் நான் சம்பாஷித்ததாகவும், என் கேள்விகளுக்கு அவர் பதில் சொன்னதாகவும் கற்பனை செய்து இனி வரும் பகுதியை எழுதுகிறேன்.

நான் காந்திஜியைக் கேட்கிறேன்: ''பாபு, இந்தியாவின் விவகாரங்களை நிர்வகிக்கும் பொறுப்பை இப்போது நீங்கள் எடுத்துக் கொள்வீர்களா? இங்குள்ள நிலைமையைச் சீர்திருத்துவீர்களா?''

காந்திஜி பதில் சொல்கிறார்: ''மாட்டேன் நண்பரே! என்னால் இன்றுள்ள நிலைமையைச் சீர்திருத்த முடியாது. ஆம், என்னாலுமே கூட முடியாது. எல்லாம் என் வழிக்கு மாறாக நடந்துவிட்டன; தவறான வழியில் வெகு தூரம் சென்று விட்டன.''

''பாபு, உங்களைப் பலவந்தப்படுத்தி, இந்திய நிருவாகப் பொறுப்பை உங்களிடம் கொடுப்பதாக வைத்துக் கொள்வோம். அப்போது என்னசெய்வீர்கள்?''

''பலவந்தப்படுத்துவதா? என்னால் இயலாத காரியத்தில் என்னை எதற்காகப் பலவந்தப்படுத்த வேண்டும்? இருந்தாலும், அப்படி ஒரு சந்தர்ப்பம் ஏற்பட்டால் என்ன ஆகும் என்று சொல்கிறேன். நான் இந்தியாவுக்குத் திரும்பி வந்து, பொறுப்பேற்றுக் கொண்டால், இந்திய மக்களோடு போர் தொடுப்பேன். ஐம்பது ஆண்டுகளுக்கு முன், பிரிட்டிஷாரை எதிர்த்துச் செய்யப்பட்ட போராட்டத்துக்குத் தலைமை தாங்கினேன் அல்லவா? இப்போது இந்திய மக்களையே எதிர்த்து அந்தக் காரியத்தைச் செய்வேன்.''

''எனக்குப் புரியவில்லை. இந்தியாவிலிருந்து வெள்ளைக்காரர்களை வெளியேறச் செய்வதற்காக அன்று போராடினீர்கள். இப்போது இந்திய மக்களை எதற்காக எதிர்த்துப் போராடுவீர்கள்?''

''இந்திய மக்களை நேர்மையானவர்களாகச் செய்வதற்கே போராடுவேன். அவர்கள் பரஸ்பரம் ஒருவரையொருவர் கொள்ளையிடக் கூடாது; அதற்குப் பதிலாக கொள்ளை கொடுக்கவும் ஆர்வமாயிருக்கும் இயற்கையை கொள்ளையிட்டுப் பொருள் உற்பத்தி செய்ய வேண்டும். திருட்டு எண்ணங்களை மறந்து மக்கள் உற்பத்திக்காக உழைக்க வேண்டும். இதுவே நான் தருகிற மந்திரம். இதற்காகவே நான் போராடுவேன்.''

''அப்படியானால் இப்போது நம் மக்கள் நேர்மையாக இல்லையா?''

''நீங்கள் இப்படிக் கேட்பது எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது. இப்போது இந்தியா முழுவதும் ஒழுங்கீனம் பரவியில்லையா? இந்தியாவின் கஷ்டங்களுக்கெல்லாம் மூலம் நேர்மைக் குறைவுதான். இது மாறி, இந்தியாவின் சூழ்நிலையைத் தூய்மையாக்க வேண்டும்.''

''அது முடிகிற காரியமா?''

''நான் நம்பிக்கையை விட்டுவிடமாட்டேன். மீண்டும் மக்கள் நேர்மைக்குத் திரும்புவது, அவர்கள் தங்களுடைய இயற்கைக்கே திரும்பிக் கொள்வதுதான். அப்படித் திருப்பும் போராட்டம் மிகவும் கடுமையானது என்பதில் ஐயமில்லை. நேர்மை வந்தால், அதோடு நன்றாக உழைக்கும் மனப்பான்மையும் வரும். முன் போராட்டத்தில் மக்களைச் சிறைக்குப் போகுமாறு செய்வது எளிதாக இருந்தது. சிறைக்குப் போவதைவிட உண்மையாக உழைப்பது கடினம். இந்தியாவில் ஒவ்வொருவரும் தன்னால் முடிந்த மட்டும் கடுமையாக உழைத்தாலன்றி அதன் 'இன்ஸால்வென்ட்' நிலையிலிருந்து விமோசனம் கிடைக்காது. இந்

தியாவிலிருந்து ஒழுங்கீனத்தை ஒழித்தாலன்றி தேசத்தைக் காப்பாற்ற முடியாது.''

''இன்ஸால்வென்ட் பற்றிச் சொன்னதால் கேட்கிறேன்: நம்முடைய அந்நியக் கடன்களைப் பற்றி என்ன சொல்கிறீர்கள்?''

''நமக்குக் கடன் தந்துள்ள அயல் நாடுகள், கடன்களை ரத்து செய்துவிட வேண்டும் என்று அவர்களைக் கேட்டுக் கொள்வேன். இந்தியா இன்ஸால்வென்ட் நிலைக்கு வந்துவிட்டது என்பதை அந்த நாடுகள் பகிரங்கப்படுத்தி, கடன்களை ரத்துசெய்துவிட்டு நம் தேசம் மறுபடியும் ஒரு நல்ல தொடக்கம் செய்வதற்கு வாய்ப்புத் தர வேண்டும்.''

''நம் அண்டை நாடுகளான பாகிஸ்தான் முதலியன நம்முடைய நண்பர்களாவதற்கு நீங்கள் என்ன செய்வீர்கள்? இப்போது பாகிஸ்தானுக்கும் நமக்கும் இடையே நம்பிக்கையின்மையும், துவேஷ எண்ணமும் தான் வளர்க்கப்படுகின்றன. காச்மீரப் பிரச்னையோ நகர்த்த முடியாத முட்டுக் கட்டையாகி விட்டது.''

''பொய்யை நாம் விலக்கினோமாயின் எந்த முட்டுக்கட்டையையும் நகர்த்திவிட முடியும். காச்மீர விவகாரம் தீராமல் இருப்பது வாஸ்தவம். மதத்தின் அடிப்படையில் மற்ற எல்லைப் பகுதிகளை வகுத்த வகையில், காச்மீரத்தையும் செய்ய வேண்டும் என்று பாகிஸ்தான் விரும்புகிறது. இந்தியா அதை எதிர்க்கிறது. 'காச்மீர மகாராஜா காச்மீரத்தை இந்தியாவுக்குக் கொடுத்துவிட்டபடியால் அது இந்தியாவைச் சேர்ந்தது. அதை இப்போது மாற்றக் கூடாது' என்பது இந்தியாவின் கட்சி. இந்தப் பிரச்னையை நாம் தைரியமாகவும், சத்தியமாகவும் ஏற்றுக் கொண்டு சிக்கலைத் தீர்க்க வேண்டும். இது காச்மீரம் என்ற நிலப் பரப்பை ஆளுவது பற்றிய பிரச்னை அல்ல, காச்மீர மக்களுடைய சுகமும் முன்னேற்றமும் சந்தோஷமும் பற்றிய பிரச்னை.''

''நம்முடைய சர்க்காரின் செலவினங்களைப் பற்றி என்ன எண்ணுகிறீர்கள்?''

''சர்க்காரின் செலவினங்கள் மிகவும் உயர்ந்திருக்கின்றன. அதைச் சரிக்கட்டுவதற்காக வரிச் சுமையும் மிகவும் பளுவாக்கப்பட்டிருக்கிறது. இரண்டையும் குறைக்க வேண்டும். என்னை அதிகம் கேள்வி கேட்காதீர்கள். முக்கியமான விஷயம், மக்கள் நேர்மையுடன் நடப்பதற்குப் போராட்டம் நடத்துவதுதான். முதல் போடுகிறவர்கள், தொழிலாளிகள் ஆகிய இரு சாராரும் பாடுபடாமல் அலட்சியமாக இருப்பதை ஒழிப்பதற்கு நாம் போராட வேண்டும். இவ்விரு சாராரிடையே பூசல் இருக்கக் கூடாது. கடும் உழைப்பையே இருவரும் பிரமாண வாசகமாகக் கொள்ள வேண்டும். நேர்மைக்காகவும், உழைப்புக்காகவும் முதலில் போராட வேண்டும். பிறகு மற்றதெல்லாம் தானே சரியாகும்.''

''காங்கிரஸ் கட்சியை நீங்கள் என்ன செய்வீர்கள்? நீங்கள் கொல்லப்படுவதற்கு முன்னால் கடைசியாகக் காங்கிரசுக்குக் கூறிய யோசனையை இப்போதும் கூறுவீர்களா?''

''ஆம், அன்று நான் சொன்னது போலவேதான், இப்போதும் காங்கிரஸ் ஆட்சியதிகாரத்தை விட்டுவிட வேண்டும் என்கிறேன். நான் எதிர்பார்த்தது போலவே ஆட்சியதிகாரம்தான் காங்கிரசைக் கெடுத்துவிட்டது. அதிகாரத்திலிருந்து காங்கிரஸ் விலக வேண்டும் என்று நான் சொன்ன யோசனைக்கு முன்னைவிட இப்போது அதிகக் காரணங்கள் ஏற்பட்டிருக்கின்றன. அதற்குப் பதில் கட்சிப் பற்றற்ற அறிஞர்களின் குழு ஆட்சிப் பொறுப்பில் அமர வேண்டும்.''

''அரசியல் சாஸனத்தில் இதற்கு வழி இல்லையே!''

''வாஸ்தவம். நான் விரும்புகிற போராட்டத்துக்கு அரசியல் சாஸனத்தில் இடமில்லை. ஆனால், அதனால் என் பணி பாதிக்கப்படாது. சில பிரமைகள் மீது அரசியல் சாஸனம் வகுக்கப்பட்டது. இன்று என்னைப் பொறுப்பேற்றுக் கொண்டு போராடுமாறு கேட்டுக் கொண்டால், முதல் நடவடிக்கையாக தேசத்தின் நிருவாகத்தில் மேற்கண்ட மாறுதல் ஏற்பட வேண்டும் என்பதையே வலியுறுத்துவேன்.''

**(ராஜாஜி 'ஸ்வராஜ்யா'வில் எழுதியது)**

# என்ன சேதி?

## ■ ஓவியர்மணியை இழந்தோம்!

இவ்விதழ் அச்சாகிக் கொண்டிருக்கையில் பெரும் துயரச் செய்தி கிடைத்துள்ளது. ஓவியர் மணியத்தின் உயிரைக் காலன் கொண்டேகி விட்டான். கல்கிப் பத்திரிகையின் வாயிலாக நெடுங்காலம் ஓவியப்பணி புரிந்து சைத்திரர்களின் திலகமாகத் திகழ்ந்தவர் திரு மணியம். நமது பண்டைக் கலைப் படைப்புக்களைப் பொலிந்தெழுதியதோடு, அந்த தெய்விக மரபை அடியொற்றித் தாமாகவும் அற்புதச் சித்திரச் செல்வம் படைத்தவர் அவர். அவரது மறைவு ஓவியருலகின் ஈடு செய்ய இயலாத இழப்பாகும். அவருடைய குடும்பத்தினருக்கு நம் நெஞ்சார்ந்த அநுதாபங்களை அளிக்கிறோம். ■ ■ ■

## உண்ணாவிரதம் நின்றது

திரு எஸ். என். ஜோஷி அவர்கள் தமது உண்ணாவிரதத்தை நிறுத்திக் கொண்டார். மத்திய சர்க்கார் ஊழியர்கள், வேலை நிறுத்தம் செய்த போது, தில்லியிலும் இன்னும் பல இடங்களிலும் நடைபெற்ற போலீஸ் அர்ப்பாட்டத்தை எதிர்த்துத்தான் உண்ணாவிரதம் தொடங்கினார்.

வேலை நிறுத்தம் பற்றி மத்திய சர்க்கார் ஊழியர்களிடையிலேயே ஆதரவு கிடையாது. பொதுமக்களின் ஆதரவு அறவே கிடையாது. இந்த ஒரு விஷயத்திலாகிலும் சர்க்கார் உறுதியாக நின்றார்களே என்று பொதுமக்கள் பாராட்டிக் கொண்டிருந்த போது, திரு எஸ். என். ஜோஷி அவர்களின் உண்ணா



# கிளிஞ்சல் கோபுரம்

ஜெகசிற்பியன் எழுதும் புதிய சமூக நாவல்

**கல்கி**

20.10.68 சிறப்பிதழில்

ஆரம்பமாகிறது

விரதம் பொதுமக்களிடை எவ்வித சல சலப்பையும் ஏற்படுத்தாமல் போனது வியப் பில்லை. எனினும் பொதுமக்களின் மனோ பாவம் எப்படியிருக்கிறது என்பதை உணர்ந்து காலாகாலத்தில் உண்ணாவிரதத்தை முடித் துக் கொண்டு, உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தை அவருக்கு அளித்த கடவுளுக்கு நன்றி செலுத்த வேண்டும்.

உண்ணாவிரதம் மிக உயர்ந்த ஆயுதம். அதை காந்திமகான் போன்ற ஒருவரால் நாட்டுக்கு உதவுகிற வகையில் பயன்படுத்த முடியும். மற்றவர்கள் வேறு முறைகளைத் தான் கையாள வேண்டும்.

## மாணவர்களின் பாரத தரிசனம்

தொழில் துறையில், வியாபாரத் துறை யில் ஈடுபட்டுள்ள, நாற்பது வயதுக்குட்பட்ட இளைஞர்களைக் கொண்ட சங்கம் ''ஜூனியர் சேம்பர்'' என்பது. இது உலகம் முழுவ திலும் வியாபித்துள்ளது. சென்னையிலுள்ள இந்த இளைஞர் சங்கத்தினர் ஒரு நல்ல காரியம் செய்திருக்கிறார்கள். கல்லூரி மாணவர்களிடையே தேசிய ஒருமைப் பாட்டை வளர்க்க, பன்னிரண்டு மாணவர் களைப் பல்வேறு கல்லூரிகளிலிருந்து தேர்ந் தெடுத்து, பன்னிரண்டு நாட்கள் உத்தர பிரதேசத்தில் காசி, அலகாபாத், மிர்ஸாபூர் ஆகிய ஊர்களில் தங்கி அப்பகுதி மக்களோடு பழகவும், தமிழக பண்பாட்டை அப்பகுதி மக்களுக்கு உணர்த்தவும் வாய்ப்பளித் திருக்கிறார்கள். இம்மாணவர்கள் மேற்குறிப் பிட்ட ஊர்களிலுள்ள ஜூனியர் சேம்பர் அங்கத்தினர்களின் விருந்தினராகத் தங்க ஏற் பாடு செய்திருக்கிறார்கள். இப்படி இளைஞ ரிடையே பாரத ஒருமைப்பாட்டை உணர்த்த எடுத்துக் கொண்ட இந்த நல்ல பணிக்கு ஆகும் முழுச் செலவையும் ஏற்க வழக்கம் போல் டி. வி. எஸ். ஸ்தாபனத்தினர் முன்வந் திருக்கின்றனர். சென்ற 22ந் தேதி புறப் பட்ட மாணவர்களும் அவர்களை இட்டுச் செல்லும் திரு வேங்கடாசலம் அவர்களும் அக்டோபர் 6ந் தேதி திரும்புகிறார்கள்.

## தேசிக பவனம்

''நாவிலமுந்தான் வாழ, நான்மறைகள் தாம் வாழ, மாநகரின் மறை வாழ, ஞானி யர்கள் சென்னியணிசேர் தூப்புல் வேதாந்த தேசிகரே, இன்னுமொரு நூற்றாண்டிரும்'' என்று ஸ்ரீ வைஷ்ணவ சமூகம் நாள் தோறும் ஸ்ரீ வேதாந்த தேசிகரை வாழ்த்து கிறது. அவரது அவதாரத்தின் ஏழாவது நூற்றாண்டு விழாவை மிக விரிவான முறை யில், அதற்குரிய முக்கியத்துவத்துக்கு முற்றி லும் தகுந்த வகையில் கொண்டாட விழாக் கமிட்டி நிறுவப்பட்டு விழாக் கொண்டாடு கிறது. மயிலாப்பூர் வெங்கடேச அக்ரஹாரத் தில் ஸ்ரீ வேதாந்த தேசிகர் தேவஸ்தானம் அளித்துள்ள மனையில் பிரத்தியேகமாக ஒரு மணிமண்டபம் எழுப்பப்பட்டுள்ளது. இந்தப் புனிதப் பணியை ஸ்ரீமான் சுதர்சனம் அய்யங்கார் ஏற்றுக் கொண்டிருக்கிறார். தேசிகரின் நூற்றுக்கு மேல் உள்ள ஸம்ஸ் கிருத, தமிழ், மணிப்பிரவாள நூல்கள் அனைத்தையும் ஒவ்வொன்றாக வெளியிட்டு தேசிகரின் சித்தாந்தங்களைப் பரப்ப ஒரு வித்யாகேந்திரமாக இது அமையப் போகி றது. தினந்தோறும் காலையில் ஹோமங்களும் மாலையில் அகில இந்திய விசிஷ்டாத்வைத மகாநாடுகளும், கருத்தரங்குகளும், வித்வத் சதஸ்ஸும் செப்டம்பர் 27ந் தேதி முதல் அக் டோபர் 4ந் தேதி வரையில் தேசிகர் மண்ட பத்தில் அமோகமாக நடைபெறுகின்றன. திரு வி. டி. ரங்கஸ்வாமி அய்யங்கார் மேற் பார்வையில் இக்காரியங்கள் நடக்கின்றன. மக்களின் நல்வாழ்வுக்கும் நாட்டின் அமை திக்குமே இந்த யக்ஞங்கள் நடத்தப்படுகின் றன. இந்த இதழ் உங்கள் கையில் கிடைக்கும் போது விழா வெகுவாகப் பூர்த்தியடைந்து கொண்டிருக்கும். சென்னை வாசகர்கள் இம் மகோற்சவத்தில் கலந்து கொண்டு உயர்ந்த எண்ணங்களில் உள்ளத்தைச் செலுத்தலாம்.

## மகாத்மா மணிமொழி



கடவுள் என்பது பூரணமான ஒரே பொருள் என்று நம்புகிறேன். எனவே, மனித குலம் முழுவதும் ஒன்றே என நம்புகிறேன். நமக்கு உடல்கள் பலவாக இருந்தால் என்ன? நம் அனைவருக்குமாக இருப்பது ஒரே ஆன்மா தான். ஒளிச் சிதறலினால் சூரிய கிரணங்கள் பலவாக இருப்பினும், அவை அனைத்துக்கும் ஆதாரச் சுனை ஒன்றேதானே ?

இதனால்தான் என்னால் மிகக் கொடிய ஜீவன் ஒருவ னிடமிருந்தும் என்னைப் பிரித்துக் கொள்ள முடியவில்லை. அதே போல், பரமசீலராக உள்ள ஒருவரிடம் நான் கொண்டுள்ள ஐக்கிய உணர்வையும் மறுப்பதற்கில்லை. ஆகையால் நான் விரும்பிச் செய்தாலும் சரி, விரும்பா மலே செய்தாலும் சரி, என்னைப் பரிசோதித்துப் பார்த் துக்கொள்ளும்போது, அப்பரிசோதனையில் மனித குலம் முழுவதையுமே ஈடுபடுத்த வேண்டியவனாக இருக் கிறேன். இந்தப் பரிசோதனைகள் இன்றி என்னால் வாழ முடியாது. வாழ்வு என்பதே முடிவில்லாத பரி சோதனைகளின் தொடர்தானே ?

தீபாவளிக்கு

# ராசி

புதிய

ஸ்பெஷல் கலர்கள்

## ரூபி, ஃபிளேம்

புதிய ஸ்பெஷல் டிசைன்கள்

## பாம்பீச், காண்டி ஸ்டிரைப்

அல்லது

## கட்டம்

பாம்பீச் அல்லது காண்டி ஸ்டிரைப்
அல்லது கட்டம் டிசைன் ராசி பட்டுப் புடவைகள்
ஒளி மிகுந்த ரூபி அல்லது ஃபிளேம்
நிறங்களில் கிடைக்கும்.

பனாரஸ் பட்டுப் புடவைகளும்
பல நூதன டிசைன்களில் இருக்கின்றன.



**ராதா சில்க் எம்போரியம்,**
14, சன்னதித் தெரு, மைலாப்பூர், மதராஸ் 4.

**ராதா சில்க்ஸ்,**
தன் பில்டிங்ஸ், மவுண்ட் ரோடு, மதராஸ்-2.

**ராதா சில்க் எம்போரியம்,**
வெஸ்டர்ன் இந்தியா ஹவுஸ்,
ஸர் பிரோஸ்ஷா மேத்தா ரோடு, பம்பாய்-1.



தீபாவளி வரை எல்லா
ஞாயிற்றுக்கிழமைகளிலும்கூட எங்கள்
விற்பனை நிலையங்கள் திறந்திருக்கும்.

# இதயத்தில் ஒரு இடம் இருக்கட்டும்...

... இந்த கரோல் தயாரிப்புகளுக்கு










- பான் ஸாயிர் ஸெண்ட்—
  இரவும் பகலும் உங்கள் பிரியத்திற்கு உரியது. இன்மணம் பரப்புவது.
- மூஸி யு-டி-கொலோன்—
  எந்நேரமும் குளிர்ச்சியுடன் அனுராகம் புரிவது.

அடோனிஸ்-ஆப்டர்-ஷேவ் லோஷன்—
க்ஷவரத்திற்குப்பின் முகமென்மையைக் காத்து நாள் முழுவதும் புத்துணர்ச்சி அளிப்பது.

ஐரோப்பிய சுகந்தங்களை பயன்படுத்தி இந்தியாவில் பிரத்யேகமாகத் தயாரிப்போர் :

**கரோல் காஸ்மெடிக்ஸ்,**
ஹைதராபாத்-28.

FDSKK 1005TM

# ராஜாஜியின் கருத்துக்கள்

ஸ்ரீ சவான் மட்டும் பலவீனத்துக்கு இடம் தந்து, மத்திய சர்க்கார் ஊழியரின் 'அடையாள' வேலை நிறுத்தம் தடையுறாமல் நடக்க அநுமதித்திருந்தால், இப்போதிலிருந்து கம்யூனிஸ்ட்களின் தயவிலேயே இந்திய அரசாட்சி நடக்க வேண்டியிருந்திருக்கும். தேர்தல்களில் எந்தக் கட்சி வென்றாலும் தோற்றாலும் கம்யூனிஸ்ட்களின் ஆதிக்கம் ஏற்பட்டிருக்கும். நாச வேலையைப் பற்றி நினைக்காமல் சம்பள உயர்வைக் கருதியே ஊழியர்களில் பலர் வேலை நிறுத்தத்தை விரும்பியிருக்கக்கூடும். என்றாலும் இவ்விவகாரத்தில் இலட்சியத்தைவிட, அதற்கான உபாயத்துக்கு அதிக முக்கியத்துவம் உண்டு. வேலை நிறுத்தம், உத்தேசித்தவாறே நடந்திருந்தால் கம்யூனிஸ்ட்கள் தமது பலத்துக்கே அது ஒரு நிருபணம் என்று உரிமை கொண்டாடியிருப்பார்கள். இவ்விதக் கம்யூனிஸ ஆபத்தைத் தவிர்க்க ஒரே வழி, சட்டபூர்வமாகச் சர்க்கார் ஊழியரின் வேலை நிறுத்தத்தைத் தடை செய்வதும், தொழிற் சங்கத் தந்திரங்களைக் கையாளுவதில்லை என்று ஒவ்வொரு அரசாங்கச் சிப்பந்தியிடமும் வாக்குப் பெறுவதும்தான்.

ஃஃஃ

லாட்டரி எல்லா இடங்களுக்கும் பரவி வருகிறது. சூது மனப்பான்மை எவ்வளவு வேகமாக, விஸ்தாரமாகப் பரவி வருகிறது என்பதே என் ஆட்சேபணையில் உள்ள நியாயத்தை நிரூபிக்கிறது. கடும் உழைப்பும் சிறு சேமிப்புக்களும் பெருக வேண்டிய சமயத்தில், தேசத்தின் இத்தேவைகளுக்கு எதிர்த் திசையில் செல்கின்றன லாட்டரியும், கள்ளுக் கடைத் திறப்பும். கள்ளுக் கடைகளும், 'ஜாக்பாட்'டும், சர்க்காரின் லாட்டரிகளும் பெருவாரியாக மக்களை ஆகர்ஷிப்பதால், ஜனநாயகப்படி இவை நியாயமானவையே என்று மக்கள் கற்பனை செய்தால் நான் ஆச்சரியப்படமாட்டேன். உண்மையில், நெறியீனமான காரியம் வேகமாக, விஸ்தாரமாகப் பரவுவது ஓர் எச்சரிக்கையேயன்றி, சமாதானமாகாது.

ஃஃஃ

மேற்கு ஜெர்மனியில் மீண்டும் ஓர் அற்புதப் பொருளாதார முன்னேற்றம் ஏற்பட்டு வருகிறது. வியாபாரம் மேலும் செழித்து வருகிறது. மக்கள் அனைவருக்கும் தொழில் கிடைத்துள்ளது. விலைகள் ஏறாமல் ஒரே மட்டத்தில் உறுதியாக்கப்பட்டிருக்கின்றன. தொழில் அதிபர்கள், தொழிலாளர்கள், சர்க்கார் மூவரும் ஒத்துழைத்து, உற்பத்திச் செலவைக் கட்டுப்படுத்தியிருப்பதாலேயே இந்த நல்ல விளைவு ஏற்பட்டுள்ளது. விஷயங்களைப் புரிந்து கொண்டு, ஒத்துழைப்பதில் ஜெர்மனித் தொழிலாளர்கள் விசேஷமான ஆற்றல் பெற்றிருப்பதாகச் சொல்லப்படுகிறது. அவர்கள் தாமாகவே ஊதிய உயர்வுகளை மறுத்து, ஓர் எல்லைக்குட்படுத்திக் கொண்டனர். ஊதியம் உயர்ந்தால், உற்பத்திச் செலவு உயர்ந்து, விலைவாசியும் உயரும்; இச்சந்தர்ப்பத்தில் சர்க்கார் எடுக்கும் நடவடிக்கையால் பணவீக்கம் ஏற்பட்டு, விலை உயர்வு அதிகமாகும் என்கிற ஆபத்தான நிலவரத்தைப் புரிந்து கொண்டு, அதற்கு அஞ்சி நடக்கின்றனர் ஜெர்மனித் தொழிலாளர். இவ்வாறு பிரபலப் பொருளாதார அறிஞர்கள் அந்நாட்டுத் தொழிலாளர்களுக்கு நற்சான்று தருகிறார்கள். சென்ற ஆண்டிலிருந்து அங்கு ஊதியங்கள் ஐந்தே சதவீதம்தான் உயர்ந்துள்ளன. ஐரோப்பாவிலேயே இதுதான் மிகக் குறைந்த உயர்வு. இதே போதில் ஜெர்மனியில் உற்பத்தியோ பத்து சதம் பெருகியுள்ளது. வியாபாரத்தில் 1967 முதல் பாதியில் இருந்ததைவிட அதன்பின் இருபத்தைந்து சதம் அதிக லாபம் கிடைத்திருக்கிறது. தொழில்கள் வளருகின்றன. புதுத் தொழிற்சாலைகள் உருவாகின்றன. பழைய தொழிற்சாலைகளில் புதிய தொழில் நுணுக்கங்கள் புகுத்தப்பட்டு அவை நவீனமாக்கப்படுகின்றன.

ஃஃஃ

'ஹிந்து கலாசாரத்தின் வேர் ஹிந்து மதத்தில் உள்ளது. எனினும் ஹிந்து கலாசாரமும் ஹிந்துமதமும் ஒன்றே எனலாகாது' என்று இந்தியாவின் முன்னாள் பிரதம நீதிபதி ஸ்ரீ கோகா சுப்பாராவ், சமீபத்தில் பெங்களூரில் நடந்த ஆர். எஸ். எஸ். விழாவில் கூறியிருக்கிறார். சரியான கருத்து. வேதங்கள், உபநிஷதங்கள், பகவத் கீதை, இதிகாசங்கள் இவற்றிலிருந்து பரிணமித்த ஹிந்து கலாசாரம், இந்தியாவெங்கிலும் வாழும் எல்லா மக்களின் நடத்தைகளிலும், பழக்க வழக்கங்களிலும், பண்டிகைகளிலும், வாழ்முறைகளிலும் பிரதிபலிக்கிறது. இந்தியா முழுதும் இந்தக் கண்ணோட்டத்தோடு யாத்திரை செய்தால் சிறந்த அநுபவம் பெறமுடியும். பஞ்சாபோ, ராஜஸ்தானமோ, தென்னிந்தியாவோ — இந்தியாவின் எந்தப் பகுதிக்கு நீங்கள் சென்றாலும் சரி, எந்தக் கிராமத்துக்குச் சென்றாலும் சரி, ஒரே கலாசாரத்தை, ஒரே வாழ்க்கை வழியைத்தான் காண்பீர்கள். மதங்கள் பலவாக இருப்பதைச் சகிப்புத் தன்மையுடன் ஏற்றுக் கொள்வதே ஹிந்து கலாசாரத்தின் மகத்தான அம்சம்.

இந்தக் கலாசாரத்தை 'ஹிந்து கலாசாரம்' என்று சொல்லாமல் 'இந்திய கலாசாரம்' என்று அழைத்தால் தேச ஒற்றுமைக்கு அது அதிகம் உதவும். 'ஹிந்து கலாசாரம்' என்ற சொற்றொடர் மற்ற மதஸ்தரில் பெரும்பாலோருக்கு ஏற்கத் தக்கதாக இராது.

ஃஃஃ

சோவியத் எல்லைக்கு அப்பாலுள்ள நாடுகளுக்கு ஏவுகணைகளை எய்வதற்காகப் படைகளை ருஷியா பயிலுவித்து வருகிறது என பிரிட்டனின் யுத்த தந்திர ஆராய்ச்சிக் கழக அறிக்கை கூறுகிறது. தூர தேசங்களுக்கு ஆயுதம் எய்யும் திறனில் தற்போது அமெரிக்காவுக்கு ருஷியா பின்தங்கியிருக்கிறது; ஆனால் அடுத்த ஒரு சில மாதங்களிலேயே இந்த நிலை மாறிவிடும் என அந்த அறிக்கை தெரிவிக்கிறது.



நேற்று மாலையில் போட்ட அழுகுணித் தூற்றலில் நனைந்து கொண்டே கடைத் தெருவிலிருந்து திரும்ப வந்தார் குப்பண்ணு. அதற்கா உடம்பு இப்படிப் பற்றிக்கொண்டு விட்டது? இதைவிடப் பேய் மழையில் மைல் கணக்காய் நனைய நனைய நடந்தபோது அவருக்கு ஒரு தும்மல் கூட வந்ததில்லையே?

அவர் செட்டியார் கடைக்குப் போகும் போது கூட்டம் அதிகம். குப்பண்ணுவைக் கண்டதும் கூட்டம் ஒதுங்கி வழி விட்டு நின்றது. அங்கு மட்டுமல்ல. ஊர் முழுதுமே அப்படித்தான். எல்லோருடைய மரியாதைக்கும் அவர் எப்படியோ காரணமாகிவிட்டார். இவ்வளவுக்கும் அவர் பெரிய பணக்காரரோ புகழ் பெற்ற அரசியல்வாதியோ அல்ல.






# மறுபடியும் வெல்லும்

வெள்ளை மலராய்ப் பொழுது வெளுத்த பிறகும்கூடக் குப்பண்ணு படுக்கையை விட்டு எழுந்திருக்கவில்லை. படுக்கை என்றால் பிரமாதமாக ஒன்றும் இல்லை. ஒரு தலை உயரக் கட்டை, மேல் துண்டு.

உடம்பை என்றுமே ஒரு பொருட்டாக அவர் நினைத்ததில்லை. உடம்பு ஒரு சாதனம் தான். காரில் ஏறுகிறோம். நினைத்த இடத்துக்குப் போகிறோம். அதற்காகக் காரைத் தலையில் தூக்கி வைத்துக் கொண்டு ஆட முடியுமா? அதைப் போலத்தான் உடம்பும். அதை ஆளலாம். ஆளவிடக் கூடாது.

குப்பண்ணுவின் உடம்பையும் குறை சொல்ல முடியாது. அவர் பசியால் வருந்திய போதும் மழை, வெய்யில் என்று இழுத்தடித்தபோதும், 'தலைவலி' என்றுகூட அவர் உடம்பு சுணங்கியதில்லை. அப்படிப்பட்ட உடம்புக்கு என்ன கேடு வந்தது?

குப்பண்ணு நெற்றியில் கைவைத்துப் பார்த்தார். கனல் பொறிகிறது. குளிர் இரத்த நாளங்களை ஊடுருவிப் பாய்கிறது. தரையிலிருந்து யாரோ கிளப்பி விடுகிற மாதிரி உடல் தூக்கித் தூக்கிப் போடுகிறது.

சாதாரண புரோகிதர். லோகாயதக் காரியங்களில் இச்சைப்பட்டு உலகமே சந்தைக் கூச்சல் போட்டுக் கொண்டிருக்கும்போது, அதிலிருந்து விலகிக் கோபுரமாய் உயர்ந்து நிற்கும் குப்பண்ணுவை ஊரே வழிபட்டு நின்றது. அவர் அவர்களிலிருந்து விலகி நின்றாலும் யாரையும் வெறுக்கவில்லை. எந்தக் காட்டையோ தேடிப் போய் ஒளிந்து கொள்ளவும் இல்லை. சேற்றில் போய்க் கொண்டிருக்கும் மனிதர்களை இன்னும் ஆழத்தில் மறைந்துவிடாமலிருக்கத் தர்மங்களையும், கர்மாக்களையும் நினைவு படுத்துவதற்குக் குப்பண்ணு, அவர்கள் பக்கலில் நின்று சதா குரல் கொடுத்துக் கொண்டிருக்கிறார். அவர்கள் வழியில் கிடக்கும் முள்ளையும் கல்லையும் அகற்றிப் புனிதப்படுத்தும் திருத்தொண்டர் அவர். அழுக்கிலிருந்து உயர்ந்து ஒளியாய் நிற்கும் அவர் உருவத்தைப் புரிந்து கொண்டு ஊரும் அவருக்கு மரியாதை செலுத்தியது.

வியாபாரத்தில் மும்முரமாக ஈடுபட்டிருந்த செட்டியார், குப்பண்ணுவைக் கண்டதும், எழுந்து நின்று, இரு கரம் கூப்பி,

''வரணும், வரணும்'' என்று உண்மையாகவே குழைந்தார்.

''நீங்க வந்தது தெய்வமே வந்தது போலே இருக்கு. சாமி அப்படி உட்காரணும்!'' என்று மனைப் பக்கமாகக் கையைக் காட்டினார். செட்டியார்.

''பரவாயில்லே. ரெண்டொரு சாமான்கள் வேணும். இப்படியே நின்னு வாங்கிண்டு போயிடறேன்!'' என்று புன்னகைத்த குப்பண்ணு சாமான்களைச் சொல்ல ஆரம்பித்தார். ''சேமியா ஒரு பாக்கெட். திராட்சை, முந்திரிப் பருப்பு நூறு கிராம்.''

பையன் சாமான்களைக் கட்டலானான்.

''யாராவது விருந்தாளிங்க வர்றாங்களா சாமி?'' என்று கேட்டார் செட்டியார்.

அதைப் பற்றி எல்லாம் நாலு பேர் கூடி நிற்கிற இந்த இடத்தில் பேசிக்கொண்டிருப்பானேன்?

''முதலில் வியாபாரத்தைக் கவனிங்கோ. எல்லோரும் காத்திண்டிருக்கா'' என்று கூறிப் பையன் கட்டி வைத்திருந்த சாமான்களைத் துண்டில் எடுத்துக் கட்டிக் கொண்டு, சில்லறையைக் கொடுத்துவிட்டு நடையைக் கட்டினார் குப்பண்ணு.




''இல்லே!''

''பிறகு? பாயசத்துக்குச் சாமான் வாங்கிறீங்களே?''

''நாளைக்குக் காலம்பற என் பிள்ளை வர்றான். கடுதாசி போட்டிருக்கான்.''

''சுப்புணியா வரான்? அவன் எந்த மூகத்தோடே சாமி வர்றான்? உங்க வீட்டுக்கார அம்மாளை எரிச்சிட்டு வந்து ஒரு ராத்திரி கூட ஆகலே. அதுக்குள்ளே அந்த அம்மாவோட மாங்கல்யத்தை எடுத்துக்கிட்டு ராவோடு ராவாக் கம்பி நீட்டிட்டான் அந்தக் காவாலி பய. அதுக்குப் பிறகு நீங்க இருக்கீங்களா, போயிட்டீங்களான்னு ஒரு முறை எட்டிப் பார்த்தானா? அப்படிப்பட்டவனுக்கு நீங்க பாயச விருந்து வச்சு வரவேற்கப் போறீங்களா சாமி?'' என்று ஆத்திரத்தோடு படபடத்தார் செட்டியார்.

குப்பண்ணுவுக்குக் கூசிக் குறுக ஒன்றும் இல்லை. சுப்புணியைப் பற்றி ஊருக்கு நன்றாகத் தெரியும். அவர் நாளெல்லாம் செய்யும் ஜபதபங்களுக்கும், தர்மக் கிரியைகளுக்கும் அப்படி ஒரு பிள்ளை பிறக்கக் கூடாதுதான். பூர்வத்தில் செய்த பாவம், பிள்ளையாக வந்துவிட்டது.

கடை வீதியைத் தாண்டி ஆலமரப் பக்கம் மச்சவீட்டுப் பிள்ளையின் வீட்டு வாசலில் போய்க் கொண்டிருந்தபோது, ''சேவிக்கிறேன்!'' என்ற குரலைக் கேட்டு நின்றார் குப்பண்ணு.

''அவசரமாய்ப் போயிக்கிட்டிருக்கீங்களா சாமி?'' என்று கேட்டுக் கொண்டே எதிரே பவ்வியமாக வந்து நின்றார் பிள்ளை. அவர் தோளிலிருந்த துண்டு நன்றாலேயே நழுவி 'வி' போல் வளைந்த கையிடுக்கில் வந்து விழுந்தது.

''அப்படி ஒண்ணும் இல்லே!'' என்றார் குப்பண்ணு.

''கொஞ்சம் திண்ணை வரைக்கும் வந்துட்டுப் போகலாமோ?''

''பேஷா!'' என்று வாசற்படியில் ஏறி, அரை ஆள் உயரம் இருந்த திண்ணையில் உட்கார்ந்தார் குப்பண்ணு.

பிள்ளை வாசற்படியில் நின்று கொண்டிருந்தார்.

''நீங்கள் நின்னுண்டிருக்கேளே பிள்ளை-வாள்!''

''எப்போதுமே தர்மத்தின் காலடியில் நின்னுக்கிட்டிருக்கணும்தான் நான் ஆசைப் படுறேன். என்னை அநுக்கிரகிப்பீங்களா சாமி?'' என்று கண் கலங்கி நின்றார் பிள்ளை

''நீங்க என்ன சொல்றேள்? புரியவில்லேயே?''

''நீங்க இந்த ஊரை விட்டுப் போறதாக முடிவு செய்திட்டீங்களாமே?...'' மேலே பேச முடியாமல் திணறினார் பிள்ளை.

''உங்களுக்கு யார் சொன்னா?''

''பிரஸிடெண்ட் முதலியார் சொன்னார்.''

சாயங்காலம் நான்கு மணிக்குச் சொன்ன தகவல். இதற்குள் இறக்கை முளைத்து ஊரெல்லாம் பறந்திருக்கிறது!

இந்த ஊரை விட்டு எத்தனையோ பேர் போகிறார்கள், வருகிறார்கள். அதற்கெல்லாம் யாரும் வருத்தப்படுவதில்லை. அப்படி யாராவது வருத்தப்பட்டாலும் இந்தப் பிள்ளை மட்டும் நிச்சயம் வருத்தப்பட மாட்டார். ஆண்டவன் சிரிக்கச் சிரிக்க வாழ்வதற்குத் தேவையான அத்தனை வசதிகளையும் அவருக்குக் கொடுத்திருக்கிறார். அப்படிப்பட்டவர் இப்பொழுது தம்மிடமிருந்த சந்தோஷத்தை எல்லாம் இழந்துவிட்ட மாதிரி கண்கலங்கி நிற்கிறார்.

அவரைக் கனிவுடன் பார்த்துப் புன்னகைத்தார் குப்பண்ணா. ''பிள்ளைவாள்! உங்க வருத்தம் எனக்கு நன்னாப் புரியறது. என்னிடத்திலே நீங்க அபாரமான பிரியம் வச்சிருக்கேள். அதனாலே கண் கலங்கி நிற்கிறேள். இவ்வளவு அன்பு காட்டற உங்களையெல்லாம் விட்டுப் பிரிஞ்சு போறதுக்கு எனக்கும் எவ்வளவோ கஷ்டமாத்தான் இருக்கு. ஆனா வேறு வழி இல்லே. சுப்புணி கடிதாசி எழுதியிருக்கான். இனிமே நான் விருத்தாப்பியத்திலே தனியே கஷ்டப்பட்டுண்டு இருக்கப்படாதுன்னும், நாளைக் காலையிலே அவன் இங்கே வர்றதாகவும், நான் அவன் கூடவே புறப்படணும்னும் எழுதியிருக்கான். இத்தனை காலமா நான் உங்க மாதிரி ஊரிலே உள்ளவா பிரியத்திலே வாழ்ந்துட்டேன். இன்னும் கொஞ்சக் காலம் பெற்ற பிள்ளையின் பிரியத்திலே வாழ என்னை விடுங்கோ!'' என்று கூறிவிட்டு, ஆறாய்க் கண்ணீர் பெருகி நிற்கும் பிள்ளையை ஏறிட்டுப் பார்க்க அஞ்சி, திண்ணையிலிருந்து இறங்கித் தெருவில் நடந்தார்.

''சாமி! கும்பிடுறேன்!''

தலை குனிந்து போய்க் கொண்டிருந்த குப்பண்ணா நிமிர்ந்து பார்த்தார்.

கிறிஸ்தவத் தெருவைச் சேர்ந்த புனித ஆரோக்கியம் பிள்ளை கையைக் குவித்தபடி எதிரே நின்று கொண்டிருந்தார்.

''சௌக்கியமா ஆரோக்கியம் பிள்ளே?''

''இதுவரை சௌக்கியம்தான். இனிமே சௌக்கியமா இருக்க மாட்டேன்னு நினைக்கிறேன்.''

அவருடைய புதிர்ப் பேச்சு குப்பண்ணாவுக்குப் புரியவில்லை. ''இனிமே சௌக்கியமா இருக்க மாட்டேளா? ஏன்?''

''நீங்க ஊரை விட்டுப் போறீங்களாமே சாமி?''

''அதனாலே என்ன? நான் ஊரை விட்டுப் போனா, உங்க சௌக்கியம் ஏன் குறையணும்?''

''தர்மம் ஊரை விட்டுப் போனா எப்படி சாமி சௌக்கியமா இருக்க முடியும்?''

''ஆரோக்கியம் பிள்ளே...'' எதையோ கூற வந்த குப்பண்ணா, அதைக் கூறத் தயங்கியவராய் அவர் முகத்தை ஆச்சரியத்துடன் பார்த்தார்.

''ஏன் சாமி, நடுவிலே நிறுத்திட்டீங்க? நான் கிறிஸ்துவன்தான். ஆனா உங்களுடைய தர்மம் எனக்குப் பகையில்லே. மதங்கள் அநேகம் இருக்கலாம். ஆனா எல்லா மதங்களுக்கும் மூலமாக இருக்கிற தர்மம் ஒண்ணுதான். தர்மத்தை உபாசிக்கிறவன் நான். உங்க மூலமாத்தான் நான் அந்தத் தர்மத்தை உபாசிச்சேன்! எல்லாவற்றுக்கும் ஆணி வேர் தர்மம்தானே சாமி? நாங்களெல்லாம் உங்களைத் தர்மமா வழிபட்டோம். அதனாலே நியாயமாகவும், நேர்மையாகவும் வாழ ஆசைப்பட்டோம். நீங்க ஊரை விட்டுப் போயிட்டா, நாங்க கண்டதுக்கெல்லாம் ஆசைப்படுவோம். பிறகு அந்த ஆசை எங்களையெல்லாம் விழுங்க ஆரம்பிச்சுடும். உங்களைக் கையெடுத்துக் கும்பிடுறேன். எங்களை அநாதையாக்கிட்டுப் போயிடாதீங்க.''

அவர் குரலில் ஊரில் உள்ள அத்தனை குரல்களும், கும்பிட்ட அவர் கைகளோடு சேர்ந்து ஊரிலுள்ள அத்தனை கரங்களும் குப்பண்ணாவைச் சுற்றி விலங்கிட்டு நிறுத்தின. அவர் அதிலிருந்து விடுபட்டு நிமிர நீண்ட நேரமாகியது.

''ஆரோக்கியம் பிள்ளே! நீங்க என்னைத் தர்மம்னு சொன்னேள். அதை நான் ஏத்துக்கிறதுக்கில்லே. அவஸ்தைகளாலே ஆக்கப்பட்ட ஒரு மனுஷன், கம்பீரமுள்ள தர்மமாக முடியாது. நானும் உங்களைப் போலக் கல்யாணம் பண்ணிண்டேன். ஒரு உதவாக்கரைப் பிள்ளையைப் பெற்றெடுத்தேன். என் கண்களிலேயும் கண்ணீர் இருக்கு. எனக்கும் பசி இருக்கு. தூக்கம் இருக்கு. எனக்கும் பிள்ளைப் பாசம் இருக்காதா? சுப்புணி கூட்டிண்டு போறேங்கறான். விட்டுடுங்கோ. என்னை விட்டுடுங்கோ...'' என்று தலையைப் பலமாக உதறிக் கொண்டு விடுவிடென்று நடந்தார் குப்பண்ணா.

இப்போதைக்கு ஆரோக்கியம் பிள்ளையிடமிருந்து தப்பித்துக் கொண்டு விட்டார். வீடு போய்ச் சேருவதற்குள் இன்னும் எத்தனை பேர்களோ? என்னென்ன பாசக் கூப்பாடுகளோ?

பணத்தாலும், புகழாலும், சேவையாலும் சாதிக்க முடியாத ஒரு மகத்தான அன்பை வர்ஷிக்கிற இவ்வளவு பெரிய கூட்டம், இத்தனை காலமாகத் தம்மைச் சார்ந்திருக்கிறது என்பதை இன்று பிற்பகல் மூன்று மணியிலிருந்து குப்பண்ணா ஒவ்வொருவருடைய கண்ணீர் மூலமாகவும் தெரிந்து கொண்டு வருகிறார். தம் உள்ளத்தைக் கஞ்சத்தனம் இல்லாமல் எல்லோருக்கும் வழங்கிய அந்த நல்ல மனிதருக்கு, தங்கள் அன்

வைத் தழுதழுப்பாகத் திருப்பி வழங்குகிறார்கள் மக்கள்.

அவர்கள் அன்பால் அவருக்கு வேலி கட்டுகிறார்கள். இந்த அறுபது வருட காலமாக ஆசைப்படத் தெரியாமல், அவஸ்தைகளைக் கண்டு பொருமாமல், சகலத்தையும் சாட்சி ரூபமாக நின்று பார்த்த குப்பண்ணாவுக்கு இன்று புதிதாக ஓர் ஆசை முளைத்தது. இதுவரை சாட்சிக்காரராய் இருந்தவரை ஆசை காட்டிக் கட்சிக்காரராக மாற்றியவன் கப்புணி.

பதினைந்து வருடங்களுக்கு முன்னால் அம்மாவுக்குக் கொள்ளி வைத்துக் குளித்து உடம்பு காயு முன்னே அவள் திருமாங்கல்யத்தை எடுத்துக் கொண்டு திருட்டுப் பயலைப் போல ஓடிய கப்புணி ஒரு கடிதம் எழுதியிருந்தான்.

''தேவரீர் அப்பா அவர்கள் திவ்ய சமூகத்துக்கு அநேக நமஸ்காரம்.

''இத்தனை காலமாக நான் கடிதம் எழுதாததற்கு உங்களிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு, அதன் மூலம் உங்களை ஏமாற்ற விரும்பவில்லை. எனக்கு விவரம் தெரிந்த நாள் முதலாய்ச் சமீப காலம் வரை நான் மனிதனாகவே இருக்கவில்லை. உங்களுக்கு நான் பிள்ளையாகவே பிறந்திருக்கக் கூடாத பாவ மூட்டை.

''பாவங்கள் என்னைக் கடைசியாகப் பழி வாங்கி விட்டன. விபத்து ஒன்றில் என் வலது கை பறிபோய் விட்டது. பாவங்களைச் செய்த வலது கை போனதும் எனக்குப் புத்தி வந்தது. இப்பொழுது ஒரு பெட்டிக் கடை வைத்துக் கொண்டு மானமாய்ப் பிழைப்பை நடத்துகிறேன். ஏழைப் பெண் ஒருத்தியைக் கல்யாணம் செய்து கொண்டேன். நாலைந்து குழந்தைகளாய்க் குடும்பம் கிளைத்திருக்கிறது.

''அப்பா! உங்களுக்கு வயதாகிவிட்டது. இந்த நிலையில் நீங்கள் எங்கோ ஓர் ஊரில் தனிக் கட்டையாய் வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். நானும் உங்கள் மருமகளும் பேரக் குழந்தைகளும் தொண்டு செய்யக் காத்துக் கொண்டிருக்கும்போது கடைசி காலத்தில் நீங்கள் ஓர் அநாதையைப் போல் இருப்பதை அருள்கூர்ந்து எண்ணிப்பாருங்கள். குழந்தைகள் தாத்தாவைப் பார்க்க வேண்டுமென்று பிடிவாதம் பிடிக்கின்றன. நீங்கள் எந்தக் காலத்திலும் ஆசையைச் கட்டெரித்தவர்கள். நான் அப்படி அல்ல. உங்களை எங்களோடு வைத்துக் கொள்ள ஆசைப்படுகிறேன். உங்களுடைய மௌனம் என்னைச் சேற்றிலிருந்து கரைக்குக் கொண்டு வந்து சேர்த்திருக்கிறது. திருந்திவிட்ட என்னை வாழ்த்தி, எங்களோடு வந்துவிடும்படி தாழ்மையுடன் வேண்டிக் கொள்கிறேன். நாளை கழித்து ஊருக்குப் புறப்பட்டு வருகிறேன். அன்று காலையில் பத்து மணிக்குப் புறப்படும் பாசஞ்சர் வண்டியில் நாம் திரும்பிவிட வேண்டும். பயணத்துக்குத் தயாராக இருக்கும்படி மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன்.

தங்கள் அடியேன் **கப்புணி**''

**பி**ரயாணத்துக்கான ஏற்பாடுகளில் மும்முரமாக முனைந்திருந்தார் குப்பண்ணா. துணி மணி, பாத்திரம் பண்டம், என்று அதிகம் ஒன்றும் இல்லை. புத்தகங்கள் நிறைய இருந்தன. இனிமேல் அத்தனையும் தேவையில்லை.

அப்பொழுது விளக்கொளியில் ஐந்தாறு நிழல்கள் நீண்டு தெரிந்தன.

குப்பண்ணா வாசற்புறமாகப் பார்வையைத் திருப்பினார்.

பிரஸிடெண்ட் முதலியார், மச்சு வீட்டுப் பிள்ளை, கதர்க் குல்லாய்த் தேவர், புனித ஆரோக்கியம் பிள்ளை. சிவன் கோவில் டிரஸ்டி அருணகிரி தேசிகர் ஆகிய ஊர்ப் பிரமுகர் கூட்டமே அங்கு கூடி நின்றது.

'இதுவரை தனித் தனியாகப் போரிட்டுத் தோல்வியுற்றுத் திரும்பியவர்கள், இப்பொழுது படை சேர்த்துக் கொண்டு வந்திருக்கிறார்கள். ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்' என்று தீர்மானித்துக் கொண்டு, ''எல்லாரும் வாசலிலேயே நிக்கிறேளே! உள்ளே வாங்கோ!'' என்று சிரித்தார் குப்பண்ணா.

ஒவ்வொருவராக உள்ளே வந்து, வரிசையாகக் கையைக் கட்டிக் கொண்டு நின்றார்கள்.

''ஏன் இப்படி நிற்கிறேள்? உட்காருங்கோ'' என்று கலங்கிப் போயிருக்கும் ஒவ்வொருவர் கண்களையும் பார்த்துக் கொண்டே கூறினார் குப்பண்ணா.

''பரவாயில்லே. நிற்கிறோம்'' என்றார் அருணகிரி தேசிகர்.

''சரி. நில்லுங்கோ!'' என்று புத்தகங்களைப் பிரித்து வைக்க ஆரம்பித்தார் குப்பண்ணா.

''நாளைக்கு நீங்க அவசியம் போகத்தான் போறீங்களா சாமீ?'' என்று மச்சு வீட்டுப் பிள்ளை விம்மிய குரலில் கேட்டார்.

''பார்த்தாத் தெரியல்லே? மூட்டை கட்டிண்டிருக்கேன்!''

''எங்களை எல்லாம் இருட்டிலே விட்டுட்டுப் போறீங்களா சாமீ?'' என்று கரகரத்தார் ஆரோக்கியம்பிள்ளை.

''எதுக்கும் நான் அதிகாரி இல்லே. உங்க நிழல் இருட்டாத்தான் இருக்கும். ஆயிரம் குப்பண்ணாக்கள் சேர்ந்தாலும் உங்க நிழலை விரட்ட முடியாது!''

''முடியும்!'' அத்தனை பெரிய மனிதர்களும் கூவிக் கொண்டே குப்பண்ணாவை நோக்கிச் சாஷ்டாங்கமாக விழுந்தார்கள்.

அவர் துடித்துப் பதறி எழுந்து நின்றார். அந்தக் கணத்தில் அவர் உள்ளம் பனியால் உருகியது. ஒரு சாதாரண ஏழைப் புரோகிதன் காலில் எத்தனை பெரிய மனிதர்கள் விழுந்து கிடக்கிறார்கள்? வாழ்க்கையின் ஒவ்வொரு பகுதியிலும் மலையாய் உயர்ந்து நிற்பவர்கள், அப்பொழுது ஒரு மனிதனின் காலில் விழுந்து கிடப்பதாக நினைக்கவில்லை. தர்மத்தின் காலடியில் விழுந்து கிடப்பதாக நினைக்கிறார்கள். இவர்களை எல்லாம்விடச் சுப்புணி எந்த விதத்தில் உயர்வு?

அடுத்த கணமே அவர் உள்ளத்தில் பதுங்கிக் கிடந்த ஆசை சூடாக ஒரு கேள்வி கேட்டது: 'பிள்ளையின் சம்பாத்தியத்தில் ஒரு கவளம் அமுதுண்ணாமல் செத்தால் உன் கட்டை வேகுமா?'

'வேகாது!' என்றது இச்சை ரூபமான அவர் மனம்.

''எல்லோருமாச் சேர்ந்து என் தலையிலே பெரிய பாவமூட்டையாய்ச் சுமத்தி வைக்கிறேள். எழுந்திருங்கோ. எழுந்திருங்கோ'' என்று எரிச்சலுடன் கையை உதறினார் குப்பண்ணா.

''நீங்க இங்கேயே இருக்கிறதாகச் சொல்லுங்க. நாங்க எழுந்திருக்கிறோம்'' என்றார் கதர்க் குல்லாய்த் தேவர்.

''நீங்கள்ளாம் மனுஷா இல்லே!'' என்று ஓங்கி ஒரு கூச்சல் போட்டார் குப்பண்ணா.

அவர்கள் திடுக்கிட்டுத் திணறினார்கள்.

''உங்களுக்கெல்லாம் என் மேலே பொறுமை. ஆமாம், பொறுமைதான். இத்தனை காலமா அந்தப் புரோகிதன் உயிரோடே பிள்ளையைப் பறிகொடுத்திட்டு நின்னான், இப்போ அவன், பிள்ளையோடே போய்ச் சேர்ந்துக்கப் போறான்னு பொறுமைப்படறேள். ஏன் என் குழந்தைகுட்டிகளோடே என்னைச் சேர விடாமே மறிச்சிண்டு நிற்கிறேள்? சொல்லுங்கோ. சொல்லுங்கோ!'' என்று வெறி பிடித்தவர் போலக் கையையும் காலையும் பரப்பிக் கொண்டு கத்தினார் குப்பண்ணா.

அவர்கள் தள்ளாடித் தள்ளாடி எழுந்து நின்றார்கள். எழுபத்தைந்து வயதுத் தேவர் சிறு குழந்தை போல விம்மி விம்மி அழுதார். 'பரம பிதாவே! எங்களைக் காப்பாற்றும்' என்று தோளிலும், நெஞ்சிலும் சிலுவைக் குறியிட்டு ஸ்தோத்தரித்துக் கொண்டார் ஆரோக்கியம்பிள்ளை. மச்சு வீட்டுப் பிள்ளை முகத்தை மூடிக் கொண்டு விம்மினார்.

அருணகிரி தேசிகர் மட்டும் சபிக்கப்பட்ட துரதிர்ஷ்டத்திலிருந்து விடுபட்டவர் போலக் கண்கலங்காமல் குப்பண்ணாவைப் பார்த்தார். ''சாமி! ஆசைகளோடே வக்ரம் நாங்க. எங்களோடே நீங்க போட்டிக்கு வருகிறீங்க. மனிதனோடே தர்மம் போட்டிக்கு வரலாமா? அப்படி வந்ததும் எங்க துரதிர்ஷ்டம்தான். தர்மம் எங்களைக் காக்கும்கிற நம்பிக்கையிலே நாங்கபுறப்படறோம்'' என்று கும்பிட்டுவிட்டு நடந்தார்.

அவரைத் தொடர்ந்தார்கள் மற்றவர்கள்.

அவர்கள் போனதும் வெளிச்சமே இருட்டாகிவிட்டது.

குப்பண்ணாவின் ஆத்ம பலமும் பறிபோன மாதிரி இருந்தது. அதை யார் பறித்தது? ஆசையா? அவர்களா? சுப்புணியா?

வேத நூல்களுக்கு இடையில் அடையாளம் வைத்த மயிலிறகு போல் விழுந்தார் குப்பண்ணா.

**கா**லை வெய்யிலின் வெப்பமான கதிர்கள் குப்பண்ணாவின் கண்களைக் கூச வைத்தன. இரவில் கதவைச் சாத்தவில்லை. மனசை மூடி வைக்கா விட்டாலும் இப்படித்தான் வெப்பமான கதிர்கள் விழுமோ?

நேற்று மத்தியானம் வரையில் வெய்யில் கண்களைக் கூச வைத்ததில்லை. மழை அவரைச் சோதித்ததில்லை.

இன்று எல்லாமே தலைகீழாகிவிட்டன. ஏன் அப்படி?

குப்பண்ணாவுக்கும் ஆசை வந்தது. 'பிள்ளை' என்ற பாசம் வந்தது. பாசம் வந்தவுடன் பிள்ளைக்குப் பாயசம் வைக்க வேண்டும் என்று ஆசைப்பட்டார். ஆசைப்பட்டதும் இச்சாரூபமான உள்ளமும், உடலும் வந்தன. கூடவே அவஸ்தைகளின்

# பூப்போன்ற இட்டிலிகள்



## PREETT ப்ரீத் ஸ்டீம்-இட் மட்டிலுமே தயாராகக்கூடிய ஒரே சீராக வெந்துள்ள மெத்தென்றிருக்கும் இட்டிலிகள்!

மதிப்புமிக்க உணவுப் பொருள்களை வீணாக்காதீர்கள். ப்ரீத் ஸ்டீம்-இட்டில் சிறந்த இட்டிலிகளைத் தயாரியுங்கள். ப்ரெஸ்டிஜ் ப்ரெஷர் குக்கரும் இருந்துவிட்டால், ஏழே நிமிடங்களில் இட்டிலிகள் தயார்! சாதாரண பாத்திரங்களிலும் தயாரித்துக் கொள்ளலாம். நச்சு வேலையும் குழப்பமும் மிச்சம்!



மெருகிடப்பட்ட, நீடித்துழைக்கும் அலுமினியத்திலிருந்து தயாரிக்கப்படுகிறது. பிரித்தெடுக்கக்கூடிய தனித்தனி செட்டுகள் கொண்ட இதை ப்ரெஸ்டீஜ் ப்ரெஷர் குக்கரின் எந்த மாடலிலும் பொருத்தமாக வைக்கலாம். மாடல் '77'ல் மற்றும் '777'ல் 12 இட்டிலிகளும், ஹை-டோம் மற்றும் சூப்பர் ஹை-டோமில் 16 இட்டிலிகளும், ஸீனியரில் 24 இட்டிலிகளும் தயாரித்துக் கொள்ளலாம். ப்ரீத் ஸ்டீம்-இட்டில் கேக்குகள், புட்டிங்குகள், இன்னும், உங்கள் இஷ்டப்படி எதையும் தயாரிக்கலாம்.

பரீத் ஸ்டீம்-இட் வாங்கும்போது விதவிதமான பரீத் ஸாஸ்பான்கள், ஸ்கில்லெட்டுகள் ஆகியவற்றையும் பாருங்கள்.



PREETT ப்ரீத் டீலரிடமிருந்து
Prestige ப்ரெஸ்டீஜ் ப்ரெஷர் குக்கர் ஒன்று வாங்குங்கள்.

தயாரிப்பாளர்கள்: டிடி.(ப்ரைவேட்) லிமிடெட் பெங்களூர்-16

TTP 7874 TAM

சாம்ராஜ்யமும் ஆரம்பமாகி விட்டது. இல்லா விட்டால் ஒரு சாதாரண மழைக்கு ஆற்றமாட்டாமல் அவர் உடம்பு இப்படிக் கீழே விழுமா ?

'கப்புணி காலம்பற வர்றதாகத்தானே எழுதி இருந்தான் ? வடக்கே இருந்து வர்ற வண்டி வந்திருக்குமே! நிச்சயம் வந்திருப்பான். குழந்தைக்குப் பாயசம் வைக்கணும்னு ஆசைப்பட்டேன். முடியாது போலே இருக்கு. இன்னிக்கே பட்டணத்துக்குக் கிளம்பணும்னு எழுதியிருந்தான். உடம்பைப் பார்த்துண்டுதான் கிளம்பணும். நாளைக்குப் புறப்பட்டா என்ன குடியா முழுகிப் போறது?' என்று அவர் தமக்குத் தாமே கேட்டுக் கொண்டிருந்த போது, ''நமஸ்காரம்'' என்று இரண்டு கைகளையும் குவித்துக் கொண்டே வீட்டுக்குள் நுழைந்தான் கப்புணி.

குப்பண்ணுவுக்கு வந்தவனை வரவேற்கத் தோன்றவில்லை. தன்னுடைய வலது கரம் விபத்தில் போய் விட்டதாகத்தானே எழுதி இருந்தான் கப்புணி ? வலது கரம் இருக்கிறதே !

''என்னடா கப்புணி! ஏதோ விபத்தில்...'' என்று அவர் ஆரம்பிக்கும் போதே —

கத்திரித்தான் அவன் : ''வலது கை போயிருக்க வேண்டியதுதான். ஆனால் போகல்லே. ரெண்டு மாசம் ஆஸ்பத்திரியிலே கிடந்து, கையைக் காப்பாத்திண்டேன். அதிலிருந்தே வலது கை போயிட்டதாகத் தான் நான் சொல்லிண்டிருக்கேன். பாவம் செய்த கை போயிட்டதாகத்தான் நான் பாவிச்சிண்டிருக்கேன். அதனாலேதான் உங்களுக்கு அப்படி எழுதினேன். ஏன் ஒரு மாதிரியா இருக்கேள்? மூட்டை முடிச்செல்லாம் கட்டிட்டேளா ? பத்து மணி வண்டிக்கு நாம் புறப்படணும். கடையை மூடிப் போட்டுட்டு வந்திருக்கேன்.'' படபட வென்று பொரிந்து கொட்டினான்.

''வாடாப்பா கப்புணி !'' என்று நீட்டி முழக்கிக் கொண்டே படி ஏறி வந்தாள் கோழுப் பாட்டி. எப்படித்தான் அவளுக்கு மூக்கு வேர்த்ததோ ? அந்தக் காலத்தில் கப்புணிக்கு ஆதரவாக இருந்து கைநீட்டுகிற அளவுக்குக் கற்றுக் கொடுத்தவள் அவள் தான். அவன் ஓடிப் போன நாள் முதலாய் இந்தப் பக்கம் எட்டிப் பார்க்காதவள் இப்பொழுது படியேறி வந்திருக்கிறாள்.

''சௌக்கியமா இருக்கேளா பாட்டி ?'' என்று வாய் நிறைய விசாரிக்கிறான் கப்புணி. பழைய பாசம் !

''எனக்கென்னடா கேடு ? யமதர்மன் என் பக்கமா எட்டிப் பார்க்கவே பயப்படறான்! ஆத்துக்கு வாடா குழந்தே! ஒரு வாய் காப்பி சாப்பிட்டுட்டு வரலாம்'' என்ற கோழுப் பாட்டியுடன் நடந்தான் கப்புணி.

அவனுடன் எத்தனையோ பேசத் துடித்த குப்பண்ணு, ஏமாற்றத்துடன் பெருமூச்செறிந்தார்.

'பழைய உறவில் இன்னும் பற்று இருக்கும் போல் இருக்கிறதே !'

அரை மணி நேரமாகியும் கப்புணி திரும்பவில்லை.

'இன்னும் என்ன செய்யறான்?' பார்த்து விட்டு வருவதற்காகக் கிளம்பினார் குப்பண்ணு. அவரால் நடக்க முடியவில்லை. பாசம் இழுத்துக்கொண்டு போகிறது!

கோழுப் பாட்டியும், கப்புணியும் சுவாரசியமாகப் பேசிக் கொண்டிருக்கிறார்கள். பேச்சு குப்பண்ணுவை மையமாகக் கொண்டிருந்தது.

குப்பண்ணுவுக்கு ஒற்றுக் கேட்கப் பிடிப்பதில்லை. ஆசை, பாசம் என்று வந்தவுடன் அதுவும் இப்போது அவருக்குப் பிடித்தது. ஒரு மூலையில் ஒண்டிக் கொண்டு பேச்சைக் கவனித்தார்.

''பட்டணத்திலே நாலஞ்சு குழந்தைகளோடே சம்சாரம் பண்றதே கஷ்டம். உங்க அப்பாக் கிழத்தையும் கூட்டிண்டுபோய் ஏண்டா அவஸ்தைப்படப் போறே?'' என்று கேட்கிறாள் கோழுப் பாட்டி.

'' அப்பா வந்தா எனக்கு அவஸ்தை இல்லே; வருமானம். பட்டணத்திலே புரோகிதாளுக்கு நல்ல வரும்படி. மாசம் இருநூறு, முந்நூறு வருமானம் வரும். அப்பா ஒரு வேளைச் சாப்பாட்டுக்காரர். மிஞ்சி மிஞ்சிப் போனா அவருக்கு முப்பது, நாப்பது தான் செலவாகும். மிச்சமெல்லாம் எனக்கு லாபம்தானே? அதனாலேதான் அப்பாவுக்குக் குழையடிச்சு ஒரு கடுதாசி போட்டேன். மனுஷன் ஏமாந்துட்டார். மூட்டை கட்டி ரெடியா வச்சுண்டிருக்கார்.....'' என்கிறான் கப்புணி.

குப்பண்ணுவால் அதற்கு மேல் நின்று கேட்க முடியவில்லை. வீட்டுக்குத் திரும்பினார். தர்மத்திலிருந்து வழுவி, ஆசைப்பட்டதும் ஒரு தவறுதானே ? பளீரென்று ஒரு சாட்டையடி விழுந்ததும் துடித்துப் போன அவர், அடுத்த விநாடியே தான் விழுந்திருந்த பள்ளத்திலிருந்து மெல்ல மெல்ல மேலே ஏறிக் கொண்டிருந்தார். இப்பொழுது அவருக்கு ஜுரம் இல்லை. குளிர் இல்லை. நடையில் தடுமாற்றம் இல்லை. ஆசை மடிந்தவுடனே உடம்பின் அவஸ்தைகளும் ஓய்ந்துவிட்டன.

''எப்பொழுது போகலாம், அப்பா!'' என்று கேட்டுக் கொண்டே வீட்டுக்குள் நுழைந்தான் கப்புணி.

''எங்கே போகணும்கறே ? நரகத்துக்கா? நான் புரோகிதத்தைப் பிழைப்பா நடத்தல்லே. மனிதனுக்கும் தர்மத்துக்கும் உள்ள தூரத்தைக் குறைக்கிற பணியை இதுவரை தெய்வப் பணியா செஞ்சிண்டு வந்திருக்கேன். அப்படிப்பட்டவனை வச்சுப் பணம் பண்ணப் பார்த்தியேடா பாவி ! உன்னைப் பார்க்கிறது பாவம். உன்னோடே பேசறது பாவம். நீயே ஒரு பாவம். போடா, வெளியே!'' என்று கண்களை மூடிக்கொண்டு கத்தினார் குப்பண்ணு.

பாவம் வழக்கம் போலத் தோற்று விட்டது. தர்மத்தின் தகிப்பைப் பொறுக்க இயலாமல் வெளியேறினான் கப்புணி.

அதே சமயத்தில் மச்சு வீட்டுப் பிள்ளையும், பிரஸிடெண்ட் முதலியாரும், புனித ஆரோக்கியம் பிள்ளையும், கதர்க் குல்லாய்த் தேவரும், டிரஸ்டி அருணகிரிதேசிகரும் உள்ளே நுழைந்தார்கள்.

''வாங்கோ! எல்லோரும் வாங்கோ! என் ஆசை வெல்லலே. தர்மம் மறுபடியும் வென்னுடுத்து!'' என்று கண்ணீரும், களிப்புமாய் அவர்களை வரவேற்றார் குப்பண்ணு.

□ கிட்டுவின் பையில் சில்லறை குலுங்கியது. மொத்தம் ரூ. 1-15 இருந்தது அவனிடம். பட்டு அவனை நோக்கி ஓடோடி வந்தான். அவன் கையில் ஒரு ரூபாய் நோட்டு இருந்தது. 'கிட்டு, கிட்டு ரூபாய்க்குச் சில்லறை வேணும்டா, அவசரம்' என்றான். கிட்டுவிடமிருந்த சில்லறைகளைக் கொண்டு அவனுக்குச் சரியாக ஒரு ரூபாய்க்குச் சில்லறை தர முடியவில்லை. தவித்தான். அப்படியானால் அவனிடமிருந்த நாணயங்கள் என்னென்ன?

விடை: கிட்டுவிடம் ஒரு 50 பைசா, ஒரு 25 பைசா, நான்கு 10 பைசா நாணயங்கள் தான் இருந்தன.

□ பள்ளிக்கூடத்தில் வாத்தியார் வீட்டுக் கணக்குக் கொடுத்திருந்தார். கணக்கிலே எப்பவுமே 'ஒரு மாதிரியான' சோமுவுக்கு வீட்டுக் கணக்குகள் தப்புத் தப்பாக வந்தன. அந்தக் கோபத்தில் சோமு கணக்குப் புத்தகத்தின் பக்கங்களைக் கிழித்து வீசினான். அப்படி அவன் கிழித்த பக்கங்கள் 6, 7, 84, 111, 112. சோமு கிழித்துப் பறக்க விட்ட காகிதங்கள் எத்தனை?

விடை: நான்கு பக்கங்கள். 111, 112 பக்கங்கள் ஒரே காகிதத்தில்தானிருக்கும்.

இயற்கை விரோதம் :

## பண்டமாற்றுத் திருடன்

மேற்கு அமெரிக்காவின் காடுகளில் வசிக்கும் ஒருவகை எலிகளிடம் விநோதமான பழக்கம் உண்டாம். எலிகளின் குணத்தைப் பற்றித்தான் உங்களுக்குத் தெரியுமே? நாம் அசந்து மறந்து போனால் பொருள்களை 'அபேஸ்' செய்து கொண்டு போவதில் வல்லவையல்லவா எலிகள்? ஆனால் இந்த வகை எலிகள் ரொம்ப நியாயமானவை. தாங்கள் தூக்கிச் செல்லும் பொருள்களுக்குப் பதிலாக வேறொரு பொருளை அந்த இடத்தில் வைத்துவிட்டுச் செல்லுமாம். நூல்கண்டின் மீது அதற்கு மோகமென்றால் தன் கைவசமுள்ள, வேறு இடத்திலிருந்து 'தேட்டை' யிட்ட — வைர மோதிரத்தை அந்த இடத்தில் வைத்துவிட்டுத்தான் நூல் கண்டைத் தூக்கிச் செல்லுமாம். பொருள்களின் மதிப்பைப் பற்றி அதற்கு என்ன தெரியும், பாவம்! இம்மாதிரி எலிகள் நம் வீட்டுக்கு வாராதா என்று யோசிக்கிறீர்களா?

## காணமல் போன காகிதப் பென்சில்

மந்திரவாதி மேஜைமீது ஒரு கைக்குட்டையை விரிக்கிறார். பிறகு அதன் இரு மூலைகளையும் ஒன்று சேர்த்து முக்கோண வடிவில் மடிக்கிறார். அதன் மீது உங்களிட மிருந்து ஒரு காகிதப் பென்சிலை வாங்கி அதன் மீது வைத்துச் சுருட்டுகிறார் குழல்போல. ஏதோ மந்திரங்களைச் சொல்லிச் சுருட்டிய கைக்குட்டைக் குழலைப் பிரிக்கிறார். 'ஆ, மந்திரக்காளி!' — அங்கு பென்சில் இல்லை. மாயமாக மறைந்து போயிருக்கிறது. அடுத்து கைக்குட்டையை முழுதும் விரிக்கிறார். கைக்குட்டையின் நடுவில் உங்கள் பென்சில் இருக்கிறது. மாயமா, மந்திரமா? இரண்டுமில்லை. தந்திரம். நீங்களும் மந்திரவாதியாகலாம். அதன் இரகசியம் இதுதான். மேஜைமீது கைக்குட்டையை விரித்து முக்கோண வடிவில் மடிக்கும்போது 'அ' என்ற முனை அடி முனையாகிய 'ஆ'க்கு வெளியே இரண்டங்குலம் தள்ளி இருக்கும்படி மடியுங்கள். இப்போது அதன் மீது ஒரு பென்சிலை வையுங்கள். (படம் 1) பென்சிலை வைத்து 'அ' முனையை நோக்கிக் குழல் போலச் சுருட்டுங்கள். (படம் 2) முழுவதும் சுற்றி முடியும்போது 'ஆ' முனை தானாகவே 'அ'வின்மீது வந்து படிவதைக் காண்பீர்கள். (படம் 3) இதுதா மந்திரக்காரரின் தந்திரம். இதைப் பிறர் கவனத்தைக் கவராத வகையில் நாசூக்காகக் கைகளால் மறைத்துக் கொள்ளுங்கள். பார்வையாளர்களில் ஒருவரைக் கூப்பிட்டுச் சுருட்டிமுடிந்த குழலின் நடுவில் வந்துள்ள கைக்குட்டை முனை மீது விரலை வைத்து அழுத்திக்கொள்ளச் சொல்லி உருளையைப் பிரியுங்கள். (படம் 4) குழல் பிரிந்து கைக்குட்டை விரியும்போது....! அங்கு பென்சில் இருக்காது. உங்கள் நண்பர்கள் திகைப்பார்கள். உங்களையும் மந்திரவாதி என்றே மதிப்பார்கள். அடுத்து முக்கோண வடிவான கைக்குட்டையைப் பிரியுங்கள். கைக்குட்டையின் நடுவே மறைந்த பென்சில் படுத்துக் கொண்டிருக்கும்.



# ஏமாறச் சொன்னது நானே!

இது ரொம்பரொம்ப நாளைக்குமுன்னாலே நடந்த கதை. ஒரு காட்டில் யானையும் நீர் யானையான 'ஹிப்போ'வும் ரொம்பச் சிநேகமாக இருந்தன. எங்கு போனாலும் இரண்டும் சேர்ந்தே போகும். சேர்ந்தே உணவருந்தும்.

ஒரு நாள்! ஓர் ஆமை, யானையும் நீர் யானையும் விருந்து சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போது வந்தது. "என்ன, சௌக்கியமா?" என்று குசலம் விசாரித்தது. "நீங்கள் இரண்டு பேரும் உருவத்திலும் பலத்திலும் பெரியவர்கள்தான். ஆனால் உண்மையில் உங்கள் இருவரையும் விட நான்தான் பலசாலி. அது தெரியுமா?" என்றது ஆமை. யானையும், நீர்யானையும் ஒன்றை ஒன்று பார்த்துக்கொண்டன. ஏளனமாக ஆமையைப்பார்த்து முறுவலித்தன.

"என் வார்த்தை உங்களுக்குக் கேலியாகத் தோன்றுகிறதில்லையா? சரி, இதோ ஒரு வலுவான நீண்ட கயிறு இருக்கிறது. யானையாரே! இதன் ஒரு முனையை நீங்கள் பிடித்துக் கொள்ளுங்கள். மறு முனை என்னிடம் இருக்கட்டும். என்னை நீங்கள் நீருக்குள்ளிருந்துஇழுத்து வெளியேவிடுங்கள் பார்க்கலாம்" என்றது. யானைக்கு மகா கோபம். 'ஓர் ஆமை தன்னிடம் சவால் விடலாச்சா?' என்று ஆத்திரத்துடன் கயிற்றின் முனையை அலட்சியமாகப் பிடித்துக் கொண்டு நின்றது. ஆமை மறு முனையைத் தன் முன்னங் கால்களில் ஒன்றில் முடிந்து கொண்டு அருகிலிருந்த பெரிய நதிக்குள் குதித்தது. நதியின் அடி மட்டத்துக்குப் போனதும் தன் காலில் கட்டிக் கொண்டிருந்த கயிற்றை அவிழ்த்து அங்கிருந்த பெரிய பாறையைச் சுற்றி இறுக்கிக் கட்டிவிட்டது. யானை மேலிருந்து இழுத்தது. இழுத்தது. மூச்சுக்கட்டி இழுத்தது. ம்ஹூம்! கயிறுதான் படாரென்று அறுந்தது. உடனே ஆமை பாறையிலிருந்த கயிற்றை அவிழ்த்துத் தன் காலில் கட்டிக் கொண்டு மூச்சு வாங்க அறுந்த கயிறு ஊசலாட மேலே வந்தது. யானை தொங்கிய முகத்துடன் ஆமை தன்னை விடப் பலசாலி என்பதை ஒப்புக் கொண்டது. ஆனால் ஹிப்போ ஒப்புக் கொள்ளவில்லை.

"எங்கே கயிற்றை இப்படிக் கொடு. இப்போது நீருக்குள் நான் போகிறேன். நீ மேலே இரு. உன்னைத் தண்ணிருக்குள் இழுத்துத் தள்ளுகிறேன் பார்" என்றது நீர் யானை. புதிய கயிறு கொண்டு வந்த ஆமை ஒரு முனையைத் தன் காலில் கட்டிக் கொண்டு நீண்டு வளர்ந்திருந்த புல்லடர்ந்த கானகத்துக்குள் நகர்ந்தது. மறு முனையுடன் ஹிப்போ நீருக்குள் குதித்தது. ஹிப்போ மறைந்ததும் ஆமை அருகிலிருந்ததொரு பனை மரத்தைப் பல தடவை சுற்றி வந்தது. ஹிப்போ இழுத்தபோது கயிறு பனைமரத் தண்டை நன்றாக இறுக்கிக் கொண்டது. எத்தனை இழுத்தும் ஆமை தண்ணிருக்குள் வராததைக் கண்ட ஹிப்போ மூச்சுத் திணறி மூக்குத் துவாரங்களிலிருந்து நீரை வழிய விட்டபடி கரைக்கு வந்தது. உடனே ஆமை பனை மரத்தை அப்பிரதட்சணமாகச் சுற்றியது. கயிறு விடுபடக் கால் கட்டோடு ஹிப்போவிடம் வந்தது. ஹிப்போவினால் பேசக்கூட முடியவில்லை. அத்தனை களைப்பு அதற்கு.

"இப்போது சொல்லுங்கள். என்னை உங்கள் நண்பனாக ஏற்றுக் கொள்கிறீர்களா? விரோதியாகப் பாவிக்கிறீர்களா?" என்று கேட்டது ஆமை.

"நண்பனாகத்தான்!" என்றன நீர் யானையும், யானையும். "எங்களை விடப் பலசாலியான உன்னை விரோதியாக்கிக் கொள்ள நாங்கள் என்ன முட்டாள்களா?"

"அப்படியானால் சரி. நீங்கள் இன்று முதல் உங்களோடு வாழ, உணவருந்த என்னையும் அனுமதியுங்கள். ஆனாலும் நீரிலும் நிலத்திலும் ஒருவனால் வாழ முடியுமா? ஹிப்போவுடன் நான் நீரிலும் என் மகன் யானையுடன் தரையிலுமாக வாழுகிறோம்" என்றது ஆமை.

இப்படியாகத்தானே அன்று முதல் இன்று வரை நீரில் வாழும் ஆமைகளும், நிலத்தில் வாழும் ஆமைகளுமாக இருந்து வருகின்றன.





# பொன்னியின் செல்வன்

அமரர் **கல்கி**

## இருபதாம் அத்தியாயம் • முதற் பகைவன் •



**த**க்க சமயத்தில் ஆந்தை செய்த உதவியை ஆழ்வார்க்கடியான் மனத்திற்குள் பெரிதும் பாராட்டினான். ஏனெனில், காட்டின் மத்தியில் கூடியிருந்த சதிகாரர்கள், சிறகடித்துக்கொண்டு உறுமிய ஆந்தையைப் பார்த்து அதனால் ஏற்பட்ட சத்தந்தான் என்று எண்ணிக் கொண்டார்கள். ''அடே! இந்தக் கோட்டான் நம்மைப் பயப்படுத்திவிட்டது! வெட்டுடா அதை!'' என்றான் ஒருவன்.

''வேண்டாம்! உங்கள் கத்திகளை வேறு முக்கியமான காரியங்களுக்குப் பத்திரப்படுத்தி வையுங்கள். நம் பகைவர்களைப் பூண்டோடு ஒழிப்பதற்குக் கூராக்கி வையுங்கள்! ஆந்தையும் கோட்டானும் நம் பகைவர்கள் அல்ல; அவை நம் சிநேகிதர்கள்! மனிதர்கள் சாதாரணமாய் உறங்கும் சமயங்களில் நாம் கண் விழித்திருக்கிறோம். நம்மோடு ஆந்தைகளும் கூகைகளும் கண் விழித்திருக்கின்றன!'' என்றான் ரவிதாஸன் என்பவன். அவனுடைய பேச்சைக் கேட்டுக் கொண்டே மெள்ள மெள்ள அடி மேல் அடியெடுத்து வைத்து நடந்து திருமலையப்பன் ஒரு பெரிய மருத மரத்தின் சமீபத்தை அடைந்தான். நூறு வயதான அந்த மரத்தின் பெரிய வேர்கள் நாலாபுறத்திலும் ஓடியிருந்தன. ஒரு ஆணி வேருக்கும் இன்னொரு ஆணி வேருக்கும் மத்தியில் தரையிலும் இடைவெளியிருந்தது; மரத்தின் அடிப் பக்கத்திலும் நல்ல குழிவு இருந்தது. அத்தகைய குழிவு ஒன்றில் மரத்தோடு மரமாகச் சாய்ந்து கொண்டு ஆழ்வார்க்கடியான் நின்றான்.

''தஞ்சாவூர் இராஜ்யத்தின் பொக்கிஷம் இருக்கும் வரையில் நமக்கு வேண்டிய பொருளுக்குக் குறைவு இல்லை. எடுத்த காரியத்தை முடிக்கவேண்டிய நெஞ்சுத் துணிவு வேண்டும். காரியம் முடிகிற வரையில் வெளியில் தெரியாதபடி இரகசியத்தைப் பேணும் சக்தி வேண்டும்! நமக்குள் இரண்டு பிரி



வாகப் பிரிந்து கொள்ள வேண்டும். ஒரு பிரிவினர் உடனே இலங்கைக்குப் போக வேண்டும். இன்னொரு பிரிவினர் தொண்டைமண்டலம் சென்று காரிய சித்திக்குத் தக்க சமயத்தை எதிர்பார்த்திருக்க வேண்டும். ஏறக்குறைய இரண்டு காரியங்களும் ஒரே சமயத்தில் முடிய வேண்டும். ஒரு பகைவனை முடித்த பிறகு அவகாசம் கொடுத்தால் இன்னொரு பகைவன் ஜாக்கிரதையாகி விடுவான்! அதற்கு இடமே கொடுக்கக் கூடாது. தெரிகிறதா? உங்களில் இலங்கைக்குப் போக யார் யார் ஆயத்தமாயிருக்கிறீர்கள்?'' என்றான் ரவிதாஸன்.

''நான் போகிறேன்!'' ''நான்தான் போவேன்!'' என்று பல குரல்கள் ஒரே சமயத்தில் கேட்டன.

''யார் போகிறது என்பதை அடுத்த முறை பாண்டிய நாட்டில் கூடித் தீர்மானிக்கலாம்! அது வரைக்கும் இங்கே செய்ய வேண்டிய ஏற்பாடுகள் இன்னும் சில இருக்கின்றன!'' என்றான் ரவிதாஸன்.

''ஈழத்துக்கு எந்த வழி போவது நல்லது?'' என்று ஒருவன் கேட்டான்.

'' **கோடிக்கரை** வழியாகப் போகலாம். கடலைக் கடப்பதற்கு அது நல்ல வழி. ஆனால் இங்கிருந்து கோடிக்கரை வரையில் செல்வது கடினம். நெடுகிலும் பகைவர்கள். ஆங்காங்கே ஒற்றர்கள். ஆகையால், சேதுவுக்குச் சென்று அங்கே கடலைத் தாண்டி **மாதோட்ட**த்துக்கு அருகில் இறங்குவதுதான் நல்லது. இலங்கை போகிறவர்கள் சமயத்தில் படகு வலிக்கவும், கட்டுமரம் தள்ளவும், கடலில் நீந்தவும் தெரிந்தவர்களாயிருக்க வேண்டும். இங்கே யாருக்கு நீந்தத் தெரியும்?''

''எனக்குத் தெரியும்''

''எனக்கும் தெரியும்''

என்ற குரல்கள் எழுந்தன.

'' முதலில் இலங்கை மன்னன் மகிந்தனைக் கண்டு பேசி விட்டுப் பிறகு காரியத்தில் இறங்க வேண்டும். ஆகையால் ஈழத்துக்குப் போகிறவர்களில் ஒருவருக்காவது சிங்கள மொழி



தெரிந்திருக்க வேண்டும். ஆ! நமது சோமன் சாம்பவன் இன்னும் வந்துசேர வில்லையே? யாராவது அவனை இன்றைக்குப் பார்த்தீர்களா?''

''இதோ வந்து கொண்டிருக்கிறேன்!'' என்று ஆழ்வார்க்கடியானுக்கு மிக்க சமீபத்திலிருந்து ஒரு குரல் கேட்டது. அடியான் மேலும் மரத்தோடு மரமாக ஒட்டிக் கொண்டான். அடாடா! இந்தப் பாழும் உடம்பு இப்படிப் பெருத்து விட்டது எவ்வளவு சங்கடமாயிருக்கிறது!

புதிதாக இரண்டு பேர் அக்கூட்டத்தில் வந்து சேர்ந்து கொண்டார்கள்.

ஆழ்வார்க்கடியான் தன் முகத்தில் ஒரு சிறு பகுதியை மட்டும் மரத்துக்கு வெளியே நீட்டி எட்டிப் பார்த்தான். புதிதாக வந்தவர்கள் இருவரும் கொள்ளிடக் கரையில் அரசமரத்தடியில் சந்தித்துப் பேசியவர்கள்தான் என்று தெரிந்து கொண்டான்.

புது மனிதர்களைக் கண்டதும் ரவிதாஸன், ''வாருங்கள்! வாருங்கள்! ஒரு வேளை ஏதாவது உங்களுக்கு ஆபத்து வந்துவிட்டதோ, வராமலே இருந்து விடுவீர்களோ என்று பயந்தேன். எங்கிருந்து எந்த வழியாக வந்தீர்கள்?'' என்றான்.

''கொள்ளிடக் கரையோடு வந்தோம். வழியில் ஒரு கூட்டம் நரிகள் வளைத்துக் கொண்டன. நரிகளிடம் சிக்காமல் தப்பித்து வருவதற்கு நேரம் ஆகி விட்டது!'' என்றான் சோமன் சாம்பவன்.

''புலிக்கும், சிங்கத்துக்கும் பயப்பட்டால் பொருள் உண்டு. நரிக்குப் பயப்படுகிறவர்களால் என்ன காரியத்தைச் சாதித்துவிட முடியும்?'' என்றான் அந்தக் கூட்டத்துக்கு முன்னமே வந்திருந்தவர்களில் ஒருவன்.

''அப்படிச் சொல்லாதே, அப்பனே! சிங்கம், புலியைக் காட்டிலும் நரி பொல்லாதது! ஏனெனில், சிங்கமும் புலியும் தனித் தனியே பாய்ந்து வரும் விரோதிகள். அவற்றோடு சண்டையிட்டுச் சமாளிக்கலாம். ஆனால் நரிகளோ கூட்டங் கூட்டமாக வருகின்றன. ஆகையால், அவற்றுக்குப் பலம் அதிகம். சோழ நாட்டு நரிகள் பெருங் கூட்டமாக வந்ததினால்தானே நம் ஒப்பற்ற மன்னாதி மன்னன் தோற்கவும் உயிர் துறக்கவும் நேர்ந்தது. இல்லாவிட்டால், அவ்விதம் நேர்ந்திருக்குமா?''

''அந்த நரிக் குலத்தை அடியோடு அழிப்போம்! பூண்டோடு நாசம் செய்வோம்!'' என்று ஆங்காரத்துடன் கூவினான் சோமன் சாம்பவன்.

''இதோ அதற்கு வேண்டிய உபகரணங்கள்!'' என்று ரவிதாஸன் பொன் நாணயங்களின் குவியலைச் சுட்டிக் காட்டினான்.

சோமன் சாம்பவன் நாணயங்கள் சிலவற்றைக் கையில் எடுத்துப் பார்த்து விட்டு, ''ஆ! ஒரு பக்கம் புலி; இன்னொரு பக்கம் பனை!'' என்று சொன்னான்.

''சோழனுடைய பொன்; பழுவேட்டரையனுடைய முத்திரை. நான் சொன்னது சொன்னபடி நிறைவேற்றி விட்டேன். உங்களுடைய செய்தி என்ன? நமது இடும்பன்காரி ஏதாவது செய்தி கொண்டு வந்திருக்க வேண்டுமே?'' என்றான் ரவிதாஸன்.

''ஆம்; கொண்டு வந்திருக்கிறார். கேளுங்கள்! அவரே சொல்லுவார்!''

இடும்பன்காரி சொல்லத் தொடங்கினான்: — ''தங்கள் கட்டளைப்படியே சம்புவரையர் மாளிகையில் பணியாளாக நான் அமர்ந்து வேலை பார்த்து வருகிறேன். அதனுடைய பலன் நேற்றிரவுதான் சித்தித்தது. நேற்று சம்புவரையர் மாளிகையில் ஒரு பெரிய விருந்து நடந்தது. பெரிய பழுவேட்டரையர், வணங்காமுடி முனையரையர், மழபாடி மழவரையர் முதலிய பலர் வந்திருந்தார்கள். குரவைக் கூத்தும் வேலனாட்டமும் நடைபெற்றன. வேலனாட்டம் ஆடிய தேவராளனுக்குச் சந்நதம் வந்து குறி சொன்னான். அவன் சொன்னது நம்முடைய நோக்கத்துக்கு அனுசரணையாகவே இருந்தது. பழுவேட்டரையருடன் வந்த மூடு பல்லக்கில் அவருடைய இளைய ராணி வந்திருப்பதாக எல்லாரும் எண்ணியிருந்தார்கள். சுந்தரசோழ மகாராஜாவுக்கு உடல் நலம் சரியாயில்லை என்றும் அதிக நாள் உயிரோடிருக்கமாட்டாரென்றும் பழுவேட்டரையர் தெரிவித்தார். எல்லாருமாகச் சேர்ந்து அடுத்தபடி பட்டத்துக்கு வரவேண்டியவர் ஆதித்த கரிகாலர் அல்ல, மதுராந்தக தேவர் என்று முடிவு செய்தார்கள். ஆனால் மதுராந்தக தேவர் இதற்குச் சம்மதிப்பாரா என்று சிலர் கேட்டார்கள். 'அவர் வாயினாலேயே அதற்கு மறுமொழி கூறச் செய்கிறேன்' என்று சொல்லிப் பழுவேட்டரையர் மூடு பல்லக்கின் திரையைத் திறந்தார். அதற்குள்ளிருந்து மதுராந்தக தேவர் வெளி வந்தார்! பட்டம் கட்டிக் கொள்ளத் தமக்குச் சம்மதம் என்று அவர் தெரிவித்தார்.......''

''இப்படிப் பெண் வேஷம் போடும் பராக்கிரமசாலிக்கு முடிசூட்டப் போகி

ளர்களாம்! நன்றாய் கூட்டட்டும்! எல்லாம் நாம் எதிர்பார்த்தபடியேதான் நடந்து வருகிறது. இம்மாதிரி சோழ நாட்டிலேயே ஒரு குழப்பம் ஏற்படுவது நம்முடைய நோக்கத்துக்கு மிக உகந்தது. எது நேர்ந்தாலும், என்ன நடந்தாலும், நம்மை யாரும் சந்தேகிக்க மாட்டார்கள் அல்லவா? இடும்பன்காரி! மிக முக்கியமான செய்தி கொண்டு வந்திருக்கிறீர். ஆனால் இதெல்லாம் எப்படித் தெரிந்து கொண்டீர்? இதற்குச் சந்தர்ப்பம் எப்படி வாய்த்தது?'' என்று கேட்டான் ரவிதாஸன்.

''நடு ராத்திரியில் அவர்கள் சபை கூடியபோது வேறு யாரும் அருகில் வராதபடி பார்த்துக் கொள்ள என்னைக் காவலுக்கு அமர்த்தியிருந்தார்கள். காவல் புரிந்து கொண்டே என் காதுகளையும் கண்களையும் உபயோகப்படுத்திக் கொண்டிருந்தேன்.''

''அப்படி உபயோகப்படுத்தியதில் வேறு ஏதாவது தெரிந்ததா?''

''தெரிந்தது. அந்த நள்ளிரவுக் கூட்டத்தில் நடந்ததையெல்லாம் இன்னொரு வேற்று மனிதன் கோட்டை மதிள்சுவர் மேலிருந்து கவனித்துக் கொண்டிருந்தான்!''

''ஆஹா! அவன் யார்?''

''முன் குடுமி வைத்திருந்த ஒரு வைஷ்ணவன்......''

''ஆகா! அவன்தானா? அப்படி நான் நினைத்தேன். அவனை நீர் என்ன செய்தீர்? சம்புவரையரிடம் பிடித்துக் கொடுக்க வில்லையா?''

''இல்லை. ஒரு வேளை அவன் நம்மவனாயிருக்கலாம் என்று நினைத்து விட்டேன். நீங்களே அனுப்பி வைத்தீர்களோ என்றும் எண்ணினேன்.''

''பெரிய பிசகு செய்து விட்டீர். அவன் நம்மவன் அல்ல. கட்டையாய்க் குட்டையாய் இருப்பான். சண்டைக்காரன். பெயர் திருமலையப்பன்; 'ஆழ்வார்க்கடியான்' என்று சொல்லிக் கொள்வான்.''

''அவனேதான். நான் செய்த பிசகை இன்று மத்தியானம் நானே உணர்ந்து கொண்டேன். அவன் நம் ஆள் அல்லவென்று தெரிந்தது.''

''எப்படி அறிந்தீர்?''

''நேற்று இரவு கந்தமாறனின் பாலிய நண்பன் ஒருவனும் கடம்பூர் மாளிகைக்கு வந்திருந்தான். அவனுக்கும் பழுவேட்டரையர் கூட்டத்துக்கும் சம்பந்தம் ஒன்றுமில்லையென்று தெரிந்தது. அவன் எங்கேயோ மூலையில் படுத்து நிம்மதியாகத் தூங்கினான். இன்று காலையில் சின்ன எஜமானர் தம் சிநேகிதனைக் கொண்டுவிடக் கொள்ளிடக் கரை வரையில் வந்தார். அவர் வரப் போவதை அறிந்து அவர் முன்னால் அடிக்கடி நான் போய் நின்றேன். என்னையும் வரச் சொன்னார். அவர் கொள்ளிடத்தின் வடகரையோடு திரும்பி விட்டார். என்னைத் தென் கரைக்கு வந்து அவ்வாலிபனுக்கு ஒரு குதிரை சம்பாதித்துக் கொடுத்து விட்டுத் திரும்பும்படி சொன்னார். அங்கிருந்து குடந்தைக்குப் போய் என் அத்தையைப் பார்த்து விட்டு வருவதாகச் சொல்லி விட்டு வந்தேன். அதனால்தான் சந்தேகத்துக்கு இடமின்றி இங்கே வர முடிந்தது.''

''சரிதான், சரிதான்! அந்த வீர வைஷ்ணவனைப் பற்றி எவ்விதம் தெரிந்து கொண்டீர்?''

''கொள்ளிடத்தில் படகு புறப்படும் சமயத்துக்கு அந்த வீர வைஷ்ணவன் வந்து படகில் ஏறிக் கொண்டான். அவன் கந்தமாறனின் சிநேகிதனோடு பேசிய சில காரமான வார்த்தைகளிலிருந்து எனக்குச் சிறிது சந்தேகம் உதித்தது; அவனும் நம்மைச் சேர்ந்தவனோ என்று. மேலும் கொள்ளிடத்தின் தென்கரையில் அவன் எனக்காகக் காத்துக் கொண்டிருந்ததாகத் தோன்றியது. நம்முடைய அந்தரங்க சமிக்ஞையைச் செய்து காட்டினேன்.



ஆனால் அவன் புரிந்து கொள்ளவில்லை. அதன் பேரில் அவன் நம்மவன் அல்ல என்று தீர்மானித்தேன்....."

"நீர் செய்தது பெரும் பிசகு! முன் பின் தெரியாதவர்களிடம் நம் சமிக்ஞையைச் செய்து காட்டக் கூடாது. நண்பர்களே! இதைக் கேளுங்கள். நம்முடைய காரியம் காஞ்சிபுரத்தில் இருக்கிறது! இலங்கையிலும் இருக்கிறது. இந்த இரண்டு இடங்களிலும் நம்முடைய பரம விரோதிகள் இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் இரண்டு பேரையும் காட்டிலும் நம்முடைய கொடிய விரோதி, முதன்மையான விரோதி, ஆழ்வார்க்கடியான் என்று பொய்ப் பெயர் பூண்டு திரியும் திருமலையப்பன்தான். அவன் நம்மையும் நம் நோக்கத்தையும் அடியோடு நாசம் செய்யக் கூடியவன். நமக்கெல்லாம் இணையில்லாத் தலைவியாக உள்ள தேவியை அவன் கொண்டு போகப் பார்க்கிறவன். அடுத்தபடியாக அவனை உங்களில் யாராவது எங்கே கண்டாலும், எந்த நிலைமையில் சந்தித்தாலும், கையில் உள்ள ஆயுதத்தை உடனே அவன் மார்பில் பாய்ச்சிக் கொன்றுவிடுங்கள். ஆயுதம் ஒன்றுமில்லாவிட்டால் கையினால் அவனுடைய மென்னியைத் திருகிக் கொல்லுங்கள். அல்லது சூழ்ச்சியால் விஷத்தைக் கொடுத்துக் கொல்லுங்கள்; அல்லது வெள்ளத்தில் தள்ளி முதலைப் பசிக்கு இரையாக்குங்கள். அல்லது ஏதாவது சாக்குச் சொல்லிப் பாறை உச்சிக்கு அழைத்துப் போய் அங்கிருந்து பிடித்துத் தள்ளிக் கொன்றுவிடுங்கள். தேள், நட்டுவாக்களி, பாம்பு முதலியவற்றைக் கண்டால் எப்படி இரக்கம் காட்டாமல் கொல்லுவீர்களோ, அப்படிக் கொன்றுவிடுங்கள்! துர்க்கா தேவிக்கோ, கண்ணகியம்மனுக்கோ பலிகொடுத்து விட்டால், இன்னும் விசேஷம். எப்படியும் அவன் உயிரோடு இருக்கும் வரையில் நம்முடைய நோக்கத்துக்கு இடையூறாகவே இருப்பான்!...."

"ரவிதாஸரே! நீங்கள் இவ்வளவு தூரம் வற்புறுத்திச் சொல்வதற்கு அவன் பெரிய கைகாரனாயிருக்க வேண்டும். அப்படிப்பட்டவன் யார்?"

"யாரா? அவன் பயங்கர ஆற்றல் படைத்த ஒற்றன்!"

"யாருடைய ஒற்றன்?"

"எனக்கே அது வெகு காலம் சந்தேகமாகத்தான் இருந்தது. சுந்தர சோழரின் ஒற்றனோ, ஆதித்த கரிகாலனின் ஒற்றனோ என்று சந்தேகப்பட்டேன். இல்லையென்று கண்டேன். பழையாறையில் இருக்கிறாளே, ஒரு கிழப் பாதகி, — அந்த பெரிய பிராட்டியின் ஒற்றனாயிருக்கலாம் என்று இப்போது சந்தேகிக்கிறேன்."

"ஆகா! அப்படியா? சிவபக்தியில் மூழ்கி, ஆலயத் திருப்பணி செய்துவரும் அந்தச் செம்பியன்தேவிக்கு ஒற்றன் எதற்கு?"

"அதெல்லாம் பொய். இந்த முன் குடுமிக்காரனின் வீர வைஷ்ணவம் எப்படி வெளி வேஷமோ, அப்படித்தான் அந்த முதிய ராணியின் சிவ பக்தியும். பெற்ற பிள்ளைக்கே பெரும் சத்துருவாயிருக்கும் பிசாசு அல்லவா? அதனால்தானே, அவளுடைய சொந்தச் சகோதரனாகிய மழவரையன் கூட அவளுடன் சண்டை பிடித்துக்கொண்டு, பழுவேட்டரையரின் கட்சியில் சேர்ந்திருக்கிறான்?"

"ரவிதாஸரே! அந்த முன் குடுமி வைஷ்ணவனைப் போல் இன்னும் யாராவது உண்டோ?"

"குடந்தையில் ஒரு ஜோசியன் இருக்கிறான். அவன் பேரிலும் எனக்குச் சந்தேகம் இருக்கிறது. வருகிறவர் போகிறவர்களுக்கு ஜோசியம் சொல்லுவது போல் சொல்லி வாயைப் பிடுங்கிப் பல விஷயங்களைத் தெரிந்து கொள்கிறான். அவனிடம் நீங்கள் யாரும் போகவே கூடாது. போனால் எப்படியும் நிச்சயமாக ஏமாந்துபோவீர்கள்."

"அவன் யாருடைய ஒற்றன் என்று நினைக்கிறீர்கள்?"

"இன்னும் அதை நான் கண்டு பிடிக்க முடியவில்லை. ஒரு வேளை தற்போது இலங்கையில் இருக்கும் போலி இளவரசனுடைய ஒற்றனாக இருக்கலாம். ஆனால் ஜோசியனைப் பற்றி அவ்வளவு கவலை எனக்குக் கிடையாது. அவனால் பெரிய தீங்கு எதுவும் நேர்ந்துவிடாது. வைஷ்ணவன் விஷயத்திலேதான் எனக்குப் பயம்! அவனைக் கண்ட இடத்திலே தேள், நட்டுவாக்களி, பாம்பை அடித்துக் கொல்வது போல் இரக்கமின்றிக் கொன்றுவிட வேண்டும்!"

# ‘என்னை காலேஜ் கிரிக்கெட் கோஷ்டியின் காப்டனாகத் தேர்ந்தெடுத்தார்கள்!’



ஆனால், சில மாதங்களுக்கு முன் எனக்கு ஒரே சோர்வு, பலவீனம். அதன் விளைவாக என்னை கிரிக்கெட் கோஷ்டியில் சேர்க்கவில்லை. நான் ஒரு டாக்டரைப் பார்த்தேன்.

டாக்டர் சொன்னார்: ‘படிப்புக்கும் விளையாட்டுக்கும் தேவையான அதிக சக்தியைப் பெற தினமும் நீ ஹார்லிக்ஸ் சாப்பிடு.’



ஹார்லிக்ஸ் அற்புதமாக பயனளித்தது! என்னுடைய விறுவிறுப்பான ஆட்டத்தைக் கண்டு என்னை கோஷ்டியின் காப்டனாகவே தேர்ந்தெடுத்தார்கள். இப்பொழுது நான் தினமும் ஹார்லிக்ஸ் சாப்பிடுகிறேன்.

## ஹார்லிக்ஸ் உதவியால் முன்னேறினேன்

இளம் வயதினரான ஆண்களும் பெண்களும் இழக்கும் சக்திக்கு ஈடுகட்ட ஹார்லிக்ஸ் உதவுகிறது. ஹார்லிக்ஸ் சாப்பிடுவதனால் தெம்புடன் வேலை செய்ய முடிகிறது. சோர்வு ஏற்படுவதில்லை, சிறந்த ஆரோக்கியத்துடன் இருக்க முடிகிறது. இளைஞர்களுக்கும் வயதானவர்களுக்கும் ஒரே போல் பலன் தரும் உணவு ஹார்லிக்ஸ். தினமும் ஹார்லிக்ஸ் அருந்துங்கள்!




ஆடைச் சத்து நிறைந்த பாலுடன் கோதுமை மாவு மற்றும் மால்டெட் பார்லியின் போஷாக்குச் சத்துக்கள் சேர்த்து தயாரிக்கப்பட்டது

# ஹார்லிக்ஸ் அதிக சக்தியை அளிக்கிறது!

இதையெல்லாம் மருத மரத்தின் மறைவிலிருந்து கேட்டுக் கொண்டிருந்த ஆழ்வார்க்கடியானுக்கு மெய் நடுங்கியது; உடம்பெல்லாம் வியர்த்தது. அந்த மரத்தடியிலிருந்து உயிரோடு தப்பித்துப் போகப் போகிறோமா என்றே அவனுக்குச் சந்தேகம் உண்டாகி விட்டது.

போதும் போதாதற்கு அந்தச் சமயம் பார்த்து அவனுக்குத் தும்மல் வந்தது. எவ்வளவோ அடக்கிக் கொள்ளப் பார்த்தும் முடியவில்லை. துணியை வாயில் வைத்து அடைத்துக் கொண்டு நச்சென்று தும்பினான்.

அந்தச் சமயம் மேலக் காற்று நின்றிருந்தது. காட்டு மரங்களின் மர்மர சத்தமும் நின்று போயிருந்தது.

ஆகையால் திருமலையப்பனின் அடக்கிய தும்மல் சத்தம் பக்கத்தில் பேசிக் கொண்டிருந்த சதிகாரர்களுக்குச் சிறிது கேட்டு விட்டது.

''அந்த மருதமரத்துக்குப் பின்னால் ஏதோ சத்தம் கேட்கிறது. சுளுந்தைக் கொண்டு போய் என்னவென்று பார்!'' என்றான் ரவிதாஸன்.

சுளுந்து பிடித்தவன் மரத்தை நாடி வந்தான். அவன் அருகில் வர வர, வெளிச்சம் அதிகமாகி வந்தது. ஆச்சு! இதோ மரத்தின் முடுக்கில் அவன் திரும்பப் போகிறான். திரும்பிய உடனே சுளுந்து வெளிச்சம் தன் மேல் நன்றாய் விழப் போகிறது. அப்புறம் என்ன நடக்கும்? தப்பிப் பிழைத்தால் புனர் ஜன்மந்தான்!

திருமலையப்பனின் மார்பு படபடவென்று அடித்துக் கொண்டது. தப்புவதற்கு வழி உண்டா என்று சுற்று முற்றும் பார்த்தான். வழி காணவில்லை. அண்ணாந்து பார்த்தான். அங்கே மரத்திலிருந்து பிரிந்து சென்ற மரக் கிளையில் ஒரு ராட்சத வௌவால் தலை கீழாகத் தொங்கித் தவம் செய்து கொண்டிருந்தது! உடனே ஒரு யோசனை தோன்றியது. சட்டென்று கைகளை உயர நீட்டி அந்த வௌவாலைப் பிடித்துக் கையில் ஆயத்தமாக வைத்துக் கொண்டான்.

சுளுந்துக்காரன் மரத்தைத் தாண்டி வந்ததும், வௌவாலை அவன் முகத்தின் மீது எறிந்தான்.

சுளுந்து கீழே விழுந்து வெளிச்சம் மங்கியது. வௌவாலின் இறக்கையால் முகத்தில் அடிபட்டவன், ''ஏ! ஏ! என்ன! என்ன?'' என்று உளறினான். பலர் ஓடி வரும் சத்தம் கேட்டது. ஆழ்வார்க்கடியானும் ஓட்டம் பிடித்தான். அடுத்தகணம் அடர்ந்த காட்டுக்குள் புகுந்து மறைந்தான்.

பலர் சேர்ந்து, ''என்ன? என்ன?'' என்று கூச்சலிட்டார்கள். சுளுந்து ஏந்திய ஆள் வௌவால் தன்னைத் தாக்கியது பற்றி விவரம் கூறத் தொடங்கினான். இதெல்லாம் திருமலையப்பனின் காதில் கொஞ்ச தூரம் வரையில் கேட்டுக் கொண்டிருந்தது.

## இருபத்தோராம் அத்தியாயம்

# திரை சலசலத்தது!

ஒரே சமயத்தில் ஒருவனுக்குள்ளே இரண்டு மனங்கள் இயங்க முடியுமா? முடியும் என்று அன்றைக்கு வந்தியத்தேவனுடைய அனுபவத்திலிருந்து தெரிய வந்தது.

சோழ வள நாட்டிற்குள்ளேயே வளம் மிகுந்த பிரதேசத்தின் வழியாக அவன் போய்க் கொண்டிருந்தான். நதிகளில் புதுப்புனல் பொங்கிப் பெருகிக்கொண்டிருந்த காலம். கணவாய்கள், மதகுகள், மடைகளின் வழியாக வாய்க்கால்களிலும் வயல்களிலும் குபுகுபுவென்று ஜலம் பாய்ந்து கொண்டிருந்தது. எங்கே பார்த்தாலும் தண்ணீர் மயமாயிருந்தது. சோழதேசத்தை வளநாடு என்றும், சோழ மன்னனை வளவன் என்றும் கூறுவது எவ்வளவு பொருத்தமானது? — இப்படி எண்ணிய உடனே சோழநாட்டுக்கும் சோழ மன்னனுக்கும் ஏற்பட்டிருந்த அபாயங்கள் அவன் நினைவுக்கு வந்தன. இந்த நிலைமையில் தன்னுடைய கடமை என்ன? இளவரசர் கரிகாலர் கொடுத்த ஓலையை மட்டும் சக்கரவர்த்தியிடம் சேர்ப்பித்துவிட்டுத் தன் கடமை தீர்ந்தது என்று இருந்து விடுவதா? இந்த இராஜ குலத் தாயாதிக் காய்ச்சலிலும் பூசலிலும் நாம் எதற்காகத் தலையிட்டுக் கொள்ள வேண்டும்? சோழநாட்டுச் சிம்மாசனத்துக்கு யார் வந்தால் தான் நமக்கு என்ன? பார்க்கப் போனால், நம்முடைய குலத்தின் பூர்வீகப் பகைவர்கள்தானே இவர்கள்? சோழர்களும் கங்கர்களும் வைதும்பர்களும் சேர்ந்து கொண்டுதானே வாணகோப்பாடி இராஜ்யமே இல்லாதபடி செய்து விட்டார்கள்? இன்றைக்கு ஆதித்த கரிகாலர் நம்மிடம் அன்பாக

இருந்ததினால் அந்த அநீதியெல்லாம் மறைந்து போய் விடுமா? சேச்சே! அந்தப் பழைய சம்பவங்களை அநீதியென்றுதான் எப்படிச் சொல்ல முடியும்? அரசர்கள் என்றால், ஒருவருக்கொருவர் சண்டையிடுவது இயற்கை. அது போலவே வெற்றியும் தோல்வியும் மாறி மாறி வருவதும் இயற்கை. வென்றவர்கள் மீது தோற்றவர்கள் கோபங் கொள்வதில் என்ன பயன்? நம்முடைய மூதாதைகள் நல்ல நிலைமையில் இருந்த போது அவர்களும் மற்ற அரசர்களைக் கதிகலங்கத்தானே அடித்தார்கள்? அடியோடு அழித்துவிடத்தானே பார்த்தார்கள்? ஆ! அது என்ன பாடல்? — இதோ ஞாபகம் வந்து விட்டது!

**"சேனை தலைமயாக்கிச்; செங்குருதி நீர் தேக்கி**
**ஆனை மிதித்த அருஞ்சேற்றில்-மானபரன்**
**பாவேந்தர் தம்வேந்தன் வானவன் பறித்து**
**மூவேந்தர் தங்கள் முடி!" [நட்டான்**

இப்படியெல்லாம் போர்க்களத்தில் கொடூரமான காரியங்களை நம் முன்னோர்களும் செய்திருக்கிறார்கள். போர்க்களத்தில் தோற்றவர்களின் கதி எப்போதும் அதோகதிதான். இராமரைப் போலவும் தரும புத்திரரைப் போலவும் எல்லா அரசர்களும் கருணை வள்ளல்களாக இருந்துவிட முடியுமா? அப்படி அவர்கள் இருந்தபடியினால் தான் காட்டுக்குப் போய்த் திண்டாடினார்கள்! அவர்கள் வீர புருஷர்களாயிருந்தும், வீரர்களின் துணையிருந்தும், வெகுவாகக் கஷ்டப்பட்டார்கள். இராஜரீகத்தில் கருணை என்பதே கூடாது. பார்க்கப் போனால் சோழ குலத்தவர்கள் சிறிது கருணையுள்ளவர்கள் என்றே சொல்ல வேண்டும். எதிரிகளையும் முடியுமானால் நண்பர்களாக்கிக் கொள்ளவே பார்க்கிறார்கள். அதற்காகக் குலம் விட்டுக் குலம் கலியாண சம்பந்தமும் செய்து கொள்கிறார்கள்! சுந்தர சோழரின் தந்தை அரிஞ்சய சோழர் வைதும்பராயன் மகளைத் திருமணம் செய்து கொள்ளவில்லையா? அழகுக்குப் பெயர் போன அந்தக் 'கல்யாணி'யின் மகனாயிருப்பதினால்தானே சுந்தர சோழரும் அவருடைய மக்களும்கூட சௌந்தரியத்தில் சிறந்து விளங்குகிறார்கள்?.... ஆ! அழகி என்றதும்; அந்தக் குடந்தை நகரத்து மங்கை—அரசலாற்றங்கரைப் பெண்மணியின் நினைவு வருகிறது. நினைவு புதிதாக எங்கிருந்தோ வந்துவிடவில்லை. அவனுடைய உள்ளத்துக்குள்ளேயே கனிந்து கொண்டிருந்த நினைவுதான்.

**வ**ந்தியத்தேவனுடைய வெளி மனம் சோழ நாட்டின் இயற்கை வளங்களைப் பற்றியும் இராஜரீகக் குழப்பங்களைப் பற்றியும் எண்ணிக் கொண்டிருக்கையில் அவனுடைய உள் மனம் அந்த மங்கையினிடத்திலேயே ஈடுபட்டிருந்தது. இப்போது உள் மனம், வெளி மனம் இரண்டும் ஒத்து அம்மங்கையைக் குறித்துப் பட்டவர்த்தனமாகச் சிந்திக்கத் தொடங்கின. பிறகு, வெளியில் எந்த அழகான இயற்கைப் பொருளைப் பார்த்தாலும் அந்த மங்கையின் அவயவங்களுடன் ஒப்பிடத் தோன்றின. வழுவழுப்பான மூங்கிலைப் பார்த்ததும் அவளுடைய தோள்கள் நினைவு வந்தன. ஓடைகளில் மண்டிக் கிடந்த குவளை மலர்கள் அவளுடைய கண்களுக்கு உவமையாயின. பங்கஜ மலர்கள் அவளுடைய தங்க முகத்துக்கு இணைதானா என்ற ஐயம் தோன்றியது. நதியோர மரங்களில் குலுங்கிக் கொண்டிருந்த மலர்களில் வண்டுகள் செய்த ரீங்காரத்தை அவள் குரலின் ஒலிக்கு உவமை சொல்வது சரியாகுமா? இப்படியெல்லாம் கவிகள் கற்பித்திருக்கிறார்களே தவிர, உண்மையில் இவையெல்லாம் எங்கே, அந்த மங்கையின் சௌந்தரியம் எங்கே? அவளுடைய திருமுகத்தைப் பார்த்த போது மெய் சிலிர்த்ததே! இப்போது நினைத்துப் பார்க்கும் போதும்கூட நெஞ்சு விம்முகிறதே! இந்தப் பூக்களையும் வண்டுகளையும் பார்த்தால் அத்தகைய மெய் சிலிர்ப்பு உண்டாகவில்லையே?...... சேச்சே! முதியோர்கள் நமக்குச் செய்த உபதேசத்தை யெல்லாம் மறந்து விட்டோம்! பெண்களின் மோகத்தைப் போல் உலக வாழ்க்கையில் பொல்லாத மாயை வேறொன்றுமில்லை. வாழ்க்கையில் வெற்றிபெற விரும்புவோன் பெண்களின் மோக வலையில் விழவே கூடாது. விழுந்தால் அவன் ஒழிந்தான்! கோவலன் கதைதான் அந்த விஷயத்தை அபூர்வமாய் எடுத்துச் சொல்கிறதே! கோவலன் மட்டும் என்ன? இந்த நாளில் வீராதி வீரரும் சோழ நாட்டிலே இணையற்ற செல்வாக்கு உள்ளவருமான பெரிய பழுவேட்டரையரைப் பற்றி மக்கள் பரிகாசம் பேசுங் காரணமும் அதுதானே? ஆனால் மக்கள் உண்மை அறியாதவர்கள். மூடு பல்லக்கிலே வைத்துப் பழுவேட்டரையர் யாரைக் கொண்டு வருகிறார் என்று மக்களுக்குத் தெரியாது! ஆகையால் மூடத்தனமாகப் பேசுகிறார்கள்.

ஆனாலும், அந்த மதுராந்தகத் தேவர் தம்மை அவ்வளவு கேவலப்படுத்திக் கொள்ள வேண்டியதில்லை. சிச்சி! மூடு பல்லக்கில் உட்கார்ந்து கொண்டு, பழுவேட்டரையரின் ராணியின் ஸ்தானத்தில் மறைந்து கொண்டு, ஊர் ஊராய்ப் போவதா? இதுதான் ஆண்மைக்கு அழகா? இப்படியாவது இராஜ்யம் சம்பாதிக்க வேண்டுமா? இப்படிச் சம்பாதித்த இராஜ்யத்தைத்தான் அவரால் காப்பாற்றிக் கொள்ள முடியுமா? பழுவேட்டரையர் முதலியோரை நம்பி அவர்களுக்கு உட்பட்டுத்தானே இராஜ்ய பரிபாலனம் செய்ய வேண்டும்? இந்த விஷயத்தில் சுந்தர சோழ சக்கரவர்த்தி செய்து வருவதே அவ்வளவு சிலாக்கியமில்லை தான்! பழுவேட்டரையர் போன்றவர்களுக்கு இவ்வளவு அதிகாரமும் செல்வாக்கும் அவர் அளித்திருக்கக் கூடாது. அதிலும் மணி மணியாக இரண்டு அருமைப் புதல்வர்கள் இருக்கும்போது? நாடெல்லாம் அதிசயிக்கும் அறிவும் திறனும் உடைய புதல்வி ஒருத்தியும் இருக்கும்போது?... அந்த மங்கை, ஜோதிடர் வீட்டில் பார்த்தவள், ஆற்றங்கரையில் பேசியவள், — அவள் முகம் யாருடைய ஜாடையா யிருக்கிறது?..... அப்படியும் இருக்கலாமோ? — பைத்தியக்காரத்தனம்! ஒரு நாளும் அப்படி யிருக்க முடியாது! — ஏன் இருக்க முடியாது? ஒரு வேளை அவ்விதம் இருந்தால், நம்மைப் போன்ற அறிவீனன் வேறு யாரும் இல்லை! நம்மைப் போன்ற துரதிர்ஷ்டசாலியும் இல்லை! இலங்கை முதல் விந்திய பர்வதம் வரையில் எந்தப் பெண்ணரசியின் புகழ் பரந்து விரிந்து பரவி யிருக்கிறதோ, அவளிடம் நாம் எப்பேர்ப்பட்ட காட்டு மிராண்டியைப் போல் நடந்து கொண்டோம்! — அப்படி இருக்கவே இருக்காது! நாளைக்கு அவளிடம் எப்படி இளவரசரின் ஓலையுடனே சென்று முகத்தைக் காட்ட முடியும்?

இப்படியாக என்னவெல்லாமோ வானத்தையும் பூமியையும் சேர்த்து எண்ணமிட்டுக் கொண்டு வந்தியத்தேவன் காவேரிக் கரையோடு வந்து திருவையாற்றை அடைந்தான். இவன் காவேரியின் தென்கரையில் நிற்க, திருவையாறு வடகரையில் இருந்தது. அந்த ஊரின் வளமும் அழகும் அவன் உள்ளத்தைக் கொள்ளை கொண்டன. அது திருவையாறுதானா என்று கேட்டுத் தெரிந்துகொண்டான். அந்த அற்புத க்ஷேத்திரத்தின் மகிமையைப் பற்றி அவன் கேள்விப்பட்டிருந்ததெல்லாம் உண்மைக்குக் கொஞ்சம் குறைவாகவே தோன்றியது. ஞானசம்பந்தர் தேவாரத்தில் உள்ள வர்ணனை இங்கே அப்படியே தத்ரூபமாய்க் காண்கிறது. மூந்நூறு ஆண்டு காலத்தில் மாறுதல் ஒன்றுமேயில்லை. அதோ காவேரியின் கரையில் உள்ள மரங்கள் என்ன செழிப்பாய் வளர்ந்திருக்கின்றன! பல மரங்களில் எவ்வளவு பெரிய பெரிய பலாக் காய்கள் தொங்குகின்றன! இந்த மாதிரி தொண்டை மண்டலத்தில் எங்கும் பார்க்கவே முடியாதுதான்! ஆகா! வளமான இடங்களுக்கென்று குரங்குகள் எங்கிருந்தோ வந்து விடுகின்றன! அவை கிளைக்குக் கிளை தாவுவது எவ்வளவு அழகாயிருக்கிறது? சம்பந்தப் பெருமான் என்ன சொல்லியிருக்கிறார்? இதோ ஞாபகம் வருகிறது! திருவையாற்று வீதிமுனை அரங்கங்களில் பெண்கள் நடனம் ஆடுகிறார்கள். அந்த ஆடலுக்கேற்ற பாடலோடு மத்தளச் சத்தமும் முழங்குகிறது. அந்த முழக்கத்தைக் கேட்ட குரங்குகள் மேகங்களின் கர்ஜனை என்று எண்ணி உயர்ந்த மரங்களின் உச்சாணிக் கிளைகளில் ஏறி மழை வருமா என்று வானத்தைப் பார்க்கின்றன! அடாடா! இன்றைக்கும் எவ்வளவு பொருத்தமாயிருக்கிறது! உயர்ந்த மரங்களில் உச்சாணிக் கிளைகளில் குரங்குகள் ஏறுகின்றன! அது மட்டுமா? ஆடல் பாடல்களுக்குரிய இனிய சத்தங்களும் ஊருக்குள்ளிருந்து



வருகின்றன. யாழ், குழல், முழவு, தண்ணுமை முதலிய கருவிகளின் ஒலியுடன் சதங்கைச் சத்தமும் சேர்ந்து ஒலிக்கின்றன. இங்கே ஆடுகிறவர்கள் கடம்பூர் சம்புவரையர் மாளிகையில் ஆடியவர்களைப் போல் குரவைக் கூத்தர்கள் அல்ல. ஆகா! இங்கே கேட்பது பண்பட்ட இனிய கானம். கலைச் சிறப்பு வாய்ந்த பரத நாட்டியம் ஆடுவோரின் சதங்கை ஒலி. அதோ, ஆட்டி வைக்கும் நடன ஆசிரியர்கள் கையில் பிடித்த கோலின் சத்தம் கூடச் சேர்ந்து வருகிறதே!

**"கோலோடக் கோல்வளையார் கூத்தாடக்
குவிமுகையார் முகத்தினின்று
சேலோடச் சிலையாடச் சேயிழையார்
நடமாடுந் திருவையாறே!"**

ஆகா! சம்பந்த சுவாமிகள் சிறந்த சிவ பக்தர்; அதைக் காட்டிலும் சிறந்த ரஸிகர்! அவர் அன்றைக்கு வர்ணனை செய்தபடியே இன்றைக்கும் இந்தத் திருவையாறு விளங்குகிறதே! இப்படிப் பட்ட ஊரில் ஒரு நாள் தங்கி ஆடல் பாடல் விநோதங்களைப் பார்த்துவிட்டு, ஐயாறப்பரையும் அறம் வளர்த்த நாயகி அம்மனையும் தரிசித்து விட்டுத்தான் போக வேண்டும்! அடாடா! காவேரியின் கரையில் எத்தனை பக்தர்கள் உட்கார்ந்து அனுஷ்டானம் செய்கிறார்கள்? பட்டை பட்டையாக அவர்கள் திருநீறு அணிந்திருப்பது எவ்வளவு களையாயிருக்கிறது? சில சமயம் ஆடல்பாடல் ஒலிகளை அமுக்கிக் கொண்டு 'நமசிவாய' மந்திரத்தின் ஒலி கேட்கிறதே! ஏன்? அதோ சம்பந்தரின் தேவாரத்தையே யாரோ இனிய குரலில் அருமையாகப் பாடுகிறார்களே? இசைக்கும் கலைக்கும் என்றே இறைவன் பணித்த ஊர் இந்தத் திருவையாறு போலும்! இந்த ஊரில் கட்டாயம் ஒரு நாள் தங்கிப் பார்த்து விட்டுத்தான் போக வேண்டும்! தஞ்சாவூருக்கு அவசரமாகப் போய்த்தான் என்ன பயன்? கோட்டைக்குள் பிரவேசிக்க முடிகிறதோ, என்னமோ? அப்படிப் பிரவேசித்தாலும் மகாராஜாவின் பேட்டி கிடைக்குமா? மகாராஜாவைத்தான் இரண்டு பழுவேட்டரையர்களுமாகச் சேர்ந்து சிறையில் வைத்திருப்பது போல் வைத்திருக்கிறார்களாமே?.... காவேரியின் வட கரைக்குப் போக வேண்டியதுதான்!

இந்த முடிவுக்கு வந்தியத்தேவன் வந்துவிட்ட தருணத்தில் ஒரு சம்பவம் நடந்தது. மேற்குத் திசையிலிருந்து காவேரிக் கரையோடு ஒரு பல்லக்கு வந்தது. பல்லக்குக்கு முன்னாலும் பின்னாலும் சில காவல் வீரர்களும் வந்தார்கள். வந்தியத் தேவனுக்கு ஏதோ ஒரு சந்தேகம் தோன்றியது. பல்லக்கு அருகில் வருகிற வரையில் அங்கேயே நின்று காத்துக் கொண்டிருந்தான். அவன் நினைத்தபடியே இருந்தது. பல்லக்கை மூடியிருந்த வெளித் திரையில் பனைமரத்தின் இலச்சினைச் சித்திரம் காணப்பட்டது! ஆஹா! கடம்பூரிலிருந்து வருகிற பல்லக்குத்தான் இது' நாம் குடந்தை வழியாக வர, இவர்கள் வேறொரு வழியில் வந்திருக்கிறார்கள். ஆனால் பழுவேட்டரையரைக் காணோம்! அவர் வேறு எங்கேயாவது வழியில் தங்கி விட்டார் போலும்!

பல்லக்கு தஞ்சாவூர் இருந்த தென் திசை நோக்கித் திரும்பியது. அவ்வளவுதான். வந்தியத்தேவன் திருவையாற்றில் தங்கும் எண்ணத்தை விட்டு விட்டான். அந்தப் பல்லக்கை பின் தொடர்ந்து செல்லத் தீர்மானித்தான். என்ன நோக்கத்துடன் அப்படித் தீர்மானித்தான் என்றால், அது அச்சமயம் அவனுக்கே தெரிந்திருக்கவில்லை. பல்லக்கில் வீற்றிருப்பது மதுராந்தகத் தேவர் என்று மட்டும் அவனுக்கு நிச்சயமாய்த் தெரிந்தது. அவர் மேல் ஏற்பட்டிருந்த அருவருப்பு மேலும் சிறிது வளர்ந்தது. ஆனாலும் பல்லக்கைத் தொடர்ந்து கொஞ்சம் போனால், ஏதாவது ஒரு நல்ல சந்தர்ப்பம் ஏற்படலாம். பல்லக்கைச் சுமப்பவர்கள் அதைக் கீழே வைக்கலாம். ஏதேனும் ஒரு காரணத்துக்காக இளவரசர் மதுராந்தகர் வெளிப்பட்டு வரலாம். அச்சமயம் அவருடன் பழக்கம் செய்து கொள்ளலாம். அது தஞ்சாவூர்க் கோட்டைக்குள் பிரவேசிக்கவும், சக்கரவர்த்தியைப் பார்க்கவும் பயன் படலாம். அதற்குத் தகுந்தபடி ஏதாவது கொஞ்சம் பேசி வேஷம் போட்டால் போகிறது. தந்திர மந்திரங்களைக் கையாளா விட்டால் எடுத்த காரியம் கைகூடாது அல்லவா? அதிலும் இராஜாங்கக் காரியங்களில்?

எனவே, பல்லக்கையும் பரிவாரங்களையும் முன்னால் போக விட்டுச் சற்றுப் பின்னாலேயே வந்தியத்தேவன் போய்க் கொண்டிருந்தான். ஆனால், அவன் எதிர்பார்த்த சந்தர்ப்பம் ஒன்றும் கிட்டவில்லை. காவேரிக்கும் தஞ்சாவூருக்கும் மத்தியிலிருந்த மற்றும் நாலு நதிகளைக் கடந்தாகி விட்டது. அப்படியும் பல்லக்குக் கீழே வைக்கப்படவில்லை.

ஒரே மூச்சாகப் போய்க் கொண்டிருந்தது. அதோ சற்றுத் தூரத்தில் தஞ்சாவூர்க் கோட்டை மதிலும் வாசலும் தெரியத் தொடங்கி விட்டன. கோட்டைக்குள் பல்லக்குப் போய்விட்டால், அப்புறம் அவன் எண்ணம் கைகூடப் போவதில்லை. அதற்குள் தைரியமாகவும் துணிச்சலாகவும் ஏதேனும் ஒன்று செய்தாக வேண்டும். என்னதான் வந்து விடும்? தலையா போய் விடும்? அப்படிப் போனால் தான் போகிறதே? — எடுத்த காரியத்தை முடிக்காமல் உயிரோடு திரும்பிப் போவதில் என்ன லாபம்? இதற்கெல்லாம் அடிப்படையில் மதுராந்தகத் தேவர் பேரில் வந்தியத்தேவனுக்குக் கோபம் வேறே இருந்தது. பல்லக்கின் மூடுதிரையைக் கிழித்தெறிந்து உள்ளேயிருப்பது பெண்ணல்ல, மீசை முளைத்த ஆண் பிள்ளை என்பதை வெளிப்படுத்த வேண்டும் என்று அவன் கை ஊறியது; அவன் உள்ளம் துடிதுடித்தது.

இதற்கு என்ன வழி என்று அவன் தீவிரமாக யோசித்துக் கொண்டிருக்கையில் பல்லக்கோடு சென்ற பரிவாரங்களில் ஒருவன், சற்றுப் பின்தங்கி வந்தியத்தேவனை உற்று நோக்கினான்.

''நீ யார் அப்பா? திருவையாற்றிலிருந்து எங்களை ஏன் தொடர்ந்து வருகிறாய்?'' என்று கேட்டான்.

''நான் உங்களைத் தொடர்ந்து வரவில்லை ஐயா! தஞ்சாவூருக்குப் போகிறேன்! இந்தச் சாலைதானே தஞ்சாவூர் போகிறது!'' என்றான் வந்தியத்தேவன்.

''இந்தச் சாலை தஞ்சாவூருக்குத்தான் போகிறது. ஆனால் இதில் முக்கியமானவர்கள் மட்டுமே போகலாம். மற்றவர்களுக்கு வேறு சாலை இருக்கிறது!'' என்றான் வீரன்.

''அப்படியா? ஆனால் நானும் ரொம்ப முக்கியமான மனுஷன்தான்!'' என்றான் வந்தியத்தேவன்.

அதைக் கேட்டு அவ்வீரன் புன்னகை செய்து விட்டு, ''தஞ்சைக்கு எதற்காகப் போகிறாய்?'' என்றான்.

''என் சித்தப்பா தஞ்சையில் இருக்கிறார். அவருக்கு நோய் என்றறிந்து பார்க்கப் போகிறேன்'' என்று கூறினான் வந்தியத்தேவன்.

''உன் சித்தப்பா தஞ்சையில் என்ன செய்கிறார்? அரண்மனையில் உத்தியோகம் பார்க்கிறாரா?''

''இல்லை, இல்லை; சந்திரத்தில் மணியக்காரராயிருக்கிறார்!''

''ஓகோ! அப்படியா! சரி, எங்களுக்கு முன்னால் நீ போவதுதானே? ஏன் பின்னாலேயே வந்து கொண்டிருக்கிறாய்?''

''குதிரை களைத்துப் போயிருக்கிறது, ஐயா! அதனாலேதான்! இல்லாவிடில் உங்கள் முதுகை பார்த்துக் கொண்டே வருவதில் எனக்கு என்ன திருப்தி?''

இப்படிப் பேசிக் கொண்டே வந்தியத்தேவன் பல்லக்கின் அருகில் வந்து விட்டான். உடனே, அவன் மூளையை வரட்டிக் கண்டு பிடிக்க முயற்சித்த உபாயமும் புலப்பட்டு விட்டது. குதிரையைக் கால்களால் அமுக்கி, முகக் கயிற்றை இழுத்து, பல்லக்கின் பின் தண்டைத் தூக்கியவர்களின் பேரில் விட்டடித்தான். அவர்கள் பயத்துடன் திரும்பிப் பார்த்தார்கள். வந்தியத்தேவன் உடனே, ''மகாராஜா! மகாராஜா! பல்லக்குத் தூக்கும் ஆள்கள் என் குதிரையை இடிக்கிறார்கள்! ஐயோ! ஐயோ!'' என்று கத்தினான். பல்லக்கை மூடியிருந்த திரை சலசலத்தது. **(தொடரும்)**

SHILPI SOM 8/68 TAM

White

det

whitens while it washes clean

டெட் சலவையின் மேன்மை,
வெண்மையுடன் தூய்மை

டெட் பவுடரினால் மட்டும்தான் உங்கள்
வெள்ளைத் துணிகளை பளிச்சிடும் வெண்மையுடனும்
வண்ணத் துணிகளை துப்புரவாகவும்
சலவை செய்ய முடியும்.

ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிட்.,
பம்பாய்

# வாஸவேச்வரம்

## எழுத்தில் புதுமை



முழுக்க முழுக்க ஒரு புதுமையான நாவலைத் தமிழுக்கு அளித்துள்ளார் ஆசிரியை ''கிருத்திகா''. புதுமையாக இப்போதெல்லாம் ஒரே செட்டில் நாடகம் நடத்துகிறார்களே அதே மாதிரி வாஸவேச்வரம் என்ற கிராமத்தில் மட்டும் நடக்கும் நிகழ்ச்சிகளை வைத்துக் கொண்டே ஆவலுடன் படிக்கத் தூண்டும் ஒரு நாவலை உருவாக்கியிருக்கிறார் ஆசிரியை. ஒரு கிராமத்து மக்கள் ஆண் பெண் குழந்தைகள் அடங்கலும் இந்த நாவலின் கதாபாத்திரங்களாக வந்து போவதால், ஞாபக சக்திக்குப் பேர் போன வாசகன்கூடச் சற்று மயங்க நேரிடலாம், பாத்திரங்களை இனம் பிரித்து அறிய முடியாமல். இருந்தாலும் நினைவில் நிற்கும் பாத்திரங்களும் உண்டு.

வாஸவேச்வரத்தின் துன்பங்களுக்கும், பாபங்களுக்கும் காரணமாக அமைகிறவர் சுப்புக்குட்டி சாஸ்திரி. அவர் காதல் தீ கட்டெரித்த இந்திரனை வர்ணித்த விதம் வாஸவேச்வரத்து ஆண் பெண்கள் சிலர் மனத்தில் காம விகாரத்தை ஏற்படுத்தி விடுகிறது. பகவந் நாமாவைக் கேட்டுப் பக்திமார்க்கத்தில் ஒழுக வேண்டிய ச்ரோதாக்களை, சுப்புக்குட்டியின் பிரவசன பாணி 'சோதாக்கள்' ஆக்கிவிடுகிறது!

நாவலில் கதையம்சம், மையக் கருத்து என்றெல்லாம் ஒன்றுமே அமையாததும் புதுமைதான். நூல் நெடுகிலும் பாத்திரங்கள் வருவதும் போவதும் அவரவர்களுடைய ஆசாபாசங்களை ஒளிவு மறைவில்லாமல், பல சமயங்களில் விரசம் தோன்ற, வெளியிடுவதும் இந்த நாவலின் மற்றொரு புதுமை. முழுக்க முழுக்க நல்லவர்களையும், முழுக்க முழுக்கத் தீய குணமுடையோரையும் மோத விட்டு எழுதப்பட்ட நாவல்களின் பாணியிலிருந்து இது வேறுபட்டு ஆண் பெண் இருபாலாருக்குள்ளேயே இருக்கும் நல்ல தீய குணங்களுக்குள் நிகழும் போராட்டத்தை ஆசிரியை திருப்தியாகவே செய்திருக்கிறார் என்று சொல்ல வேண்டும். கதையின் ஊடே வலுவான அல்லது திடுக்கிடும் சம்பவம் ஏதுமில்லை என்று நினைத்தாரோ என்னவோ ஆசிரியை நாவலின் இறுதிக் கட்டத்தில், ஊர் நபர்கள் எல்லாரையும்விட கௌரவமான மதிப்புக்குகந்த சந்திரசேகர அய்யரை அநாவசியமாகக் கொலை செய்து விடுகிறார்.

நாகர் கோவில் பக்கத்து மலையாளம் கலந்த பிராம்மணக் கொச்சை மொழியில் கதாபாத்திரங்கள் பேசுவதும் ஒரு புதுமைதான். திருநெல்வேலிக்கு வடக்கேயுள்ள தமிழர்களுக்கு இந்தப் பாத்திரங்கள் உபயோகிக்கும் சில பதங்களுக்குப் பொருள் தெரியாமலேயே போய் விடலாம்! இவற்றுக்கு அடிக் குறிப்பாக விளக்கம் தந்திருந்தால் தெளிவாக இருந்திருக்கும்.

கிருத்திகாவின் நடை இந்தக் கொச்சைத் தமிழையும், பச்சைக் (அல்லது மஞ்சள்?) கதையையும் மட்டும் சொல்வதற்காக அமைந்ததாகப் படவில்லை. மேலும் உயர்வான சிருஷ்டிகளைப் படைக்கும் ஆற்றல் அவருக்கு இருப்பது இந்தக் கதையை அவர் நடத்தும் முறையிலிருந்தே தெரிகிறது. அர்த்தபுஷ்டியான கிண்டலும் கேலியும் பின்னிப் பிணையும் வசனங்கள், அழுத்தமான பாத்திரப் படைப்பு, மனக்கிலேசத்தையும் ஆசாபாசங்களையும் துல்லியமாக எடுத்துக் காட்டும் ஓர் அநாயாச லாகவம் எல்லாமே அவரை ஒரு முதல்தர எழுத்தாளராக நமக்கு அறிமுகப்படுத்துகின்றன. மக்கள் சமுதாயத்தை ஊன்றிப் பார்த்திருக்கும் அவருக்குப் பரம்பரை கதாசிரியருக்குப் பண்பாட்டின் அடிப்படையில் ஊறிப் போயிருக்கும் ஒரு போலி கௌரவம், கெடுதலை அமுக்கி நல்லதை மிகைப்படுத்தும் ஒரு செயற்கை மேல் பூச்சு மோகம் எல்லாம் இல்லை என்று தெரிகிறது. உடலால் கெட்டவர்கள் சிலர் என்றால், உலகில் உள்ளத்தால் கெட்டவர்கள் பலர் இருக்கலாம். உடலால் கெடுவதைப் போலவே உள்ளத்தால் கெடுவதும் குற்றமாக இருக்கலாம். ஆனால் வாழ்க்கை நடைமுறைக்கு உள்ளம் ஒரு இரும்புப் பெட்டி. அதன் ரகசியம் அம்பலமாக்கக் கூடாத ஒன்று. அந்த இரும்புப் பெட்டியை உடைத்து, கிருத்திகா, ''இது இரும்புப் பெட்டியல்ல, உள்ளேயிருப்பது பொக்கிஷமல்ல, இது சவப் பெட்டி'' என்று துணிந்து காட்டுகிறார்!



''சம்பிரதாய முறைப்படி நடக்கும் காதல் வாழ்வில் அலுப்பு சீக்கிரம் உண்டாகிவிடும். அப்புறம் மாற்றான் மனைவி கண்ணுக்கு அழகாய்த் தென்பட ஆரம்பித்து விடுவாள். அது போலவே பெண்களும் மற்ற ஆண்கள் தங்களை இச்சையுடன் நோக்குவதைக் கண்டு மகிழ்ச்சி அடைவார்கள்'' (பக்கம் 129) இந்த வரிகளை எந்தக் கதாபாத்திரமும் சொல்லவில்லை! ஆசிரியையின் கூற்றேதான் இது!

கிராமத்தில் விருந்துக்கு வருந்தி வருந்தி அழைக்க வேண்டிய சம்பிரதாயம், கிராமத்தார் காட்டும் போலி பிகு, சாப்பாட்டுப் பந்தி ரகளைகள், பெண்களின் பட்டுப் புடவைகள் எழுப்பும் ஒருவித நெடி, புழுக்கத்தால் அவர்களுடைய ரவிக்கைகள் நனைந்திருக்க நெற்றியில் வியர்வை முத்துக்கள் கோத்தாற் போல் அளிக்கும் காட்சி எல்லாம் தத்ரூபமாக வர்ணிக்கப்படுகின்றன. கிராம மக்களின் பகல் தூக்கம் பற்றிய விளக்கமும் பொருத்தமாகவே இருக்கிறது.

கிருத்திகாவின் புற, அக வர்ணனைகள் நறுக்குத் தெறித்தாற் போலவும், வேகத்துடனும் அமைகின்றன. ஆண் மனத்தை அவர் எவ்வளவு அழகாகக் காட்டுகிறார்! சந்திரசேகரனுக்குத் தன் மனைவி தன் திறமையைப் புகழாதது பெரும் குறை. அதைக் குறிப்பிடுகையில், ''ஆணின் நம்பிக்கை, பெண் அவனைப் பாராட்டுவதில் தான் இருக்கிறது. அவள் அவனைத் தினம் போற்றி வந்தால், அவன் உறுதி கொள்வான். வெளியே போவான், ஆடுவான், சாடுவான், யுத்தங்கள் புரிவான், உலகங்கள் ஜெயிப்பான். அவளே அவனைப் பன்மடங்கு பெரிதாக எடுத்துக் காட்டும் பூதக் கண்ணாடியாக இருக்கிறாள்'' என்று எழுதுகிறார்.

கடப்பையாவின் மனைவி விச்சுவின் குண சித்திரம் இதோ: ''விச்சு அலுக்காமல் அவனுக்குப் பணிவிடைகள் செய்து வந்தாள். ஆனால் அவள் தாயல்ல, மனைவி. அவளால் பதிலுக்கு ஒன்றையும் எதிர்பாராமல் தியாகம் செய்து கொண்டிருக்க முடியவில்லை. மனைவி என்றால் தனக்குச் சேர வேண்டிய ஆதரவைக் கணவனிடமிருந்து தானே பெற வேண்டும்? விச்சு அதை எதிர்பார்த்துக் கண் பூத்துப் போனாள்.''

நாஞ்சில் நாட்டு உணவு வகைகள் பற்றி இதோ: ''வாழைக்காய் உப்பேரி, தேங்காய் மெந்தியக் குழம்பு, மோர்க் குழம்பிலிட்ட சேவை, அடைமாத் தோசை.''

மட்டி வாழையைப் பற்றிக் கேளுங்கள். ''அந்தச் சுவையின் இன்பத்தை அமராவதி வாழ் தேவர்கள்கூட அனுபவித்திருக்கமாட்டார்கள். சின்னஞ் சிறு பழம் — மெலிதான தோல்; அதை உரிக்கும்போதே வாசனை தூக்கியடிக்கும். நாவில் ஜலம் ஊறும், வாயில் போட்டுக் கொண்டாலோ அமிர்தம்தான்.''

'வாஸவேச்வரம்' பழைய பந்தாவில் முடியும் புதுமைகள் பல நிறைந்த நாவல். 'வயது வந்தவர்களுக்கு மட்டும்' என்ற முத்திரை குத்த வேண்டிய நாவல்.

ஸ்ரீமதி மதுரம் பூதலிங்கம் ('கிருத்திகா') பம்பாயில் பிறந்து வளர்ந்து இருபத்தெட்டு ஆண்டுகளாக தில்லியில் வசித்து வருகிறவர். மத்திய சர்க்காரில் உயர் பதவி அதிகாரி ஒருவரின் வாழ்க்கைத் துணைவியான இவருக்கு ஓவியம், கர்நாடக சங்கீதம், பரத நாட்டியம், சிற்பம் போன்ற கலைகளில் பற்று உண்டு. சிற்பங்கள் பற்றிப் பல கட்டுரைகள் எழுதி வெளியிட்டிருக்கும் இவர் பல ஸ்தாபனங்களில் இக்கலைகளைப் பற்றி ஆங்கிலத்தில் பேசி யிருக்கிறார்.

ராமாயணம், பாகவதம், போன்ற கிரந்தங்களை மூலத்திலேயே படித்துக் குழந்தைகளுக்காக ஆங்கிலத்தில் அக்கதைகளை எழுதி வரும் இவருக்கு நம் புராதனக் கோவில்கள் என்றால் பித்து. தென்னிந்தியாவில் விரிவாகப் பிரயாணம் செய்து கோவில்களை எல்லாம் நேரில் தரிசித்ததோடல்லாமல் நிறையப் புகைப்படங்களும் எடுத்திருக்கிறார் இவர். 'புகை நடுவே' (1950), 'சத்தியமேவ' (1960) 'தர்மட்சேத்திரே' (1968) மூன்றும் தில்லியை நிலைக்களமாகக் கொண்டு இவர் எழுதிய நாவல்கள். சுதந்திரம் கிடைத்த பிறகு நம் சமுதாயத்தில் ஏற்பட்டுள்ள மாறுதல்களை இப்புத்தகங்கள் மூலம் இவர் விளக்கியிருக்கிறார்.

இந்த 'வாஸவேச்வரம்' ஆசிரியை மனத்தில் தோன்றிய விவரம் பற்றி அவருக்கு எழுதிக் கேட்டோம்:

''ஒரு தரம் 1966 தை மாதம் கன்னியா குமரி அருகில் காரில் போகும் போதுதான் வாஸவேச்வரம் என்ற கிராமம் கருத்தில் உதித்தது. ரம்மியமான சூழ்நிலை. மாந்தோப்பு. நெற்கதிர்கள் பச்சை அலைகள் வீசின. பல நினைவுகள் வந்து மோதிக் கொண்டன. கிராமாந்தர வாழ்க்கையைப் பற்றி எனக்குள்ள அனுபவங்களை அரைத்துக் கரைத்துக் குழைத்துப் பக்குவமாக்கினேன். பாத்திரங்கள் உருக் கொண்டன. மனிதனுடைய இயல்கள், ஆசாபாசங்கள், மனப் பேய்கள் இவை எங்கும் ஒருபோல்தான் விளையும் - நகரமானாலும் சரி, கிராமமானாலும் சரி.

''முதிர்ச்சியடைந்தவர்கள் சில சமயங்களில் புரிந்து கொள்ள முடியாத விதத்தில் நடந்து கொள்ளுகிறார்கள். அதற்கெல்லாம் அவர்களுடைய குழந்தைப் பருவத்தின் அனுபவங்களே காரணம். இள மனத்தில் சில அழுத்தமான வடுக்கள் விழுந்துவிடுகின்றன. பிற்பாடு அவர்களுடைய செய்கைகளால் அப்புண்கள் வெளியாகின்றன. இந்த உளநூல் தத்துவப்படி அமைந்தவை என்னுடைய கதாபாத்திரங்கள் (அநேகமாக எல்லாமே) என்று சொல்லலாம்.

''மனத்திற்குள் பதிந்த ஆழ்ந்த காரணங்களைக் கொண்டு செயலாற்றுவதால், என் கதாபாத்திரங்கள் தாமாகவே உயிர் கொண்டு புத்தகங்களில் வளைய வருகின்றன. உளநூல் சாத்திரமும் நம் சமூகத்தில் தற்போது உண்டாகியிருக்கும் புரட்சிகளுமாகச் சேர்ந்து என் புத்தகங்களுக்கு ஒரு புது மாதிரியான உருவ அமைப்புக் கொடுத்திருக்கின்றன.''

— மகரம்

கிடைக்குமிடம்: டால்டன் பப்ளிகேஷன்ஸ், சென்னை — 26; விலை: ரு. 3.60.

# எல்லா சோப்புக்களுமே சுத்தமாகக் கழுவுகின்றன...




## ஆனால், மாசற்ற மேனி எழிலைப்
## பெற தேவைப் படுவது
## ஜி-11 கொண்ட சிந்தால் சோப்பு தான்

சிந்தால் சோப்பிலுள்ள ஜி-11 (ஹெக்ஸாக்குளோரோஃபீன்)
சருமக் களங்கங்களை உண்டுபண்ணும் கொடிய
கிருமிகளை அழித்து விடுகிறது. நறுமணமளிக்கும்
ஜி-11 கொண்ட சிந்தால் சோப், உங்கள் சருமத்திற்கு
மழமழப்பையும் காந்தியையும் அளிக்கிறது.

INTERPUB GCS 9A-TAM

# மகாபாரதம்

## ராஜாஜி



இவ்வாறு சஞ்சயன் சொல்ல யுதிஷ்டிரன், ''சஞ்சயனே! நீ சொல்வது உண்மையாக இருக்கலாம். தருமமே சிறந்த பொருள். ஆனால் நாம் அதருமத்திலா இறங்கினோம்? கிருஷ்ணனுக்குத் தருமத்தின் இரகசியம் தெரியும். இரு பக்கத்தாரின் நலனையும் விரும்பும் வாசுதேவன் எவ்வாறு சொல்லுகிறானோ அவ்வாறு நான் செய்வேன்'' என்றான்.

கிருஷ்ணன், ''நான் பாண்டவர்களுடைய க்ஷேமத்தை விரும்புகிறேன். திருதராஷ்டிரனும் அவன் புத்திரர்களும் சுகமாக இருக்க வேண்டும் என்பதும் என் எண்ணம். இது சிக்கலான விஷயம். நானே ஹஸ்தினாபுரம் சென்று இதைத் தீர்க்கலாம் என்று எண்ணுகிறேன். பாண்டவர்களுடைய நன்மைக்கு யாதொரு குந்தகமும் இல்லாமல் கௌரவர்களிடம் சமாதானம் பெற முடியுமானால் அதையே செய்ய விரும்புகிறேன். அவ்வாறு செய்தே தீர்த்தேனானால் கௌரவர்கள் எமனிடமிருந்து தப்புவார்கள். நானும் மிகப் பெரிய புண்ணிய காரியம் செய்தவனாவேன். சமாதானம் ஏற்பட்டு அவர்களுக்குச் சேர வேண்டிய ராஜ்யத்தை அவர்கள் அடைந்தாலும் பாண்டவர்கள் திருதராஷ்டிரனுக்குப் பணியாட்களைப் போல் சேவை செய்வார்கள். அதையே அவர்களும் விரும்புகிறார்கள். ஆனால் அவர்கள் யுத்தத்துக்குத் தயாராகவே இருக்கிறார்கள். இந்த இரண்டு முடிவுகளில் திருதராஷ்டிர ராஜன் எதை விரும்புகிறானோ அதை அவன் அடையலாம்'' என்றான்.

யுதிஷ்டிரன் சஞ்சயனைப் பார்த்து, ''சஞ்சயனே! கௌரவர்களுடைய சபைக்குச் சென்று மகாராஜனான * அம்பிகா புத்திரனிடம் இவ்வாறு எனக்காகச் சொல்வீர்: 'உம்முடைய பெருந்தன்மையால் அல்லவோ சிறுவர்களாகிய நாங்கள் ஆதியில் ராஜ்ய பதவியை அடைந்தோம்? ஒரு சமயத்தில் என்னை அரசனாகச் செய்வித்த நீர் இப்போது எங்களை நாடின்றி ஊரின்றி மற்றவர்களை அண்டிப் பிழைக்கும்படி செய்ய வேண்டாம். எங்கள் அன்புக்குரிய அப்பனே! இரு பக்கத்தவர்களும் பிழைக்க, விசாலமான பூமி இருக்க விரோதம் செய்து கொள்ள வேண்டாம்.' இவ்வாறு எனக்காக திருதராஷ்டிரனை வேண்டிக் கொள்ள வேண்டும். பிதாமகரை எனக்காக நமஸ்கரித்து, 'உம்முடைய பேரக் குழந்தைகள் எல்லோரும் அன்போடு வாழ்ந்து பிழைப்பதற்கு வழி தேடுவீராக' என்று அவரையும் கேட்டுக் கொள்ளும். அவ்வாறே விதுரருக்கும் சொல்வீர். அவரே நம்முடைய குலத்தின் முழு ஹிதத்தையும் அறிந்து சொல்லக் கூடியவர். துரியோதனனைச் சமாதானப்படுத்தி அவனுக்கும் என் சார்பில் சொல்லு: 'அன்புக்குரிய தம்பியே! ராஜகுமாரர்களாகிய எங்களைத் தோல் ஆடை உடுத்தி வனத்தில் வசிக்கச் செய்தாய். அலற எங்கள் மனைவியை ராஜ சபையில் துன்புறுத்தினாய். இதையெல்லாம் பொறுத்தோம். இப்போதாவது எங்களுடைய நியாயமான உரிமையை எங்களுக்குக் கொடுத்து விடு. பிறருடைய சொத்துக்கு ஆசைப் படாதே! நாங்கள் ஐவர். ஐவர்களுக்கு ஐந்து கிராமங்களையாவது கொடுத்துச் சமாதானம் செய்து கொள். பாரத குலச் சிங்கமே, அனைவரும் திருப்தியாக வாழ்வோம்!' இவ்வாறு துரியோதனனுக்குச் சொல். சஞ்சயனே! சமாதானத்துக்கும் யுத்தத்துக்கும் இரண்டுக்கும் நான் தயாராய் இருக்கிறேன்!''

இவ்வாறு யுதிஷ்டிரன் சொல்லிய பிறகு சஞ்சயன் பாண்டவர்களிடமும் கேசவனிடம் விடைபெற்றுக் கொண்டு ஹஸ்தினாபுரம் சென்றான்.

## 55. ஊசி முனை நிலமுமில்லை!

சஞ்சயனைப் பாண்டவர்களிடம் அனுப்பிய திருதராஷ்டிரனுக்குக் கவலையால் அன்றிரவு நித்திரையே வரவில்லை. விதுரனை அழைத்து அவனோடு

* அம்பிகா புத்திரன் - திருதராஷ்டிரன்.

பேசிக் கொண்டு இரவு முழுதும் கழித்தான்.

''பாண்டவர்களுக்கு ராஜ்யத்தைக் கொடுத்து விடுவதே உபாயம். அதுவே இருபக்கத்தாருக்கும் நன்மை பயக்கும். பாண்டவர்களையும் உம் மக்களைப் போலவே நீர் நடத்த வேண்டும். நேர்மையே உபாயமும் தர்மமும் இரண்டுமாகும்'' என்று திருதராஷ்டிரனுக்குப் பலவாறாக உபதேசித்தான்.

மறுநாட் காலை சஞ்சயன் ஹஸ்தினபுரம் திரும்பி வந்து சேர்ந்தான். யுதிஷ்டிரனுடைய சபையில் நடந்ததை எல்லாம் விவரமாகச் சொன்னான். ''முக்கியமாக அருச்சுனன் சொன்னதைத் துரியோதனன் கேட்க வேண்டும். கிருஷ்ணனும் நானும் சேர்ந்து துரியோதனனையும் அவனைப் பின்பற்றுபவர்களையும் நிர்மூலம் செய்யப் போகிறோம். சந்தேகமில்லை. காண்டீபம் யுத்தத்துக்காகத் துடிக்கிறது. அந்த வில்லின் நாண் நான் இழுக்காமல் தானாகவே அதிர்கிறது. தூணியிலிருந்து அம்புகள் தலை நீட்டி, 'எப்போ? எப்போ?' என்று கேட்கின்றன. சஞ்சயனே! இந்த மூடன் துரியோதனன் இந்திராதி தேவர்களையும் போரில் வீழ்த்தக் கூடிய எங்களை, தன் விநாச காலத்தால் தூண்டப்பட்டு சண்டைக்கு இழுக்கிறான். இப்படிச் சொன்னான் தனஞ்யன்'' என்றான்.

சஞ்சயன் இதைச் சொன்ன பின், பீஷ்மர் துரியோதனனுக்கு மீண்டும் சொல்லிப் பார்த்தார்.

''அருச்சுனனும் கேசவனும் நரனும் நாராயணனும் என்று அறிவாயாக. அவர்கள் இருவரும் ஒன்று கூடி யுத்தத்தில் உன்னை எதிர்க்கும் போது அந்த உண்மையை அறிந்து கொள்ளப் போகிறாய்'' என்று துரியோதனனுக்கு இவ்வாறு சொல்லிவிட்டு திருதராஷ்டிரனை நோக்கி, ''திரும்பத் திரும்ப நான் பாண்டவர்களைக் கொல்லுவேன்'' என்று வீரம் பேசும் கர்ணன் பாண்டவர்களில் பதினாறில் ஓர் அம்சம் ஆகமாட்டான். இவன் பேச்சைக் கேட்டு உன் புத்திரர்கள் தங்களுடைய நாசத்தைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள். விராடனுடைய நகரத்தைத் தாக்கியபோது அருச்சுனன் நம்முடைய கர்வத்தை அடக்கினானே, அந்தக் காலத்தில் அங்கே இருந்த கர்ணனால் என்ன செய்ய முடிந்தது? கந்தர்வர்கள் உன் மகனைச் சிறைப்படுத்திக் கொண்டு போன காலத்தில் கர்ணன் இப்போது கர்ஜிக்கிறானே, அவன் அப்போது எங்கே மறைந்தான்? அருச்சுனன் அல்லவோ கந்தர்வர்களை விரட்டியது?'' என்று பீஷ்மர் குத்திக் காட்டினார்.

''குலத்துக்குத் தலைவரான பீஷ்மர் சொல்லுவதே செய்யத் தக்கது. யுத்தம் வேண்டாம். சமாதானமே உசிதம். ஆனால் நான் என்ன செய்வேன்? இந்த மூர்க்கர்கள் நான் எவ்வளவு கத்தினாலும் தாங்கள் போகும் வழியே செல்கிறார்கள். அறிவும் அனுபவமும் பெற்றவர்கள் அனைவரும் சமாதானமே செய்து முடிக்கத் தக்கது என்கிறார்கள். அப்படிச் செய்வதே என்னுடைய அபிப்பிராயமும்'' என்று புலம்பினான் திருதராஷ்டிரன்.



இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த துரியோதனன் எழுந்தான்.

''அரசனே! எங்களுக்காக நீர் பயந்து சாக வேண்டாம். நமக்கு வேண்டிய பலத்தைத் திரட்டியாகி விட்டது. வெற்றி அடைவோம் என்பதில் சந்தேகம் இல்லை. யுதிஷ்டிரன் இந்திரப்பிரஸ்ததத்தைப் பற்றிய பேச்சை விட்டு விட்டு இப்போது 'ஐந்து கிராமங்கள் கொடுங்கள்' என்று கேட்கிறான். நம்முடைய பதினொரு அக்குரோணி சேனையைப் பார்த்துப் பயந்து விட்டான் என்பது உங்களுக்கு இதனால் தெரியவில்லையா? பதினொரு அக்குரோணிகளைப் பாண்டவர்கள் எவ்வாறு எதிர்ப்பார்கள்? நம்முடைய வெற்றியைப் பற்றி உமக்கு ஏன் சந்தேகம்?'' என்று தகப்பனுக்குத் தைரியம் சொன்னான்.

திருதராஷ்டிரன், ''மகனே! யுத்தம் வேண்டாம். பாதி ராஜ்யத்தை வைத்துக் கொண்டு திருப்தியடைவாய் அதை நன்கு அரசாண்டால் போதும்!'' என்றான்.

துரியோதனனுக்குப் பொறுக்க முடியவில்லை. ''ஓர் ஊசி முனையளவு பூமியும் பாண்டவர்களுக்குக் கொடுக்கப்பட மாட்டாது'' என்று உறுதியாகச் சொல்லிவிட்டுச் சபையை விட்டு வெளியேறினான். சபையும் குழப்பத்தில் கலந்து விட்டது.

பாண்டவர்கள் பேசிக்கொண்டதைச் சொல்லுவோம். சஞ்சயன் உபப்பிலாவியத்தை விட்டு ஹஸ்தினபுரத்துக்குப் புறப்பட்டதும் யுதிஷ்டிரன் கிருஷ்ணனைப் பார்த்து, ''வாசுதேவனே! சஞ்சயன் திருதராஷ்டிரனுக்கு இரண்டாவது உயிர் போன்றவன். அவன் பேசியதிலிருந்து திருதராஷ்டிரனுடைய உள்ளத்தில் இருப்பதை நன்றாக அறிந்தேன். எங்களுக்கு ராஜ்யம் ஏதும் தராமல் சமாதானம் அடையத்தான் திருதராஷ்டிரன் பார்க்கிறான். முதலில் சஞ்சயன் மிகவும் நயமாகப் பேசினான். அதைக் கேட்டு நான் அடைந்த சந்தோஷம் வீண் என்று பிறகு அவன் பேசியதிலிருந்து தெரிகிறது. இடையில் நடுத்தரமாகச் சமாதான விருப்பத்தோடு பேசினான். முடிவில் அவன் சொன்னது எனக்கு மிகவும் அநியாயமாகத் தோன்றியது. எங்கள் விஷயத்தில் திருதராஷ்டிரன் சத்தியமாக நடந்து கொள்ளவில்லை. சோதனைக் காலம் வந்து விட்டது. உன்னைத் தவிர எங்களைக் காப்பாற்றுபவர் வேறு யாருமில்லை. ஐந்து கிராமங்களே போதும் என்று சொல்லி அனுப்பி யிருந்தேன். துஷ்டர்கள் அதுவும் முடியாது என்று சொல்கிறார்கள். இதை எப்படிப் பொறுப்பது? நீதான் யோசனை சொல்லத்தக்கவன். உன்னைத் தவிர தருமமும் நீதியும் உபாயமும் கண்டவர் யாருமில்லை.''

இவ்வாறு யுதிஷ்டிரன் சொன்னதைக் கேட்ட கிருஷ்ணன், ''இரு பக்கத்தாருடைய நலத்தையும் உத்தேசித்து நானே ஹஸ்தினபுரம் போவதாகத் தீர்மானித்து விட்டேன். திருதராஷ்டிரனுடைய சபைக்குச் சென்று யுத்தமில்லாமல் உங்களுடைய உரிமைகளைக் காப்பாற்ற முயற்சி செய்வேன். இது நிறைவேறினால் உலகத்துக்கு க்ஷேமம் உண்டாகும்'' என்றான்.

யுதிஷ்டிரன், ''அப்பனே நீ போக வேண்டாம். இந்தச் சமயத்தில் பகைவர்களின் கூட்டத்துக்கு நீ போவதில் என்ன பயன்? மூடனான துரியோதனன் தன் பிடிவாதத்தை விடப்போவதில்லை. அந்தத் துஷ்டர்களின் மத்தியில் நீ போவது எனக்குப் பிடிக்கவில்லை. அதனால் நமக்கு எந்த நன்மை வருவதாக இருந்தாலும் உனக்கு அபாயம் நேரக் கூடிய காரியம் இப்போது வேண்டாம். அவர்கள் அதருமத்துக்கு அஞ்சுபவர்கள் அல்ல'' என்றான்.

கிருஷ்ணன், ''தருமபுத்திரனே! துரியோதனனுடைய குணம் எனக்குத் தெரியும். ஆயினும் உங்கள் பேரிலும் என்பேரிலும் உலகத்தார் யாதொரு தோஷமும் சொல்ல இடமில்லாமல் நாம் செய்ய வேண்டிய முயற்சியைச் செய்ய வேண்டும். சமாதானத்துக்குச் சகல முயற்சிகளும் செய்யப்படவில்லை என்று உலகத்தார் என்மேல் குற்றம் சொல்லலாம் அல்லவா? அதற்கு இடங் கொடுக்கக் கூடாது. சமாதானம் செய்வதற்காகத் தூதனாகச் செல்லும் எனக்கு அவர்கள் ஏதேனும் தீங்கு செய்யப் பார்த்தார்களாகில் அவர்களை அப்படியே தகித்து விடுவேன். நான் போய்ப் பேசிச் சமாதானம் உண்டாகாமல் போனாலும் நம் பேரில் குற்றமில்லாதபடியாவது ஆகும். போவதே நலம்; இதைத் தடுக்க வேண்டாம்'' என்றான்.

யுதிஷ்டிரன், ''நீ சகலமும் தெரிந்தவன். எங்களையும் அறிவாய். மற்றவர்களையும் அறிவாய். விஷயங்களை எடுத்துச் சொல்வதிலும் உன்னை விடச் சமர்த்தன் வேறு யார்?'' என்றான்.

கிருஷ்ணன் ''அஜாத சத்ருவே! உன் உள்ளத்தை நான் அறிவேன். உன் சித்தம் எப்போதும் தருமத்தைப் பற்றி நிற்கிறது. அவர்களுடைய உள்ளமோ துவேஷத்தில் மூழ்கி யிருக்கிறது. சொல்ல வேண்டியதை யெல்லாம் சொல்லிப் பார்ப்பேன். யுத்தமின்றிச் சமாதானத்தின் பேரில் பெறக்கூடியது

சிறிதாயினும் நீ அதைப் பெரிதாக மதிப்பாய் என்பது எனக்கு நன்றாகத் தெரியும். அதை நினைவில் வைத்துக் கொண்டு அவர்களிடம் நான் பேசிப் பார்க்கிறேன். உற்பாதங்களைப் பார்த்தால் போர் நடக்கும் என்றே காண்கிறது. ஆயினும் சமாதானத்துக்காக முயற்சி செய்வது கடமை.''

இவ்வாறு சொல்லி விடை பெற்றுக் கொண்டு கண்ணன் ஹஸ்தினாபுரம் போகத் தேர் ஏறினான்.

## 56. கண்ணன் தூது

சமாதானம் பேசக் கோவிந்தன் தேர் ஏறி றஸ்தினாபுரம் புறப்பட்டான். கூட சாத்யகியும் போனான்.

புறப்படுவதற்கு முன் கிருஷ்ணன் வெகுநேரம் பாண்டவர்களுடன் பேசிக் கொண்டிருந்தான். வீரனான பீமன் கூட ''குலநாசம் வேண்டாம். சமாதானமாகப் போவதே மேலானது'' என்றான். ஆற்றல் படைத்த வீரன் சமாதானத்தையே விரும்புவான். சமாதானத்தை விரும்புவது கோழைத்தனமாகாது என்பதைக் காட்டவே வியாசர் இவ்வாறு பீமனைப் பேச வைக்கிறார்.

ஆனால் திரௌபதிக்குத் தான் பட்ட அவமானத்தை மறக்க முடியவில்லை. தலைமயிரைக் கையால் பிடித்துக் கொண்டு கிருஷ்ணன் முன்னால் நின்றாள்.

''மதுசூதனனே! இந்தக் கூந்தல் கற்றையைப் பார்த்துச் செய்ய வேண்டியதைச் செய்வாய்! அருச்சுனனும் பீமசேனனும் யுத்தம் வேண்டாம் என்றாலும் என்னுடைய தகப்பனார் கிழவராயினும் எனது ஐந்து மக்களைத் துணையாகக் கொண்டு யுத்தம் நடத்துவார். என் தகப்பனாரும் வேண்டியதில்லை. சுபத்திரையின் குமாரன் அபிமன்யுவை முன்னிட்டுக் கொண்டு என் புத்திரர்களே கௌரவர்களை எதிர்ப்பார்கள். மூள்கின்ற கோபத் தீயை தரும புத்திரருக்காகப் பதின்மூன்று வருஷம் என் மனத்தினுள் அடக்கி வைத்தேன்; இனித் தாங்காது'' என்றாள்.

கண்ணீரால் தடைப்பட்ட குரலில் திரௌபதி சொன்னதைக் கேட்ட வாசுதேவன் ''அழவேண்டாம்! திருதராஷ்டிர புத்திரர்கள் என் சமாதானப் பேச்சைக் கேட்கப் போவதில்லை. நாய், நரிகளுக்கு இரையாக அவர்கள் அனைவரும் பூமியில் விழப் போகின்றனர். பழி தீர்த்து வெற்றியைப் பார்க்கப் போகிறாய். வெகுசில நாட்களே தாமதம்!'' என்றான்.

திரௌபதியின் உள்ளம் திருப்தி அடைந்தது.

குசஸ்தலம் என்கிற நகரத்தண்டை மாதவன் குதிரைகளை அவிழ்த்து விட்டு அங்கே தங்கினான். கோவிந்தன் வருகிறான் என்று செய்தி வந்ததும் ஹஸ்தினாபுரம் பரபரப்படைந்தது. திருதராஷ்டிரன் நகரத்தை அலங்காரம் செய்ய உத்தரவிட்டான். ஜனங்கள் ஜனார்த்தனனை எதிர் கொண்டு வரவேற்பதற்கு அநேக ஏற்பாடுகள் செய்தார்கள்.

துரியோதனனுடைய மாளிகையைக் காட்டிலும் துச்சாதனனுடைய வீடு பெரிதாகவும் அழகாகவும் இருந்தபடியால் கிருஷ்ணனும் பரிவாரமும் தங்குவதற்கு அதைத் தயாரித்து வைக்கத் திருதராஷ்டிரன் உத்தரவிட்டான். பல உபசார மண்டபங்கள் ஊருக்கு வெளியில் கிருஷ்ணனுடைய தேர் வரும் வழியில் கட்டப்பட்டன.

விதுரனோடு திருதராஷ்டிரன் மந்திராலோசனை செய்தான். ''கோவிந்தனுக்குத் தேர்களும், யானைகளும் கொடுக்க ஏற்பாடு செய்யுங்கள். இன்னும் பலவித சன்மானங்களும் செய்ய வேண்டும்'' என்று திருதராஷ்டிரன் சொன்னான்.

விதுரன், ''கோவிந்தன் இதற்கெல்லாம் வசப்பட மாட்டான். எதற்காக குருதேசத்துக்குக் கோவிந்தன் வருகிறானோ அதை உதவக் கடவீர். சமாதானத்தை விரும்பியல்லவா வருகிறான்? அதைச் செய்து கொடுப்பீராக. மாதவனுக்கு வேறுவித சன்மானங்கள் செய்து திருப்தி செய்ய முடியாது'' என்றான்.

கோவிந்தன் ஹஸ்தினாபுரம்போய்ச் சேர்ந்தான். நகரத்து ஜனங்கள் அலங்கரிக்கப்பட்ட வீதிகளில் கூட்டமாகத் திரண்டிருந்தபடியால் தேர் வெகு மெள்ளச் சென்றது. முதலில் திருதராஷ்டிரனுடைய அரண்மனைக்குச் சென்றான். அவ்விடம் அளிக்கப்பட்ட பூஜையைப் பெற்றுக்கொண்டு விதுரனுடைய மாளிகைக்குப் போனான். குந்திதேவி கிருஷ்ணனைக் கண்டதும் மக்களை நினைத்துத் துக்கம் மேலிட்டு அழுதாள்.

கிருஷ்ணன் அவளைத் தேற்றி விடை பெற்றுக் கொண்டு துரியோதனனுடைய அரண்மனைக்குச் சென்றான். துரியோதனன் கோவிந்தனை உபசரித்து, தன் கிருகத்தில் சாப்பிட அழைத்தான். கண்ணன் சிரித்து, ''தூதர்கள் காரியம் நிறைவேறிய பிறகே புசிப்பர். நான் வந்த காரியம் நிறைவேறிய பிறகு நீ எனக்கு விருந்து அளிப்பாய்'' என்று சொல்லி விதுரனுடைய மாளிகைக்குத் திரும்பிப் போய் அங்கே புசித்து இளைப்பாறினான். **(தொடரும்)**



நீச்சல் குளம் இதனுள்ளே இருக்கிறது.

விளையாட்டுப் பந்தயங்களின் வரலாற்றில் நான்கு ஆண்டுகளுக்கு ஒருமுறை உலகில் உள்ள முக்கிய நகரங்களுள் ஏதாவது ஒன்றில் நடைபெறும் பந்தயங்கள் இணையற்ற இடத்தை வகிக்கின்றன. கோடிக்கணக்கான ரசிகர்கள், ஆயிரக்கணக்கான விளையாட்டு வீரர்கள், அவர்கள் பங்கேற்கும் நூற்றுக் கணக்கான பந்தயங்கள், இப்பந்தயங்களின் முடிவுகளைக் குறித்து உலகின் பற்பல நகரங்களுக்குச் செய்திகள் அனுப்பும் பல்லாயிரக்கணக்கான பத்திரிகை நிருபர்கள் ஆகியோர் பங்குகொள்ளும் பிரும்மாண்டமான ஒலிம்பிக் விளையாட்டுக்களை வெற்றிகரமாக நடத்தும் பெருமை எல்லா நாடுகளுக்கும் எளிதில் கிடைப்பதில்லை. காரணம் பதினைந்து நாட்களே நடைபெறும் அவ் விளையாட்டுக்களைச் சீராக நடத்த பல கோடி ரூபாய்களை நீராகச் செலவழிக்க வேண்டும். அதனால்தான் ஜப்பானைத் தவிர வேறு எந்த ஆசிய நாட்டிலும் இதுவரை ஒலிம்பிக் விளையாட்டுக்கள் நடைபெறவில்லை.

இந்த ஆண்டில் பத்தொன்பதாவது ஒலிம்பிக் விளையாட்டுக்களை நடத்தும் பெருமை மெக்ஸிகோ நாட்டுக்குக் கிடைத்துள்ளது. பெறற்கரிய வாய்ப்பைப் பெற்ற மெக்ஸிகோ அரசாங்கம் தனது முழு ஆதரவையும் ஒலிம்பிக் குழுவுக்குத் தந்துள்ளது.

ஒலிம்பிக் விளையாட்டுக்கள் நடக்கும் பந்தய பூமியும் அதைச் சுற்றியுள்ள பிரதேசமும் 'ஒலிம்பிக் கிராமம்' என அழைக்கப்படுகிறது. இந்தக் கிராமத்தில்தான் நூறு நாடுகளைச் சேர்ந்த 7500 விளையாட்டு வீரர்கள், அந்நாடுகளின் 1000 பிரதிநிதிகள் மற்றும் 1500 பத்திரிகை நிருபர்கள் தங்குவதற்காக 904 அறைகள் கொண்ட இருபத்தொன்பது கட்டடங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இதற்கான வேலைகள் 1967ம் ஆண்டு மே மாதம் நான்காம் நாளன்று தொடங்கப்

# ஒலிம்பிக் கிராமம்!

சைக்கிள் பந்தயங்கள் நிகழவிருக்கும் ஒலிம்பிக் வெலோட்ரோம் அரங்கம்.

பட்டது. சுமார் 2500 பேர்கள் இரவும் பகலும் பணி யாற்றி இக்கட்டடங்களை ஏழே மாதங்களுக்குள் அமைத்த னர். இக் கட்டடங்களுக்குள்தான் விளையாட்டு வீரர் களின் பயிற்சி நிலையங்கள், ஓய்வு அறைகள், பொழுது போக்கு மன்றங்கள், மாபெரும் உணவு அறைகள் எல்லாம் உள்ளன. இந்தக் கிராமத்தின் பரப்பளவு சுமார் தொண்ணூறுயிரம் சதுர மீட்டர்கள்!

படகுப் போட்டிகள் ஒலிம்பிக் கிராமத்திலிருந்து சுமார் நான்கு மைல்கள் தூரத்திலுள்ள ஷோ ஷி மிளகோ கால்வாயில் நடை பெறவிருக்கின்றன. இப் படகுப் போட்டிகளைக் காண சுமார் ஆறுயிரம் ரசிகர்களுக்கு இட வசதி செய்யப்பட்டுள்ளது. கால்வாயின் நீளம் 2200 மீட்டர்கள். அகலம் 125 மீட்டர்கள்.



சைக்கிள் ஓட்டும் பந்த யங்கள், 'ஒலிம்பிக் வெலோ டிரோம்' எனப்படும் மாபெரும் அரங்கத்தில் நடைபெறவிருக்கிறது. ஒலிம்பிக் பந்தயங்களுக்காக வென விசேஷமாக அமைக் கப்பட்டுள்ள அரங்கங்களுள் இந்த வேலோடிரோம் முதன்மையானது. ஹெர் பெர்ட் ஷுர்மன் என்ற ஜெர் மானிய கட்டடக் கலைஞர் அமைத்த இவ்வரங்கம் அவர் இதுவரை கட்டியுள்ள முப் பத்தொன்பது அரங்கங்களை விடச் சிறந்தது என நிபு ணர்கள் கூறுகின்றனர்.

**கால்பந்தாட்டம் நிகழவிருக்கும் அஸ்டெக் ஸ்டேடியம்**

19வது ஒலிம்பிக் பந்தயங்களின் ஆரம்ப விழா ஒலிம் பிக் கிராமத்திலிருந்து ஒரு மைல் தூரத்தில் உள்ள 'ஒலிம் பிக் ஸ்டேடி'யத்தில் நடைபெறும். சுமார் 58,000 சதுர மீட்டர்கள் பரப்பளவுள்ள அப்பூமியில் சுமார் 80,000 நபர்கள் கண்டு களிக்க ஆசனங்கள் அமைக்கப் பட்டுள்ளன. மெக்ஸிகோ பல்கலைக் கழகத்தின் விளை யாட்டு மைதானமே பெருமளவில் சீர்திருத்தப்பட்டு ஸ்டேடியமாக்கப்பட்டுள்ளது. சுமார் எண்ணூயிரம் கார்களை நிறுத்தத் தேவையான இடமும் ஒதுக்கப்பட் டுள்ளது ஸ்டேடியத்தின் மற்றொரு சிறப்பான அம்சம். பந்தய பூமியின் நடுவே போட்டியில் பங்கு பெறுபவர் எல்லாரும் வந்து சேருவதற்காக ஸ்டேடியத்தின் பல வாயில்களின் கீழே சுரங்க வழிகளும் அமைக்கப்பட்டுள் ளன. ஸ்டேடியத்தின் ஒரு பகுதி பத்திரிகை நிருபர்களுக் கென தனியாக ஒதுக்கப்பட்டுள்ளது. அப்பகுதியில் தொலை பேசிகள், டைப்ரைட்டர்கள், புகைப்படம் கழுவும் அறைகள் முதலானவை நூற்றுக்கணக்கில் உள்ளன.

ஓட்டப் பந்தயம், நீளத் தாவுதல், உயரத் தாவுதல், ஈட்டி எறிதல், குண்டு எறிதல் போன்ற போட்டிகளெல் லாம் இங்குதான் நடக்கின்றன.

கூடைப் பந்தாட்டம் 'விளையாட்டு மாளிகை' எனப் படும் அரங்கத்தில் நடக்க இருக்கிறது. சுமார் 25,000 ரசிகர்கள் கண்டு களிக்கும் வண்ணம் இவ்வரங்கம் புதிதாகக் கட்டப்பட்டுள்ளது. இரவில் போட்டிகள் நடந் தால் அவற்றைக் காண்பதற்கென சக்தி வாய்ந்த ஒளியைக் கக்கும் மின்சார பல்புகள் 2500 பொருத்தப்பட்டுள்ளன.

குத்துச் சண்டை, 'எரினு மெக்ஸிகோ' என்ற அரங்கத் தில் நடைபெறும். சுமார் பதினைாயிரம் பேர்கள் அமர்ந்து பார்க்கும் வண்ணம் அமைக்கப்பட்டிருக்கிறது.



**விளையாட்டு மாளிகை**

கால்பந்தாட்டப்போட்டிகள், 'அஸ்டெக் ஸ்டேடி'யத்தில் நடை பெறவிருக்கின்றன. சுமார் இரண்டரை லட்சம் சதுர மீட் டர்கள் பரப்பளவைக் கொண்ட இந்த ஸ்டேடியத்தில் கால் பந் தாட்டத்தை ஒரே சமயத்தில் ஒரு லட்சம் பேர் அமர்ந்து காண முடியும்.

இந்திய நாட்டின் பெருமையை நிலைநிறுத்தக்கூடிய அரங்கம் ஒலிம்பிக் கிராமத்திலிருந்து இரு பது கிலோ மீட்டர் தொலைவில் உள்ள முனிஸிபல் ஸ்டேடியம் தான். இங்குதானே ஹாக்கி பந்த யங்கள் நடக்கவிருக்கின்றன!

— அ. இராமதுரை

# சினிமா சிந்தனை

பி. எஸ். ராமையா

## 2

திருமதி சௌந்தரா கைலாசம் அவர்களின் குற்றச்சாட்டுக்குத் திருமதி சந்தியா அளித்துள்ள பதில் திருமதி சௌந்தரா அவர்களையே அதிர அடித்திருக்கும்!

''எத்தனையோ இளம் நடிகைகள் எந்த வேடத்திலும், எந்த உடையிலும் எப்படி வேண்டுமானாலும் நடிக்கத் தயார் என்று அறிவித்து, சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் காத்திருக்கும்பொழுது, ஒரு நடிகை தனக்குக் கிடைத்திருக்கும் நிலையான இடத்தை உடை விஷயத்தில் கெடுபிடி ஏற்படுத்தி விட்டு விலக முடியுமா?'' என்று கேட்கிறார் திருமதி சந்தியா.

கிடைத்த இடத்தை இழக்கக் கூடிய அபாய நிலைகள் எழுந்ததற்கும் அவர் இரண்டொரு உதாரணம் கொடுத்திருக்கிறார்.

இந்தப் பதிலில் (1) தமிழ்ப் படங்களில் வரும் பெண் பாத்திரங்களின் ஆடை ஆபாசங்களுக்குப் படத் தயாரிப்பாளர்கள்தான் பொறுப்பு. (2) அந்த ஆபாசக் கோலம் பூண மறுக்கும் நடிகை படங்களில் நடிக்கும் வாய்ப்பையே இழக்க நேரும். (3) தமிழ்ப் படத்தில் ஒரு நிலையான இடத்தை அடைந்துள்ள நடிகை ஆபாச உடைகளில் தோன்ற இசைந்ததாலேயே அவளுக்கு அந்த இடம் கிடைத்தது என்ற கருத்துக்கள் அடக்கம்.

கல்கியில் திருமதி சந்தியாவின் பதிலைப் படித்துவிட்டு ஒரு பெண் வெளியிட்ட கருத்தை நான் கேட்க நேர்ந்தது. அதை இங்கே அப்படியே கொடுக்கிறேன். ''மத்தவங்க எதுக்கும் துணிஞ்சு வரேங்கறாங்க, அதனாலே நானே அதுக்குத் துணிஞ்சுகட்டேங்கறது ஒரு பதிலா?''

நடிகைகளின் இந்தப் பரிதாப நிலைக்கு திருமதி சந்தியா கூறும் காரணம் நாம் கவனிக்கவேண்டிய ஒன்று. ''மேல்நாடுகளிலிருந்து வரும் நைட் சீரீஸ் படங்களுக்குச் சென்னை போன்ற நகரங்களில் கிடைத்த அமோகமான வரவேற்பைக் கண்டு தமிழ்ப் படத் தயாரிப்பாளர்கள் இங்கும் நடிகைகள் ஆபாச உடைகளை அணிந்து நடிக்க இசைய வேண்டுமென்கிறார்கள்.

''இப்பொழுது மக்களிடையே ரசனை மாறியுள்ளது. ஆகவே தமிழ்ப் படத் தயாரிப்பாளர்கள் தங்கள் படங்களில் நடிகையரை ஜீன்ஸ், ஸ்கர்ட், மினி ஸ்கர்ட், நீச்சல் உடை போன்ற ஆடை அணியச் செய்து படமெடுக்கிறார்கள். இம்மாதிரி எடுத்த தமிழ்ப் படங்களுக்கு ரசிகர்களிடையில் நல்ல ஆதரவு இருக்கிறது'' என்கிறார் திருமதி சந்தியா.

இங்கு மக்களின் ரசனை தானாக மாறவில்லை. நாட்டில் அவர்களுடைய அன்றாட வாழ்க்கையில் இந்த மாதிரி ரசனை மாற்றத்துக்கான காரணம் எதுவுமே நேர்ந்துவிடவில்லை. மக்களின் ரசனையை இப்படித் திசை திருப்பியவர்கள் தமிழ்ப் படத் தயாரிப்பாளர்கள்தாம். அதற்கு உடன்பட்டு அந்தத் தொண்டில் பங்கு கொண்டனர் நடிகைகள்.

திரு ஆல்பர்ட் பிராங்க்ளின் தொண்டு செய்ய வந்த இடத்தில் மக்களின் மனக் கசப்புக்கு ஆளாகக் கூடாது என்று எண்ணியிருந்தால், இங்கு தமிழ்ப் படங்களைப் பற்றி வாயையே திறக்காமல் இருந்து விட்டுத் தமது நாட்டுக்குத் திரும்பிப் போய், அங்கே தமது நாட்டு மக்களிடையே ''தமிழ்ப் படங்கள் என்று எடுக்கிறார்களே அவைகள் தலை கால் இல்லாத வெறும் கதம்ப நிகழ்ச்சிப் பரிதாபங்கள்தாம்'' என்று அந்தரங்கப் பேச்சாகச் சொல்லியிருக்கலாம். அதைக் கேட்டு அமெரிக்க மக்கள் தமிழ் நாட்டுப் பண்பு, கலை உணர்வு, சுவை ஆகியவை பற்றி ஒரு எடை போட்டுக் கொள்ளவும் நேர்ந்திருக்கலாம். ஆனால் திரு பிராங்க்ளின் அந்தரங்க சுத்தத்தோடு, ''ஒரு மக்கள் சமூகத்துக்கு இந்த மாதிரிப் படங்களை எடுத்துக் காட்டிக் கொண்டேயிருப்பது நல்லதல்ல; மற்ற கலைகளைப் போலவே சினிமாக் கலைக்கும் சில கட்டுப்பாடு, நெறி முறைகள் உண்டு. அவற்றைத் தமிழ்ப் படங்களில் சிறிதும் காண இயலவில்லை'' என்று நம்மை எச்சரித்துக் கருத்து வெளியிட்டிருக்கிறார். அதற்காக அவருக்கு நன்றி சொல்லக் கடமைப் பட்டிருக்கிறது தமிழ்ச் சமூகம்.

அவருடைய கருத்துக்குப் பதில் அளித்துள்ள திரு கோபாலகிருஷ்ணனின் பதிலில் வலுவில்லை.

சோற்றிலே கல் அகப்படுவது வேறு; ''கற்களுக்கு இடையிலே இரண்டொரு பருக்கையும் இருக்கிறது. தேடிப் பாருங்கள் அகப்படும்'' என்பது வேறு.

''நாம் சுதந்திரம் பெற்று இருபது ஆண்டுகளுக்குள் நாம் கலைத் துறை நுணுக்கங்களில் எவ்வளவோ முன்னேறியிருக்கிறோம்'' என்கிறார் இயக்குனர் திலகம். மெய்தான். மறுக்க முடியாது. ஒலிப் பதிவு, ஒளிப் பதிவு, காமிராக் கோணங்கள், எடிட்டிங் ஆகிய துறைகளில் நாம் அபாரமாக முன்னேறியிருக்கிறோம். ஆனால் மனிதப் பாண்மை

நிறைந்த பாத்திரப் படைப்பில்? தமிழ் நாட்டின் அறிவு வளர்ச்சி, உணர்ச்சி வளம், கலைப் பண்பு, கைத்திறம், ஆகியவற்றைப் பிரதிபலிக்கும் பாத்திரப் படைப்பில் நாம் எவ்வளவு தூரம் முன்னேறியிருக்கிறோம்?

திரு கோபாலகிருஷ்ணனின் கற்பனை வேகத்தையும், திறத்தையும் கண்டு வியப்பவர்களில் நானும் ஒருவன். அவருடைய கற்பனை, மேதை எல்லையில் இருப்பது என்று நினைப்பவன் நான். "நம்முடைய இன்றைய படங்களில் பாத்திரங்களின் குண தோஷங்கள், செயல்கள், நிகழ்ச்சிகள் எல்லாம் என்ன அளவில் இருக்கின்றன? அவற்றில் அழுக்கும் இழுக்கும் மண்டிக் கிடக்கின்றன என்பதை உங்களால் மறுக்க முடியுமா?" என்று அவரையே திருப்பிக் கேட்போம். அவர் நிதானமாகச் சிந்தித்துப் பதில் சொல்லட்டும்.



திரு பி. எஸ். ராமையா

"குமுதம்" பத்திரிகையின் குற்றச்சாட்டில் முன் பகுதியான, "ரசிகர் கூட்டத்தில் இளவட்டங்களின் பங்கு அதிகமிருந்தால், ஜெயலலிதாவின் முகத்தைப் பார்க்க வந்திருப்பதாக நினைத்துக் கொள்ள வேண்டாம். கத்திரிக்கோலுக்குத் தப்பிவிட்ட அந்த டான்ஸ் உடைதான் காரணம்" என்ற வரிகளில் "முகத்தைப் பார்க்க", "டான்ஸ் உடைதான்" என்ற சொற்களை அடிக்கோடிட்டு தடித்த எழுத்துக்களில் அச்சடிக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது.

இந்தப் பகுதி ஸ்ரீமதி சௌந்தரா கைலாசம் அவர்களின் குற்றச்சாட்டுடன் தொடர்புடையது. ஆனால் இடையேயுள்ள "கத்திரிக்கோலுக்குத் தப்பிவிட்ட" என்ற சொற்கள் இதை இன்னொரு எல்லைக்கு மாற்றிவிட்டன.

"குமுதத்"தின் குற்றச்சாட்டின் இரண்டாவது பகுதி சற்று காரமானது. "பார்வை இழந்தவர்களில் மூன்று ரகம். ஒரு கண் தெரியாதவர்கள், இரண்டு கண் தெரியாதவர்கள், படத் தணிக்கைக் குழுவினர்."

கண் என்னும் உறுப்பு ஒவ்வொருவருக்கும் இரண்டுதான். ஆனால் தணிக்கைக் குழுவினர் நெறிக் கண், பண்புக் கண், நல்ல கலைக் கண் என்ற அகக் கண்களையும் இழந்தவர்கள்!

இந்தக் குற்றச்சாட்டுக்குப் பதில் சொல்லும் ஸ்ரீமதி சரோஜினி வரதப்பன் அவர்கள், குழுவினர் படத்தைப் பார்த்துத் தணிக்கை செய்யும் நடைமுறை பற்றி விரிவாகச் சொல்லியிருக்கிறார். அதன் முடிவில் அவர் சொல்லியிருப்பதுதான் நம்மைத் திடுக்கிட வைப்பதாக இருக்கிறது. "வெட்ட வேண்டிய காட்சிகளைத் தணிக்கை உறுப்பினர்கள் நால்வரும் தீர்மானித்து முடிவெடுத்தும், படம் வெளிவந்த பிறகு பார்த்தால் அக்காட்சிகள் வெட்டப்படாமலேயே இடம் பெற்றிருப்பதாகச் சிலர் என்னிடம் சொன்னார்கள். இது உண்மையா இல்லையா என்று எனக்குத் தெரியவில்லை" என்கிறார் ஸ்ரீமதி சரோஜினி.

இது ஓர் அதிர்ச்சி தரும் கூற்று-"தணிக்கை உறுப்பினர் படத்தைப் பார்த்து வெட்டப்பட வேண்டிய பகுதிகளைச் சொல்ல மண்டல அதிகாரி அவற்றைக் குறித்துக் கொள்வார். பின்னர் அந்த அதிகாரி வெட்டப்பட வேண்டியவற்றைப் படத் தயாரிப்பாளருக்கு விளக்கிக் காட்டுவார். படத் தயாரிப்பாளர் தாமே அவற்றை வெட்டி விடுவதாகத் தெரிவித்தால் அதன்படி உருவாகும் படத்தை மண்டல அதிகாரி மட்டும் பார்த்துவிட்டுச் சான்றிதழ் வழங்குவார்."

அதன் பிறகும் வெட்டப்பட வேண்டிய பகுதிகள் படத்தில் இடம் பெற்றிருந்தால் அதற்கு யார் பொறுப்பு? மண்டல அதிகாரியா அல்லது, படத் தயாரிப்பாளர்களா? மண்டல அதிகாரி என்றால் அவர் தணிக்கை உறுப்பினர் கருத்தை ஏற்காமல் அவர்கள் வெட்டச் சொன்ன பகுதிகளைப் படத்தில் அனுமதித்திருக்கிறார் என்று பொருள். அப்படி அவர் தன்னிச்சையாக அனுமதிப்பதற்குத் தணிக்கைக் குழு உறுப்பினர்கள் பார்ப்பது என்ற நாடகமெல்லாம் எதற்கு?

மண்டல அதிகாரிக்கு மட்டும் வெட்டிக் காண்பித்துவிட்டுப் படத் தயாரிப்பாளர் மக்கள் பார்க்கும் படத்தில் அவற்றை வெட்டாமலே வைத்திருந்தாரென்றால் அது சட்டப்படி தண்டனைக்குரிய ஒரு குற்றம்.



திரு கோபாலகிருஷ்ணன்



ஸ்ரீமதி சரோஜினி வரதப்பன்



திரு கே. பாலசந்தர்



ஸ்ரீமதி சௌந்தரா கைலாசம்

தாங்கள் வெட்டச் சொன்ன பகுதிகள் படத்தில் இடம் பெற்றிருப்பதாகக் கேள்விப்படும் தணிக்கை உறுப்பினர்களுக்கு அது மெய்யா பொய்யா என்று பார்க்கும் பொறுப்புக் கிடையாதா?

தமிழ்ப் படத் தயாரிப்பாளர்கள் இங்கு காட்டப்படும் மேல் நாட்டுப் படங்களில் அனுமதிக்கப்படும் காட்சிகளை மேற்கோள் காட்டி, ''எங்களுக்கும் அந்த மாதிரி ஆபாசங்களைப் படத்தில் சேர்க்க அனுமதி வேண்டும் என்று வாதாடுகிறார்கள்'' என்கிறார் திருமதி சரோஜினி. ''மலையாளம், தெலுங்கு, கன்னடப் படங்களைத் தமிழ்ப் படங்களைவிடச் சற்று தரமுள்ளவைகளாகத்தான் தயாரிக்கிறார்கள்'' என்றும் இந்தத் தணிக்கைக் குழு உறுப்பினர் சொல்கிறார்.

அதாவது ''மக்களின் ரசனை மாறியிருக்கிறது'' என்று திரைப் படத் துறையில் உள்ளவர்கள் சொல்லும் கூற்று உண்மையானால் அந்த ரசனை மாறுதல் தமிழ் மக்களிடம் மட்டும்தான் ஏற்பட்டிருக்கிறது. அடுத்த வீட்டுக்காரர்களான மலையாளம், தெலுங்கு, கன்னட மக்களிடையே ஏற்படவில்லை!

திரு ஜாவர் சீதாராமனின் குறைகூறலுக்கு திரு கே. பாலசந்தரிடம் பதில் கேட்டது மிக மிகப் பொருத்தம். திரு பாலசந்தரும் ஒரு கதை வசன எழுத்தாளர். அப்புறம்தான் அவர் இயக்குனர்.

திரு பாலசந்தர் அந்தக் குறைகூறலை மறுக்கவில்லை. அதற்குச் சமாதானம் அல்லது விளக்கம் சொல்லிப் பூசி மெழுகவும் முயலவில்லை. ஒரே வழியில் ''அது உண்மைதான். கலை என்பது வியாபாரமாகி விட்டது. கலை என்பதன் மெய்யான உருவம் என்னவோ அதன் இலக்கணங்கள் யாவையோ எனக்குத் தெரியாது. அவற்றைப் பற்றி நான் கவலைப் படவுமில்லை. இன்று நாங்கள் வியாபாரச் சரக்காகக் கொடுக்கும் பண்டத்திற்கு நாங்கள் கலை என்று பெயர் சொல்லுகிறோம். அதைத்தான் மக்கள் காசு கொடுத்துக் கலை என்று நம்பி ரசிக்க வேண்டும்'' என்ற தொனியில் பதில் சொல்லியிருக்கிறார்.

திரைப் படக் கலை என்பது இன்று வியாபாரமாகி விட்டது என்று ஒப்புக்கொள்ளும் போது மற்ற வியாபாரங்களில் காட்டப்படும் கட்டுப்பாடு இதற்கும் வேண்டுமல்லவா? பால் வியாபாரி நீர் ஊற்றிக் கலப்படம் செய்தால் தண்டனைக்குள்ளாகிறான். மளிகை வியாபாரி அரிசியில் கல்லும் மண்ணும் கலந்து விற்றால் ஒரு சமயம் இல்லாவிட்டால் இன்னொரு சமயம் அதிகாரியிடம் அகப்பட்டுக் கொண்டு தண்டனை பெறுகிறான். ஆனால் சினிமா வியாபாரத்தில் மட்டும் கலப்படத்துக்குக் கேள்வி முறையே கிடையாது! மேனாட்டுத் திரைப் படங்களில் உள்ளது போன்ற கதை, காட்சிகள், உடைகள், நடனங்கள், ட்யூன்கள் இவற்றைத் தமிழ்ப் படத்தில் கலப்படம் செய்யும் திரை உலக வியாபாரிகள் மட்டும் தண்டனை பெறாமல் ஏன் தப்ப வேண்டும்?

''பல லட்சங்களை முடக்கித் தயாரிப்பில் ஈடுபட்டிருக்கும் ஒரு தயாரிப்பாளர், ஒரு நடிகருடைய குணச் சித்திர நடிப்பைப் பயன்படுத்திக் கொள்ளும்போது அந்த நடிகர் விரும்பும் வகையில் கதையை மாற்றி அவருக்கேற்ற காட்சிகளையோ கருத்துக்களையோ தருவதில் என்ன தவறு?'' கே. பாலசந்தர் கூறிய இக்கருத்து ஒரு எழுத்தாளன் என்ற முறையில் என்னை அதிர அடித்து விட்டது. இதன் உட்பொருள் என்ன புரிகிறதா?

(1) ஒரு குணச்சித்திர நடிகர். அவருக்கு ஒரே ஒரு பெயர்தான். அது நாடு முழுவதும் தெரியும். ஆனால் அவர் நடிக்கும் ஒவ்வொரு படத்திலும் அவருக்கு 'ஒப்புக்கு' ஒரு பெயர் உண்டு. முத்து, முருகன், மூக்கன், மோகன், சந்தர், சாரதி, சேகர் என்று ஒவ்வொரு படத்திலும் வெவ்வேறு பெயருடன் வந்தாலும் அவருடைய குணச்சித்திர நடிப்பு ஒரே மாதிரியானதுதான். ஆகையால் ஒவ்வொரு படக் கதையிலும் அந்தக் குணச்சித்திரத்துக்கு இடம் கொடுத்தாக வேண்டும். அந்த ஒரே ''குணச்சித்திர'' நடிப்பை மக்கள் திரும்பத் திரும்பப் பார்த்துக் களிக்கப் பணம் கொடுக்கிறார்கள்! அல்லது,

(2) உங்கள் கதையின் உயிர்நாடிக்குத் தகுந்தபடி உங்கள் கதாபாத்திரங்களைப் படைத்திருப்பீர்கள். ஆனால் 'குணச்சித்திர' நடிகரின் தனித்திறமையை வெளியிட அந்தக் கதையில் அவர் ஏற்கும் பாத்திரத்தின் தன்மை மாறித்தான் ஆக வேண்டும். அதன் விளைவாக மற்ற பாத்திரங்களின் அமைப்புகளும் கதையின் உயிர்நாடியே மாறினாலும் பரவாயில்லை! இப்போது இது தலையும் இல்லாமல் வாலும் இல்லாமல் புதுக் கதையாக இருக்கிறதா? அதைப் பற்றி யாரும் கவலைப் பட வேண்டாம். படத் தயாரிப்பாளருக்குப் போட்ட பணம் வசூலாகிவிடும். நல்ல லாபமும் கிடைக்கும். 'குணச்சித்திர' நடிகரின் பெயர் இருக்கிறது

அல்லது,

(3) எங்கள் குணச்சித்திர நடிகருக்கு எந்த விதமான பாத்திரத்தையும் ஏற்று நடிக்கும் ஆற்றல், கலைத் திறம் உண்டு. ஆனால் நாங்கள் ''எக்ஸ்பிரிமெண்ட்'' செய்ய விரும்பவில்லை. மக்கள் கண்டு ரசித்துப் பெருவாரியாகப் பணம் கொடுத்த அந்த குணச்சித்திரத்தையே இந்தக் கதையிலும் கொண்டு வர வழி செய்யுங்கள்.

இந்த விளக்கம் இன்னும் நீண்டுகொண்டு போகும். ''தமிழ்ப் படத்துக்குக் கதை வசனம் எழுத வருகிறவர்கள் இதைப் புரிந்து கொண்டு வந்தால்தான் அங்கே அவர்களுக்கு இடம் கிடைக்கும்'' என்று புரியும்படி உண்மையைச் சொல்லியிருப்பதற்கு திரு பாலசந்தரைப் பாராட்ட வேண்டும்.

''சூதாட்ட மனப்பான்மை இந்தத் தொழிலில் மட்டுமல்ல, எல்லாத் துறைகளிலுமே இருக்கும்போது சினிமாவை மட்டும் குறை கூறுவானேன்'' என்று கேட்கிறார் பாலசந்தர்.

மற்றத் துறைகளில் உள்ள சூதாட்ட மனப்பான்மை மக்களின் பொருள் விரயத்துக்கு மட்டும்தான் காரணமாகும். ஆனால் சினிமாத் துறையில் உள்ள அது படத் தயாரிப்பாளர்களுக்கும் நல்லது கெட்டது தெரியாதபடி கண்ணை மறைத்து மக்களிடையிலும் ஆபாச உணர்ச்சிகளையும், அழுக்கு எண்ணங்களையும் பரப்ப வழி செய்கிறது. அது மக்களில் ஒரு தலைமுறையினரையே நெறி முறைத் திசை அறியாத நோய்ப்பட்ட மனத்தினராக்கும் அபாயகரமான மனப்பான்மையாக இருக்கிறது. **(அடுத்த இதழில் முடியும்)**

# 27. உள்ளத்து நிலவு நீ!

வசந்தனின் குறுக்கீட்டுக்காகச் சீலியா தன் பேச்சை நிறுத்தவில்லை. மறுபடியும் தான் விட்ட பேச்சை விட்ட இடத்திலிருந்தே தொடர்ந்தாள். அப்பொழுது அவள் கண்கள் நனைந்தன. ''வசந்த்! ஒன்றுமட்டும் நினைவுகூருங்கள் போதும். உங்கள் நினைவு தினமும் பூத்து வாடிவிடும் மலர் அல்ல. நெஞ்சில் ஏற்றிய கணமே நிலைபெற்று விட்ட சுடர் அது. அதை அணைக்க இவ்வுலகில் நீரில்லை, காற்றில்லை. அங்கே உங்களைத் தொழுது கொண்டே காத்திருப்பவள் நான். எனது தொழுகையும், ஆராதனையும் ரகசியமாக நடந்து வந்தன. எனது நோன்பும், வேள்வியும் யாருக்கும் தென்படாமல் நடந்து வந்தன. இனி என்னால் அது முடியாது போல் உள்ளது. இரவு பகல் தெய்வத்தை அர்ச்சிக்கும்போதுகூடப் பலன் ஒன்றே குறிக்கோளாக நிற்கிறது. நானே எந்த முடிவுக்கும் வர முடியாத ஒன்றை எண்ணி, அதையே வேண்டிக் காத்திருக்கும் நிலையில், உரியவரிடம் அதைத் தெரிவிப்பது ஒன்றையே பெரும் பலனாகக் கருதிச் சொல்கிறேன். உங்களுக்காக இந்த நெற்றித் திலகமும், மலர்களும் என்னை அலங்கரிக்கின்றன......!'' இதயத்தில் பாரமாக அழுத்திய நோவை அவளால் தாங்க முடியவில்லை. கண் விளிம்பில் முத்துக்கள் திரண்டு சரிந்தன..... அதரங்களிலோ வேதனைத் துடிப்பு.

அவன் விதிர்த்தான். மிக மெல்லிய தெளிவான குரலில் அவன் கூறியது அவள் மனத்தருகே மடை பாய்ந்தாற் போல் பீறிட்டது. ''சீலியா! கடந்து போன ஒன்றை, புதுப்பிக்க முடியாத ஒன்றை எண்ணி அல்லும் பகலும் நான் கலங்கித் தவிப்பதை உங்களைப் போலவே தெளிவாக, தைரியமாக, உங்கள் முன்னாலும், உலகின் முன்னாலும் காட்டிக் கொள்வதால் மீட்பு உண்டா? பண்பு பறிபோவதைத் தவிர, மையொற்றுத் தாளாக உங்கள் வார்த்தைகளையே நான் பிரதிபலித்தாலும் பயனுண்டா? எனக்கும் மனம் இருக்கிறது சீலியா. அதை இயக்குவதில் சர்வ ஜாக்கிரதையாக இருக்கிறேன் நான்.......''

அவள் திகைத்தாள். உண்மையையே பிரதிபலிக்கும் அவன் முகத்தில் சோகத்தின் ரேகைகள் அப்பட்டமாகத் தெரிந்தன. கடைசியில் அவனது வெறும் சொற்களாலா அவள் பாதி துயரம் குறையப் பெற்றாள்? மனம் உணர்ந்த மனத்தின் ஆறுதலா அது? வாய் திறந்த கணமே சிப்பிக்குள் நீர் முத்துக் கிடைத்தாற்போன்ற காரிய பூர்த்தியாக மனம் தன்னையே பொத்திக் கொண்டது!

வசந்தனின் ஒரே ஒரு இதமான பேச்சால் அந்தச் சூழலே இனிமை படைத்தாற்போல் தெரிந்தது சீலியாவுக்கு. இருவரிடையேயும் பேச்சு முடிந்து மௌனம் நீடித்த போது கம்பவுண்டர் மெதுவே அங்கு வந்தார். சாதுரியமான குரலில் சீலியாவிடம், ''தபாலுக்கு நேரமாகிவிட்டது, டாக்டர்'' என்று நினைவூட்டினார். சீலியா அவசர அவசரமாகத் தபால்களை வரைந்தாள். கையெழுத்திட்டுக் கம்பவுண்டரிடம் கொடுத்துவிட்டு நிம்மதியான பெருமூச்சு விட்டாள்.

''ஓ! மணி ஒன்றாகி விட்டதா?'' என்றான் வசந்தன், கைக் கடிகாரத்தைப் பார்த்தவாறே. பிறகு 'வானை' நோக்கி நடந்தான்.

# இனிக்கும்



சூழலி படுக்கையினின்றும் எழ முயன்றாள். வசந்தன் அவளைத் தடுத்தான். ''நீ படுத்துக் கொள். நானாகச் சாப்பிடுகிறேன்'' என்றான்.

''நான் சாப்பிட வேண்டாமா?'' என்று கேட்டு அவள் சிரிக்க முயன்றாள்.

''ஓ! அதை மறந்துவிட்டேன். வா, சாப்பிடலாம்.''

இருவரும் மேசையில் அமர்ந்து கொண்டனர்.

''முன்பே நீ சாப்பிட்டிருக்கலாமே.... எனக்காக இத்தனை நேரம் காத்திருக்க வேண்டுமா?''

''மனசில்லையே!''

''அப்படி ஒரு மூட நம்பிக்கை உனக்கு. பார், முகமெல்லாம் சோர்ந்து கிடக்கிறது.''

அவள் தலையைச் சாய்த்துக் கொண்டாள். சோர்வினாலா வெட்கத்தினாலா என்பது புரியவில்லை. அவள்



உடம்பு இளைத்திருந்தாலும் மினு மினுப்போடு தாய்மை மெருகேறிக் களைகட்டியிருந்தது.

''உம்! சாப்பிடு.''

''ரொம்ப பலஹீனமாக இருக்கு.''

''ஏன்? திடீரென்று ஏன் இப்ப?''— அவன் மெதுவாக அவளைப் பார்த்த வாறே, ''நீ இனி மேல் கம்ப்ளீட் ரெஸ்ட் எடுத்துக்கணும். புரிகிறதா? உன்னால் ஒன்றுமே முடியவில்லை. நிறைய வேலைகள் செய்து கொண் டிருக்கிறாய்.''

''அது அல்ல. சில சமயத்தில் நெஞ்சு படபடத்து மயக்கம் வந்துவிடுகிறது.''

''ஓ! அதுவா? உன் மனத்தைத் தெளிவாக வைத்துக் கொண்டால் எல் லாம் சரியாகிவிடும். அன்று பார், ஏதோ பேசி என் கோபத்தைக் கிளறி விட்டாய். உன்னைக் கோபிக்க நேர்ந்து விட்டது. நீபாட்டில் அழுது கொண்டே இருக்கிறாய். ஈரத் தரையில் புரள் கிறாய். உடம்பை நன்றாகக் கவனித்துக் கொண்டால்தானே.....?''

''இன்று நீங்கள் ஆஸ்பத்திரியி லிருந்து திரும்ப ரொம்ப நேரமாகி விட்டதில்லையா?'' என்று பேச்சை மாற்ற முயன்றாள்.

'' 'வேன்' டவுனிலிருந்து இப்போது தான் வந்தது. அது போகட்டும். திங்கட்கிழமை காலை நான் சென்னைக்குப் புறப்படுகிறேன். உனக்குத் துணைக்கு இங்கே அப்பாவும் இல்லை. நீ தனி யாக எப்படி இருப்பாய்? அதனால் என்னோடு புறப்படு. அப்பா அம்மா வைப் பார்க்கவேணும் என்று உனக்கும் ஆசையா யிருக்கும் இல்லையா?''

''கடிதம் எழுதவில்லையே! திடுதிப் பென்று போய் நின்றால்.....?''

''விஷயத்தைத் தெரிந்து கொண் டால் 'மசக்கை ஆசை' என்று புரிந்து விடுகிறது.'' — அவன் சிரித்தான்.

''உஷ்.... இன்று நீங்கள் என்னை ரொம்பவும் பரிகசிக்கிறீர்கள்.....!''

அவன் சட்டென அவள் கைகளைப் பற்றித் தன்னருகே இழுத்தான். அவள் காதோரம் குனிந்து, ''ஊருக்குப் போனால் என்னோடு திரும்பிவிடுவாயில் லையா? தங்கி விடுவாயா? ராணி இல்லாத வீட்டில் ராஜாவுக்கு என்ன வேலை அப்புறம்.....! உன் அம்மா



எத்தனை சொன்னாலும் மீறி வந்து விடு. என்ன? அங்கே போனதும் பிறந்தகச் சீராடலில் என்னை மறந்து விடாதே.....!'' என்றான்.

குழலியின் முகத்தில் சட்டென ஒரு குழப்பம் நெளிந்தது. ''நீங்கள் சொன்னதெல்லாம் உண்மையா?.... நான் இதை நம்பலாமா?'' என்றாள்.

''திடீரென என்ன வந்தது உனக்கு?''

''ஒன்றுமில்லை....'' அவள் விலகி உள்ளே மறைந்து கொண்டாள்.

தன் இதயத்தின் பலவீனத்தையே குழலி தொட்டுக் காட்டினாற் போன்ற பரபரப்பு. அந்த நுட்ப இழைகளை அவள் கண்டு கொண்ட பிரமிப்பு. அவள் சந்தேகம் சரியா? இத்தனை நாளும் கட்டுப்பாடாக வீற்றிருந்த மனம் தளைகளை அறுக்க முயல்கிறதா? தனது பலவீனத் துடிப்பே அன்பைக் காட்டும் நடிப்பாக மாறிவிட்டதா? தன்னை முழுவதுமாகக் கண்டுகொள்ளக் குழலிக்குக் கொஞ்சம் கொஞ்சமாகச் சந்தர்ப்பங்கள் வாய்த்து விட்டனவா? சீலியாவைக் கண்ட அதிர்ச்சியில் மயக்கமடைந்த அவன் மனம் அவனைப் பற்றிய சம்சயத்தில்தான் தூர நின்று பார்த்துக் கொண்டிருக்கிறதே. ஒவ்வொரு நிமிடத்தையும் அவள் நெருப்பிடைப் புழுப் போல தவித்து ஓட்டுகிறாள் போலும். இது தன்னைத் தானே கொன்று கொள்ளும் வேதனையாயிற்றே! அங்கே ஒரு பைத்தியக்காரி வேறு கோணத்தில் இதே செயலைச் செய்து வருகிறாள். வாழ்வில் இனிமை என்ற பதத்துக்கு இயல்பான அர்த்தத்தை விளக்கிக் காட்டியவள், தன் இனிமையை வானத் தாமரையாக மலர விட்டு விட்டு இப்போது வெம்பி மடிகிறாள். ஆனால் இந்த இரு துயரங்களிலும் பங்கெடுக்க வேண்டிய விதி வசந்தனுக்கு!

சீலியாவின் நோக்கும், போக்கும் அவனுக்கு விந்தையும் அதிர்ச்சியும் ஊட்டின. அவளது புதிய தோரணையும் சொற்களும் அவன் எண்ணத்துக்கும் அப்பால் ஒன்றுமே புரியாத 'பிக்காசோ'வின் சித்திரத்தைப் போல் தெரிந்தது. ஊன்றிக் கவனிப்பதின் மூலம் பொருளைப் புரிந்து கொள்ளும் தெம்பில்லை. புரிந்தபின் ஏற்கும் திடமில்லை. அதைக் காணும் திகில் அதன் பொருள் புரியாமலேயே கலந்து கிடக்கும் தோரணையில் தன்னைச் சமாளித்துக் கொண்டது. சீலியா வந்த சில தினங்களுக்குள்ளாகவே சற்றும் எதிர்பாராத நேரத்தில், சரம் அவிழ்ந்து கொட்டும் மலர்களாகச் சரிந்த சொற்களை முதலில் அவனால் நம்பக்கூடவில்லை. எனவே தன்னுள் பதுங்கிக் கிடந்ததை அவன் மேலும் பதுக்கிக் கொண்டான். அவள் மொழிகள் தனக்கு ஊக்கம் வழங்கும் மொழிகளாகாமல் பார்த்துக் கொண்டான். தன்னையே ஒப்புக் கொள்ளாமல் எதிர் வழக்காடினான். ஞான போதனை செய்தான். ஆனால் மிகவும் உள்ளே ஒரு குரல் மெல்லென விசிக்கும் தெம்பலை அவன் மறைத்துக் கொள்ளப் போராடினான். அந்தப் போராட்டத்தில் அவனுக்கு வெற்றியில்லை என்றாலும் கூடத் தோல்வி இல்லை! அந்த அளவு சமாளிப்புத்தான் மனித வெற்றி!

மன வெற்றியா அது? இல்லாமலிருக்கலாம். பேச்சின் போக்கில் இழுபட்டுத் தன் மன உணர்வையும் சீலியாவிடம் கடைசியில் கொஞ்சம் கொட்டி விட்டது உண்மை. அந்த அளவு, தன்னைக் காட்டிக் கொண்ட அளவு, அவன் வெற்றிபெற்றானா...? இல்லை.... போரில் வெற்றியல்ல.... போரைப் பிறரிடம் மறைத்துவிட்டு ஒன்றுமே இல்லாதது போல் நடித்ததில் வெற்றி. மற்றப்படி அவன் மன அடிப்படையில், அதலபாதாளத்தில் கிடந்தான். கடந்து போன இனிமைகளையும், தித்தித்த நாட்களையும் அவன் எண்ணி மகிழாத நாட்கள் குறைவு. தள்ளிவிடத் தள்ளிவிடப் பாசியாகச் சூழ்ந்து பற்றிக் கொள்ளும் நினைவுகள் அவை. இம்மியும் குறையாது அவைகளை அசை போட்ட தருணத்திலெல்லாம் சீலியாவின் நினைவு அவனை முற்றுகையிட்டு மூட்டம் போட்ட வண்ணமேதான் இருந்திருக்கிறது. சீலியா அந்த ஊருக்கு வரப் போகிறாள் என்று உணர்ந்த கணமே அவன் அடைந்த இனிமை உணர்வும், அடைந்த ஆனந்தமும் கொஞ்சநஞ்சமல்ல. கானலான கற்பனைகளும், மாயமான நினைவுகளும் சுதந்திரமாகக் கவிய ஆரம்பித்ததே தவறில்லையா? இப்போது அதே உணர்வுடன் பன்மடங்கு வீரியத்துடன் சீலியா அவனது இதய மொழியையே ஒலித்தபோது தான் அவன் உஷாரானான். அப்போது அவன், புற எல்லைக்கு வந்து அக எல்லையைத் தேடுவது தெரிந்தது. வட்டத்துக்குள் நின்று கொண்டு சுற்றுக் கோட்டைத் தேடுவது போல் தெரிந்தது. தெள்ளத் தெளிந்த நீரை வேண்டுமென்றே கலக்கி வேறுவித பாவனையைத் தேடும் வீணாசை. உரு மாறியதை உருவத்தோடு தேட


உங்கள் கனவை
நனவாக்க
பின்னியின்
தூய பட்டுப்
புடவை
மென்மை சுகமும்,
அழகும் மிக்க புடவை உடுத்தி
கனவுலக இன்பம் காண விரும்பும்
எழில் மங்கையருக்கு பின்னியின்
தூய பட்டுப் புடவை
அவ்வனுபவத்தை அளிக்கிறது.
என்ன கவர்ச்சி!...என்ன பள
பளப்பு!...பின்னியின் தூய பட்டுப்
புடவை, நினைவாக்கும் கனவிதுவே.
பின்னியின் தூய பட்டுப் புடவை,
தூய ஜார்ஜெட், மென் பட்டு,
ஷாட் ஸில்க்.
bm-4268

மூனையும் அதித விழைவு. அவன் மட்டும் என்ன? அவளுமேகூட.....

அந்தி வானத்தின் கிழக்குத் திசையில் சாம்பல் நிற மேகங்களும் சிவப்பு நிற முகில்களும் கும்மியடித்துக் கூத்திட்டன. வானத்தில் எங்கோ தெரியும் இளம் சிவப்பு நிறம் எதற்காகப் படைக்கப்பட்டதோ? அது தோற்றுவிக்கும் எழிலுக்கு ஈடு இணை ஏது? பலகணியோரம் நாற்காலியில் கால்களைக் கம்பிகளில் பதித்துத் தன்னை மறந்த நிலையில் உட்கார்ந்திருந்தாள் சீலியா. குவார்ட்டர்ஸின் எதிரே பூத்துக் குலுங்கிய மலர்களின் மணம் இலேசாக மிதந்து உட்புகுந்தது. ஒவ்வொரு மூச்சையும் மணம் தழுவ நிதானமாக ரசித்து உள்ளிழுத்தாள் அவள். அந்த மணத்தில் நிர்மலமாகிய மனம், மீண்டும் வானத்தை நோக்கியது. நிமிடத்துக்குநிமிடம் மாறும் பச்சோந்தியைப் போல் வானம் வெவ்வேறு வண்ணத்தில் தன்னை எழில் செய்து கொண்டது. தன் அழகைத் தானே ரசிக்கும் போதையோடு நிலவு பவனி வரத் தொடங்கியது. வெண் முத்துக்களைச் சரமாக்கி வீசியெறிந்தாற்போல் நட்சத்திரங்கள் மினுக்க ஆரம்பித்தன. இன்று என்னவோ அவள் நெஞ்சு நிறைய நிம்மதி குவிந்து கிடந்தது.

மோகன முழு நிலவு!

வட்ட வெண்மதியின் குளுமை சித்தப் பிரமைக்குக்கூடக் காரணமாகலாம் என்ற ஓர் அடிப்படைத் தத்துவம் உண்டே! அதன் ஈர்ப்பில் ஒரு பெண், அதிலும் கதை மனம் படைத்தவள், நுட்ப உணர்வுகளை ஆற்றல் மிக்க சரமாகக் கோக்கும் சக்தி வாய்ந்தவள் ஈடுபடும் போது உலக ஏடுகள் விரிந்தேற்கும் காவியம் பிறந்து விடுகிறது. அதிலும் மனத்தில் மணக்கும் காதல். அதைத் துய்த்த கொஞ்ச நாளில் கண்ட இனிமை, அதை இழந்த கொஞ்ச நாளில் கொண்ட துயரம், மறுபடி மீண்ட கொஞ்ச நேரத்தில் ஆட்பட்ட உணர்வு இவைகளின் கலவை இதய அச்சில் கவிந்து பதிந்து புது ரூபம் பெற்று விகசித்தது. அவள் இதய வீணையின் ஒவ்வொரு நரம்பின் மீட்டலும் ஓர் ஆர்வச் சாயலைத் தேக்கும் ஸ்வர வடிவங்களாக உதிர்ந்தன.

ஊடுருவும் அவள் கண்கள் திங்களின் எழிலில் சொக்கி நின்றன. கைக்கெட்டும் தூரத்தில் கிடந்த காகிதத்தை எடுத்தாள். பேனாவின் முனை அவள் எண்ணங்களை, கற்பனைகளை இம்மியும் பிசகாமல் தீட்டியது.

அன்று அவள் எழுதிய 'உள்ளத்து நிலவு நீ' என்னும் சிறுகதை சோகத்தை வடித்தெடுத்த சாறு. அது பெரியப்பா மீனாட்சி சுந்தரம் நடத்தும் ''காப்பியம்'' இதழுக்குச் செல்லவில்லை. வசந்தன் சென்னையில் இருந்த அந்த வாரத்திலேயே ''மல்லிகை'' என்னும் வார இதழை அலங்கரித்தது. பிரசுரமான அந்தக் கதையைச் சீலியா பார்க்கு முன்பே குழலி பார்த்து விட்டாள். கதையின் ஒவ்வொரு சொல்லும், வரியும் கடு சரங்களாகக் குழலியைத் தாக்கின. தாயின் கையில் ஒரு முறை மயக்கமடைந்து விழுந்து தன் பலவீனத்தைக் காட்டிக் கொண்டு விட்டாள். எனவே, வசந்தன் தனக்குரிய ரணசிகிச்சைப் பயிற்சியை முடித்துக் கொண்டு நெடூருக்குப் புறப்பட்டபோது குழலியால் அவனோடு புறப்பட முடியவில்லை. அதோடு முதன் முதல் தாய்மையுற்றிருக்கும் அருமை மகளைச் சீராட்டி மகிழ அவளது பெற்றோர்கள் விரும்பினார்கள். வசந்தனால் அதை மறுக்க முடியவில்லை. குழலிக்கு அவனுடன் புறப்படப் பாதி ஆசை, பெற்றோருடன் தங்கிவிட்டு வரப் பாதி ஆவல். இதை உணர்ந்தவன் அவளைச் சமாதானப் படுத்தி, 'கொஞ்ச நாள் இருந்து விட்டுச் சீக்கிரம் வந்து விடு' என்று தேற்றி விட்டுப் புறப்பட்டான். கண்ணீரோடு விடை கொடுத்தாள் குழலி. உடம்பைப் பார்த்துக் கொள்ளும்படி தன் டாக்டர் கணவனுக்கே ஆயிரம் புத்திமதிகள் கூறி அனுப்பினாள். பெண் என்றால் பேதை என்பதற்கு இதைவிடச் சான்றுவேறேது?

சென்னை எழும்பூரில் வசந்தன் வண்டி ஏறி உட்கார்ந்தான். வண்டி நகர்வதற்குள்ளாகவே அவன் மனம் பாதை நழுவி வேறு எங்கோ ஊர்ந்தது!

வசந்தன் சென்னையிலிருந்து வந்து ஒரு வாரமாகி விட்டது. இதற்குள் குழலியிடமிருந்து அவனுக்கு மூன்று கடிதங்கள் வந்துவிட்டன. ஒன்றுக்காவது அவன் பதில் போடவில்லை. காரணம், தன் பணிவிடைகளினால் வசந்தனை முழுச் சோம்பேறியாக்கியிருந்தாள் குழலி. அவள் பிறந்தகம் ஆடப் போனதும், தாகத்துக்கு ஒரு வாய் தண்ணீர் வேண்டுமென்றாலும் வசந்தனுக்கு வளைக் கரங்களின் நினைவு வந்ததே யொழியத் தண்ணீர் எடுத்துப் பருக வேண்டும் என்று தோன்றியதில்லை.

வீடே சூனியம் படர்ந்தாற்போல் இருந்தது அவனுக்கு. முன் ஹாலில் கிடந்த மேசை நாற்காலிகள் எல்லாம் தூசியடைந்து கிடந்தன. அவன் படுக்கை

உதறிப் போடப்படாமலும், உறை மாற்றப்படாமலும் கிடந்தது. பூக்கலசத்தில் வைக்கப்பட்டுக் காய்ந்து சருகாகி விட்ட மலர்க் கொத்துக்கள் தூக்கி எறியப்படாமல் அப்படியே நின்று சோகம் காத்தன. பத்திரிகைகள் கலைந்து, குலைந்து கிடந்தன. குழலி இல்லாக் குறை, எல்லாம் இருந்தும் எதுவுமில்லை என்பதுபோல் அவனை நினைக்க வைத்தது. அவனை அப்படி மாற்றி விட்டிருந்தாள் குழலி. பார்க்கப் போனால் சிறுகச் சிறுக அவன் மனத்தையே அல்லவா அவள் திருடிக் கொண்டு விட்டாள்?

ஆனால்.....!

இந்த உள் மனம் எத்தனை கள்ளம் மிக்கது! சமயம் பார்த்துத் தன் சிதைந்த சபலத்தையும் ஏந்தி ஏந்திக் கவர்ந்திழுக்க அல்லவா முயல்கிறது! சீலியா வந்தபின்...ஏற்பட்டுள்ள மன நிலைக்கு என்னவென்று பொருள்?

ஒரு வேளை மூன்றாவது கடிதத்துக்கும் அவன் பதில் எழுதிப் போடாததற்குக் காரணம் சீலியாவோ? சே! அப்படிச் சொல்லிவிட முடியுமா?

அன்று சீலியா முன்னதாகவே ஆஸ்பத்திரிக்கு வந்து விட்டிருந்தாள். ஏதோ ஒரு பிரசவ கேஸ்.

வசந்தனுக்கும் அன்று சில அறுவைக் கேஸ்கள். அவற்றை முடித்துக் கொண்டு அவன் அலுப்போடு வந்து சாய்ந்து கொண்டான். அதே அளவு அலுப்போடு அவன் எதிரில் வந்து உட்கார்ந்து மூச்சை இழுத்துவிட்ட சீலியா, ''ஒரே ரொடீன் ஒர்க்'' என்று முணு முணுத்தாள்.

அவன் சிரித்தவாறே கூறினான்: ''ஒரே நேரத்தில் நானும் நீங்களும் செய்து விட்டு வந்த பணிகளைப் பாருங்களேன். இரு துருவப் பணிகள்!''

அவள் உணர்ந்து கொண்டாற்போல் சிரித்தாள்.

''கருவை உருவாக்கி மகிழ்ந்த தாய்க்கு நீங்கள் மழலையைக் காட்டி விட்டு வந்திருக்கிறீர்கள். நானோ அதே மகிழ்ச்சியை மறுபடியும் அந்தத் தாய் அடைய முடியாத வழியைச் செய்துவிட்டு வருகிறேன்!''

இப்படி அவன் கூறிக் கொண்டிருந்த பொழுது வாசலில் வான் வந்து நிற்கும் ஒலி கேட்டது. வசந்தன் தலை நிமிர்ந்தான். வந்து நின்றது சங்கரநல்லூர் ஆரம்ப சுகாதார நிலையத்து வான். அதைக் கண்டதும் சீலியா வசந்தனிடம் விடை பெற்றுக் கொண்டு எழுந்தாள்.

---

## பட்டணத்தில் ஃப்ளு!



அலுவலகம் ஒன்றில் மானேஜர் கூறுவது: எங்கள் ஆபீசில் பாதிப்பேர் வரவில்லை. ஃப்ளு ஜுரமாம், மட்டம் போட்டு விட்டார்கள்.

அலுவலகத்துக்கு விஜயம் செய்தவர்: அப்படியானால் மீதமுள்ள பாதிப்பேர்...?

மானேஜர்: ஃப்ளு வரப்போவது முன் கூட்டியே தெரியாமல், ஜுரம், அது இது என்று லீவ் போட்டுவிட்டிருக்கிறார்கள்.



ஒருவர்: சிங்கப்பூரிலிருந்து இந்த ஃப்ளு வந்திருப்பதாகச் சொல்கிறார்களே. சிங்கப்பூர் ஃப்ளு என்பதால் இதற்கு ஏதாவது தனி விசேஷம் இருக்குமோ?

நண்பர்: இராதா பின்னே. சிங்கப்பூர் ஃப்ளுவினால் பாதிக்கப்பட்டேன் என்று சொல்லிக் கொள்வது சற்றுப் பெருமையாக இருக்கிறதல்லவா? நம் உள்ளூர் ஃப்ளுதான் எப்போதும் இருக்கவே இருக்கிறதே!



''என்ன மாமி? பம்பாய்க்குப் போகிறீர்களா? சென்னையிலிருந்து இந்தத் தடவை வெறுங் கையோடு போனால் அங்கே யாரும் கோபித்துக் கொள்ள மாட்டார்கள். கையிலே ஏதாவது சிறு மூட்டை இருந்தால்கூட அதில் ஃப்ளு இருக்குமோ என்று சந்தேகப்படுவார்கள்.



பிரசங்கி: ஃப்ளுவினால்தான் இன்று கூட்டத்துக்கு அதிகமான மக்கள் கூடவில்லை என்று தெரிகிறது!

ஒரு குரல்: ஊரில் ஃப்ளு உள்ளவரையில் இப்படி நீங்கள் மேடையில் சொல்லிச் சமாளித்துக் கொள்ளலாம்!

—கொக்கி

# ராபின் ப்ளூ உலகத்தில் மிக ஏராளமாக விற்பனையாகும் நீலம்

உலகம் முழுதும் சுத்தமான அல்ட்ரா மரைன் ப்ளூ என்றும், வெண்மை தருவதில் பிரபலமானது என்றும் புகழ்பெற்றது. ராபின் அசல் ப்ளூ ஆனபடியால் உங்களுக்கு இயற்கையில் கவர்ச்சியான வெண்மை தருகிறது. அத்துடன் ஒரு பாக்கெட் பல சலவைகளுக்கும் பயன்படுகிறது. மேலும் ராபின் ப்ளூ துணிகளை கெடுக்காது என்பதையும் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்.

போலிகள் ஜாக்கிரதை. அசல் ராபின் ப்ளூவையே வற்புறுத்திக்கேளுங்கள்.






ராபின் ப்ளூ உங்கள் துணிகளுக்கு இயற்கையில் கவர்ச்சிகரமான வெண்மையை சேர்க்கிறது



ARBC-29 TAM

வாயிலில் சீலியாவைக் கண்ட சங்கரன் சிரித்தவாறே கைகூப்பினான். துணுக்குற்ற சீலியா ஓவியம்போல் பதில் வணக்கம் கூறிவிட்டுத் தன் குவார்ட்டர்ஸை நோக்கி நடந்தாள்.

பூட்ஸ் ஒலிக்க, டெரிலின் காற்றில் படபடக்க உள்ளே விரைந்து வந்த சங்கரன், ''வசந்த்! முதலில் நான் கேட்பதற்குப் பதில் கூறு. சீலியா எப்போது இங்கு வந்தாள்?'' என்று கேட்டான்.

''அவள் வந்து கிட்டத்தட்ட இரண்டு மாதங்கள் ஆகின்றன!''

''யூ லக்கி பாய்! இந்த நெடுரே உனக்குச் சொர்க்கமாக மாறியிருக்குமே!'' என்றான் சங்கரன்.

''பிளீஸ், சங்கர்! எனக்குக் கோப மூட்டாதே!''

''இந்த விஷயத்தில் உனக்குக் கோபம் வருவதாகக் கூறினால் நான் நம்பிவிட மாட்டேன். புரிகிறதா?''

''பரவாயில்லை. உன்னைப் பற்றி நான் ஏன் கவலைப்பட வேண்டும்? வந்த விஷயத்தைக் கூறு.''

''ஓ! பரவாயில்லை. கடமை வீரனாகிவிட்டாய்...! என் 'சென்டரில்' சல்ஃபாகுனைடின், ஏ. அண்ட் டி, பி காம்ப்ளக்ஸ் முதலிய மாத்திரைகள் இல்லை. அவசியமாகத் தேவைப்படுகின்றன. உன் சென்டரில் கடனாகப் பெற்றுப் போகலாம் என்று வந்தேன்.''

''ஓ. கே. ஒரு பேப்பரில் குறித்துக் கொடுத்துக் கையெழுத்துப் போட்டு வாங்கிப் போ!'' என்றான் வசந்தன்.

''வீட்டுக்கு ஆளனுப்பி ஒரு கப் காப்பி தருவியேன். ஒரே 'டயர்டா'க இருக்கிறது'' என்றான் சங்கரன்.

''ஐ ஆம் ஸாரி. என் மனைவி ஊரில் இல்லை.''

''வெரி குட்! என்ன அழகான சூழ்நிலை! மனைவி ஊரில் இல்லை. சீலியா அருகிலிருக்கிறாள்.''

''சங்கர்! இதற்கு மேல் நான் உன்னைப் பேச அனுமதிக்கப் போவதில்லை. வேறு விஷயமிருந்தால் பேசு!''

சங்கரன் விஷமக் கண்களோடு வசந்தனை நோக்கினான். அனல் பறக்க அவன் விழிப்பதைக் கண்டதும் பேசாமல் வந்த கையோடு விடைபெற்றான்.

**தா**ய்மை மெருகோடும், புதுக் களிப்போடும் திகழும் குழலியைப் பார்த்து மீனாட்சிசுந்தரமும், சரஸ்வதியும் பூரித்துப் போனார்கள். செல்வத்தில் பிறந்த தம் ஒரே மகளை வசந்தனுக்குத் தந்து மகிழ்ந்த கருணையுள்ளங்கள் பூரண மகிழ்வில் அவளைப் போற்றின. குழலி தனி உலகில் இருந்தாள். தனக்குள் பூத்துச் சிலிர்க்கும் ஒவ்வொரு உணர்வையும் அவள் தேன் துளிகளாக மாற்றினாள். உடலின் அயர்வும், களைப்புமே உயிருக்குத் தென்பூட்டும் திடமும், வலிமையுமாகத் தெரிந்தன!

''அம்மா, தாகம்!'' என்று குரல் கொடுத்தாள் குழலி. அம்மா என்று அவள் தன் தாயை விளித்த கணமே

அவள் உடலில் ஓர் இன்ப அதிர்வு காணப்பட்டது. மெல்லக் காதோரம் ஒரு சிறு குரல் ''ம்மா, ம்மா'' என்று மிழற்றுவது போலிருந்தது.

''குழலி! எழுந்திரு'' என்று சரஸ்வதி அவளை அசைவிக்கும்போது நிகழ் காலம் புலப்பட்டது. தாலணித் தலைப்பில் மறைந்திருக்கும் இடது கை மாதங்களை எண்ணியது. அந்த வேளையில் வசந்தன் அங்கில்லையானாலும் அருகிருக்கும் சிலிர்ப்பு ஊடாடியது.

'நான் மூன்று கடிதங்கள் போட்டும் அவர் ஒன்றுக்கும் பதில் எழுதவில்லையே... ஒரு வேளை...'

வேண்டாத சந்தேகம் ஒன்று அவளை வலிய ஆட்கொண்டது. உடனே அவள் அதற்கு மீட்புத் தேடினாள். பெற்றோர்கள் வியந்தனர், ஏன் இப்படித் திடுதிப்பென்று கிளம்புகிறாள் குழலி என்று!

''அப்பா! மூன்று கடிதங்கள் எழுதினேன், பதில் இல்லை. அவர் இப்படி இருக்கக் கூடியவரல்ல. உடம்பு சரியில்லையோ, என்னவோ? உடனே புறப்பட்டாக வேண்டும்!'' என்று தீர்மானமாகக் கூறிவிட்டாள் குழலி.

''சரியம்மா!''

வாழ்வுப் பிணைப்பில் மகளின் அக்கறையான கடமைகளை எண்ணி மீனாட்சிசுந்தரம் மகிழ்ந்து போனார். உடனே பிரயாணத்துக்கான ஏற்பாடுகளைச் செய்யலானார். பெண்களுக்கு உரிய வழக்கம் போல் சரஸ்வதி அம்மாளும் பட்சணங்கள் செய்யலானாள். **(தொடரும்)**

---

## யாயயாயயாயா யாயயாயயாயா

**பா பாதபா பாதபாபா பாதபாத தபாதபா**
**தபாதபா பாதபாத பாதபாத தபாதப**

இதென்ன புரியவில்லையா?

திருமாலின் திருவடிகளைத் தாங்கும் பாதுகைகள் பற்றியே 'பாதுகா ஸஹஸ்ரம்' என ஆயிரம் சுலோகங்கள் அடங்கிய நூலொன்றைச் செய்துள்ளார் ஸ்ரீ வேதாந்த தேசிகன். அதில் ஒரு சுலோகத்தில்தான் மேற்காணும் ப, த என்ற இரண்டு மெய்யெழுத்துக்களும் அ, ஆ என்ற உயிர் எழுத்துக்களும் மட்டுமே உள்ளன. தவிர யமகங்களும் சேர்ந்திருக்கின்றன.

இதன் பொருள்: அபாபா — பாவமற்ற தாய், அ — பகவானுடைய, பாத — திருவடிக்கு, பாதத — காந்தியைக் கொடுக்கின்ற தாய், பாதபா — காந்தியை வைத்துக் கொண்டிருக்கின்றதாய், தத—(பாதுகையை) ஸமர்ப்பிக்கின்றவர் விஷயத்தில், பாத் - ரக்ஷையைச் செய்கின்ற, அபா — அபிஷேக ஜலத்தை உடைய தாய், த—ரக்ஷையை, பாத— உண்டாக்குகிறதும், பாத பாத —பாவங்களை தொலையும்படி செய்கின்றதுமான, பாத — திருவடியையுடைய பகவானுடைய, பாதபா — பாதுகை, பாபாத் — பாவத்தினின்றும் அபாபாத் — காத்தது.

இன்னும் விசித்திரமான ஒரு சுலோகம். அது 'யா' என்ற ஒரே மெய்யெழுத்தால் ஆகியது.

**யாயயாயயாயாய யாயயாயயாயா**
**யாயயாயயாயா யாயயாயயாயா**
**யாயயாயயாயா யாயயாயயாயா**
**யாயயாயயாயா யாயயாயயாயா**

யாயா யா - (அந்தப்) பாதுகை, ஆய - பகவானுக்காக (உள்ளது), யா-எந்தப் பாதுகை, ஆயாய - வரி வசூலிப்பதற்காக (முன்) பரதனுக்கு அளிக்கப்பட்டு அயோத்யா ஸிம்மாஸனத்தில் இருந்ததோ, யா - எது, அயாய - (அண்டியோரின்) சுபத்துக்காக உள்ளதோ, யா-எது, அயாய-ஞானத்திற்காக உள்ளதோ, யா-எது, அயாய-(நல்ல விஷயங்களில்) விருப்பம் உண்டாவதற்காக இருக்கின்றதோ, யா-எது, அயாய - சத்ருக்களை ஒழிப்பதற்காக, அயாயா - பகவானை அடைந்திருக்கிறதோ, யா - எது, யாயாய - ஸஞ்சாரத்துக்காக (பகவானை அடைந்திருக்கிறதோ), யா - எது, ஆயாயாய - (பகவான்) நம்மிடம் வருவதற்காக இருக்கின்றதோ, யா-எது, ஆய-முக்தர் பெறும் ஸர்வலோக ஸஞ்சாரத்தின், ஆயா - பிராப்தியோ.



இன்னொரு சுலோகம் தேவநாகரியில் எழுதி ஆரம்பத்திலிருந்து திருப்பிப் படித்தால் வேறு சுலோகமாகும். (தமிழில் கூட்டெழுத்துக்கள் இல்லாததால் இவ்வாறு இராது.)

வடமொழியில்,

**ஸாரஸஸௌக்ய ஸமேதா**
**க்யாதா பாதபா**
**புவிஸ்வாகா**
**ஸாஹஸகார்யவநாசா நீரா**
**வஸாதா**
**நவந்யாஸா**

என்கிற சுலோகமே திருப்பிப் படித்தால்,

**ஸாந்யாவநதாஸாவராநீசா**
**நாவர்யகா**
**ஸஹஸா**
**கா ஸ்வா விபு பாதபதா**
**க்யாதா**
**மேஸக்யஸௌஸ ஸாரஸா**

என்ற இன்னொரு சுலோகமாகும்.

—எம். கே. ரங்கஸ்வாமி அய்யங்கார்

A-8-68

பாப்ளின்கள்
ஷர்ட்டிங்குகள்: ஸ்ட்ரைப், டாப்பி,
செக், பைஜாமா, வேஷ்டிகள்:
ப்ளாடினம், ராஜா ஸ்பெஷல்
மெர்ஸிரைஸ்ட் லான்: 5531
சூட்டிங்குகள்: காபர்டீன்
ப்ரின்டுகள், ப்ரின்டெட் லான்கள், வாயில்கள்,
பாப்ளின்கள்:
நெசவு செய்த கலர் புட்டாக்கள்.
லெனோ மற்றும் புட்டாக்களில்
2x2 ஃபேன்ஸி ஃபுல் வாயில்கள்.

TEBILIZED* AND
TEBILIZED DOUBLE TESTED
*REGISTERED USERS.

SANFORIZED

# அரவிந்த் பன்மடங்கு சிறப்பிப்பது அழகை

அரவிந்த் மில்ஸ் லிமிடெட் அகமதாபாத்




ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்: திரு. அஜித்பாய் ஜெயந்திலால் சோமாபாய் படேல் & கோ, 5, கிடங்குத் தெரு, சென்னை. ஏகபோக ஏற்றுமதி ஏஜெண்டுகள்: திரு. லால்பாய் எக்ஸ்போர்ட்ஸ் லிமிடெட், கண்ட்ரக்டர் பில்டிங், நிக்கோல் ரோடு, பல்லார்ட் எஸ்டேட், பம்பாய்—1.

# காலைப் புத்துணர்ச்சியை மாலை வரை நீடிக்கச் செய்யுங்கள்!

காலையில் குளித்தபின் பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க்கை உடலில் தூவிக் கொண்டால் புத்துணர்ச்சி மணிக்கணக்கில் நீடித்திருக்கும். வியர்வையை விரைவில் உறிஞ்சும் தன்மையுடைய பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க் கடுங்கோடையில் கூட உங்களை இதமான உணர்ச்சியுடனும் உல்லாசத்துடனும் இருக்கச்செய்யும். உங்கள் உடலைத்தழுவி நிற்கும் ட்ரீம்ஃப்ளவர் நறுமணம் உங்களைச் சூழ்ந்துள்ளவர்களை மகிழ வைக்கும். எல்லா காலநிலைகளுக்கும் ஏற்றதாகையால் வருடம் பூராவும் தினமும் உபயோகிக்கச் சிறந்தது பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க்!




## பாண்ட்ஸ்

**ட்ரீம்ஃப்ளவர் டால்க்—**
**மென்மை மிக்க மகோன்னத டால்க்!**

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடெட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன்
யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பட்டது)

# ஒட்டும் இரண்டு உள்ளங்கள்

மரீனா கடற்கரையிலோ, மௌண்ட்ரோடு திரைப்படக் கொட்டகை வாயிலிலோ கரம் கோத்து இணை பிரியாது நடக்கும் புதுமணத் தம்பதியைப் பார்த்து எத்தனையோ இளைஞர்கள் தங்களுக்கும் இப்படி ஒரு காலம் வருமா என்று மானசீகப் பெருமூச்சு விடுவதுபோல, அந்தத் தம்பதியரிலும் பலர், 'ஆஹா ! சுதந்திரமாக இந்தக் கல்யாணப் புயலில் சிக்கிக் கொள்ளாமலே இருந்திருக்கலாம்' என்று உள்ளூற ஏங்குவதும் உண்டு. வாழ்க்கையை அவர்கள் பார்க்கும் கோணங்கள் வேறு வேறு ! முன்னவர்கள் பார்வையில் பிரச்னைகளே இல்லை என்ற பிரமை! பின்னவர்கள் பார்வையில் தங்கள் பிரச்னைகள் தீரவே வழி இல்லையோ என்ற ஏக்கம்!

புது மணத் தம்பதியருக்குத் தோன்றும் பிரச்னைகள் சிக்கல் நிறைந்தவை! அவைகளைப் போக்கிக் கொள்ளக் கணவன் மனைவி ஆகிய இரு சாராருக்குமே திறந்த மனப்பான்மையும் சகிப்புத் தன்மையும் விட்டுக் கொடுக்கும் சுபாவமும் தேவை.

பெரியவர்களால் நிச்சயிக்கப்பட்டு நடந்த திருமணம்தான். பெண் கிராமமும் இல்லாமல் நகரமும் இல்லாமல் நடுவாந்தரமான ஓர் ஊரில் வளர்ந்து படித்தவள். விசாலமான வீடு, காம்பௌண்டு, தோட்டம் எல்லாம் உண்டு. புழங்குவதற்கு விஸ்தாரமான இடம். நிம்மதியான சூழ்நிலை.

பையன் குடும்பம் இரண்டு தலைமுறையாகவே பட்டணத்து நடுத்தர வகுப்பு நெருக்கடிக் குடித்தன முறைக்குப் பழகிப் போயிருந்தது. ராயப்பேட்டையில் நான்கு குடித்தனங்களோடு, ஐந்தாவது குடித்தனமாக வெகுநாட்களாக இருக்கும் குடும்பம். பையன் க்யூவில் நின்று ஸ்நானம் செய்யும் அனுபவசாலி. பத்தடிக்கு எட்டடி அறைக்குள்ளேயே பரந்த உலகத்தைக் கண்டு பழகியவன்.

கல்யாணத்தைத் தொடர்ந்து பெண் புக்ககம் வந்து சேர்ந்தாள். அவளுக்கு ஏதோ கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டது போன்ற உணர்ச்சி. சைனாபஜாரில் நடப்பதும், பொதுக் குழாயடிக்குப் போய் வருவதும், அவளுக்கு ஒன்றாகவே இருந்தன. செவிகளில் இருபத்து நான்கு மணி நேரமும் பேச்சுக் குரல்கள் ஒலித்துக் கொண்டிருந்தன. எப்போதும் தன்னை யாரோ பார்த்துக் கொண்டிருப்பது போலவே ஓர் உறுத்தல். இந்த மனச் சலனத்தை ஒரு மாத காலம் தன்னுள் அடக்கி வைத்துப் பார்த்தாள். உடம்பு இளைத்து முகத்தில் வேதனைக்குறி படர்ந்ததுதான் மிச்சம். கடைசியில் ஒரு நாள் தன் கணவனிடம் மனத்தைத் திறந்து கேட்டு விட்டாள், ''நாம் சற்று நிம்மதியான பெரிய இடத்தைத் தேர்ந்தெடுத்துக் குடிபோகக் கூடாதா?'' என்று!

'நாம்' என்ற பதத்தில் அவள் தன் மாமனார், மாமியார் எல்லோரையும் உள்ளடக்கித்தான் பேசினாள். தான் வந்து சேர்ந்த பிறகு அவர்களுக்கு இடத்தைப் பொறுத்தவரையில் நெருக்கடி ஏற்பட்டு விட்டது என்று அவளுக்குத் தெரியும்.



குடும்பப் பிரச்னை





கணவன் உலக அனுபவம் பெற்றவன். ஆகையால் அனுதாபமும் அனுபவமும் அவனிடம் நிறைய இருந்தன. ''நீ சொல்றது ரொம்ப கரெக்ட்! கூட ஐம்பதோ நூறோ வாடகை கொடுத்தால், ஹாயாக, ஆள்வார்ப் பேட்டைப் பக்கமோ, ஷெனாய் நகரமோ போயிடலாம். இந்தச் சங்கடமே இல்லே. ஆனால் அப்பா வேலை பார்க்கிற காரியாலயம் இந்தப் பகுதியிலே இருக்கிறது. அவர் இரண்டு வருஷமாகக் கூடிய வரையில் பஸ் பிரயாணத்தைத் தவிர்த்துக் கொண்டு வருகிறார். நடந்து போய்வரச் சௌகரியம். அம்மாவுக்கு இந்தப் பேட்டையிலுள்ள பெருமாள் கோவிலில் அலாதி ஈடுபாடு! நான் இந்தப் பேட்டையில் தான் பிறந்தேனாம். தனக்குப் பேரனும் இங்கேயே பிறக்கணும்னு அவள் ஆசைப்படறதிலே தப்பு இல்லே பாரு! பெரிய வீடாகப் பார்த்துவிட்டு அவர்களைக் கூப்பிட்டால், அவர்கள் நமக்கு 'டாட்டா' காண்பித்து விட்டு இங்கேயே இருப்பார்கள்! அப்புறம் நமக்குப் பொல்லாப்பு. இன்னும் நாலு வருஷத்திலே அப்பா ரிடையர் ஆனவுடனே அம்பத்தூரிலே வீடு கட்டிண்டு போகணும்னு ஆசைப்படறார். அதுவரை இங்கேயே இருந்து விட்டால் அப்புறம் நிம்மதியாக இருக்கும்.....! உன் அபிப்பிராயம் என்ன?'' என்றான் வெகு இதமாக, இங்கிதமாக.

அவள் மனத்தை அவன் புரிந்து கொண்டான் என்பதில் அவளுக்குப் பரம திருப்தி. அதே போல அவன் பதிலும் அவளுக்குத் திருப்தி அளித்தது. இத்தனை அன்பானவர்கள் எண்ணங்களுக்கு எதிராகத் தன் நினைவுகளை வற்புறுத்தக்கூடாது என்று முடிவுக்கு வந்தாள். 'நீங்க சொல்றதும் ரொம்ப கரெக்ட்' என்று முத்தாய்ப்பு வைத்தாள். அப்புறம் அவள் இதுவரையில் பட்ட மன உளைச்சலுக்கு இடம் கொடுக்கவில்லை.

அந்தக் கணவன் மாத்திரம் முன்கோபியாகவும், பிறர் வேதனையைப் புரிந்து கொள்ள முடியாதவனாகவும் இருந்தால் என்ன சொல்லியிருப்பான்? ''ஓஹோ! துரைசாணி அம்மாவுக்குப் பங்களாவாசம் கேட்குதோ?.... பெரிய மகாராஜா பெண்ணுன்னு எண்ணம்! இருநூறும் முந்நூறும் வாடகையைக் கொட்டிக் கொடுத்துட்டுச் சோத்துக்கு லாட்டரி அடிக்கணும். அப்படித்தானே?'' என்று சீறி விழுந்து அந்தப் பெண்ணின் மன விரிசலை இன்னும் பெரிதாக்கியிருப்பான்.

இன்னொர் உதாரணம். தமிழகத்தின் தென்கோடியிலிருந்து பட்டணத்துக்குக் கணவன் வீட்டுக்கு வந்து சேர்ந்த புது மணப் பெண். அவள் ஊரில் திரைப்படக் கொட்டகை உண்டு. சிறிய ஊராகையால் ஒவ்வொரு படமும் ஐந்தாறு நாட்கள் ஓடி விட்டுப் போகும். அந்தப் பெண் ஒவ்வொரு படத்தையும் தவறாமல் பார்த்து விடுவாள்.

சென்னைக்குத் தனிக் குடித்தனம் வந்தவுடன், அந்தப் பெண் எங்கு பார்த்தாலும் கண் கவர ஒட்டப்பட்டிருக்கும் திரைப்பட விளம்பரச் சுவரொட்டிகளைப் பார்த்துப் பரம ஆனந்தப்பட்டாள். தினசரி ஒரு புதுப் படம் பார்க்க வேண்டும் என்று திட்டம்போட்டு அதை நடைமுறையில் கொண்டு வர முயன்றாள்.

புருஷன்காரன் தத்துவம் தெரிந்தவன். முதல் மூன்று நாட்கள் மூன்று படங்களுக்கு அவள் இஷ்டம் போல அழைத்துக் கொண்டு போய் வந்தான். நான்காம் நாள், வேடிக்கையாகப் பேச ஆரம்பித்து மூன்று நாட்கள் சினிமாவுக்குப் போய்விட்டு வந்த செலவு கணக்கை அவளைக் கொண்டே எழுதச் சொன்னான். பஸ், டாக்ஸி, பூ, டிபன், இடைவேளை டிரிங்ஸ், சினிமாக் கட்டணம் எல்லாமாகச் சேர்ந்து இருபத்தி ஆறு ரூபாய் என்பது காசுகள் கணக்கு வந்தது. ''நீலா! உங்க ஊரிலே ஒரு படம் பார்க்கக் கட்டணம் எட்டணா. வாரத்துக்கு ஒரு படம் வீதம் பார்த்தாலும் வருடத்துக்கு இருபத்தி ஆறு ரூபாய்கள் ஆகும். போக வரச் செலவில்லை. நடந்து போய் வரலாம். அதிகபட்சம் ஐந்தாறு பைசாவுக்கு வேர்க்கடலை வாங்கிக் கொள்வாய்! இதிலேயிருந்து என்ன தெரிகிறது என்றால், நீ இங்கே மூன்று நாள் சினிமாப் பார்ப்பதும் சரி. உங்கள் ஊரில் ஒரு வருடம் சினிமாப் பார்ப்பதும் சரி..... ஒரு வருஷ காலத்தை மூணே நாளில் இங்கே ஓட்டி விட்டோம் பாரு!'' என்றான் சிரித்துக் கொண்டே;

அவளும் பெண்தானே! பொருளாதார தத்துவத்தைப் புரிந்து கொள்ள முடியாதவளா என்ன?

இப்போது அந்தத் தம்பதி மாதத்துக்கு ஒரு படம் பார்க்கிறார்கள். திருப்தியுடன் பார்க்கிறார்கள். பரஸ்பரம் புரிந்து கொண்டு விட்டார்கள். 'கஞ்சக் கணவன்' என்று அவள் மனம் வெதும்பவில்லை. 'சினிமாப் பைத்தியம்' என்று அவன் வெருண்டு எழவில்லை.

உத்தியோகம் பார்க்கும் புதுமணத் தம்பதி தங்கள் பிரச்னையைத் தீர்த்துக் கொண்ட விதமும் எனக்குத் தெரியும்.

இருவரும் பட்டணவாசிகள்தாம். பையனுக்கு அம்பத்தூர் தொழிற்சாலை ஒன்றில் உத்தியோகம். அந்தத் தொழிற்சாலைக்கு ஞாயிறு வேலை நாள். திங்கட்கிழமை வாராந்திர விடுமுறை. வேலை நேரம் காலை ஏழு மணியிலிருந்து மாலை மூன்று மணி வரை.

அந்தப் பெண்ணுக்கு அஞ்சல் இலாகாவில் தபால் பிரிக்கும் பகுதியில் வேலை. வேலை நேரம் பிற்பகல் ஒரு மணியிலிருந்து இரவு ஒன்பது வரை. ஞாயிற்றுக்கிழமை விடுமுறை நாள்.

கல்யாணத்துக்கான விடுமுறை நாட்கள் கழிந்து அவரவர்கள் வேலைக்குப் போக ஆரம்பித்த போதுதான் பிரிவு உணர்ச்சியை உணர ஆரம்பித்தார்கள். காலை ஆறரை மணிக்குப் பிறகு இரவு ஒன்பதரை மணிக்குத்தான் அவர்களால் சந்திக்க முடிந்தது. ஞாயிற்றுக்கிழமைகளில் அவள் கொட்டக் கொட்ட உட்கார்ந்திருந்தாள். திங்கட்கிழமைகளில் அவன் வீட்டைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தான். இந்தச் சந்திக்க நேரமில்லாப் பிரச்னைக்கு முடிவு காணக் கணவன் விரும்பினான்.

''இன்னமும் நீ வேலைக்குப் போகத்தான் வேண்டுமென்று நினைக்கிறாயா? என் சம்பாத்தியம் ஓரளவு திருப்திகரமாக வாழ்க்கை நடத்தப் போதாதோ?'' என்று பதிலை அவள் பொறுப்பில் விடும் நோக்கத்துடன் பேச்சை ஆரம்பித்தான்.

அவளும் கெட்டிக்காரி. ''நான் அப்படி நினைக்கவில்லையே! கொஞ்ச நாளைக்குப் பொழுது போக்குக்காகத்தான் வேலையில் சேர்ந்தேன். ஆனால், இதையே இப்போது நமக்கு ஓரளவு சாதகமாக மாற்றிக்கொள்ளலாம்'' என்று குழைந்து ஆரம்பித்து ''எப்படீன்னு, இன்னும் கரெக்டா ஐந்தே வருடங்கள் நான் வேலை பார்க்க வேண்டியது. சம்பளத்தில் இருநூறு ரூபாயை அப்படியே மாதா மாதம் சேமிப்பில் போட்டுக் கொண்டே வரவேண்டும். ஐந்து வருடங்களில் கிட்டத்தட்டப் பன்னிரண்டாயிரத்துச் சொச்சம் சேரும். அதைக் கொண்டு அப்படியே ஒரு வீடு வாங்கிக் கொள்ளலாம். இனியும் நான் வேலை பார்க்க வேண்டுமென்றால் அந்த நோக்கத்துக்காகத்தான். உங்களுக்குச் சம்மதமில்லையென்றால் நாளைக்கே ராஜிநாமாப் பண்ணி விடுகிறேன்'' என்றாள்.

கணவனுக்கு இந்த யோசனை பிடித்திருந்தது; கேள்வியை வாபஸ் வாங்கிக்கொண்

# தீபாவளிக்கு விசேஷ தள்ளுபடி



எல்லா

## கோ-ஆப்டெக்ஸ்

கைத்தறித்துணி விற்பனையில்

**24.9.68 முதல் 21.10.68 வரை**

இந்த தள்ளுபடி எல்லா "கோ-ஆப்டெக்ஸ்" பிரதம நெசவாளர்
விற்பனை நிலையங்களிலும்,
கூட்டுறவு சங்கங்களிலும் கிடைக்கும்.

**தமிழ்நாடு கைத்தறி நெசவாளர்
கூட்டுறவு சங்கம் லிமிடெட்,**

பாலசுந்தரம் பில்டிங்,
எழும்பூர், சென்னை-8.

ELEGANT

# இப்போது! அதிக லாபமடைய கால்கேட் டென்டல் க்ரீம்

# ஸூப்பர் ஸைஸ்

COLGATE DENTAL CREAM SUPER SIZE



## கால்கேட் மூலம், வாய் - நாற்றத்தைத் தடுத்து நாள்முழுதும் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்!

ஏனெனில்,
ஒரே தேய்ப்பில் கால்கேட் டென்டல் க்ரீம் வாய் நாற்றத்தையும், பற்சிதைவை-விளைவிக்கும் கிருமிகளையும் 80 சத விகிதம் வரை அகற்றுகிறது.

கால்கேட் 10க்கு 7 பேர்களில் வாய் நாற்றத்தை உடனடியாக அகற்றுகிறதென்றும், உணவு உட்கொண்ட உடனேயே கால்கேட் முறையில் பற்களைத் துலக்குவதால் இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பேரளவில் ஏராளமானவர்களுக்கு பற்சிதைவு தடுக்கப்படுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன!

அதன் வித்தியாசமிக்க பெப்பர்மின்ட் சுவையே தனி. கால்கேட் டென்டல் க்ரீம் கொண்டு குழந்தைகள் தவறாது பல் துலக்க விரும்புவதிலும் வியப்பென்ன!

தூய்மையான இன் மூச்சோடு வெண்மையான பற்களும் பெறவே...மற்றெந்தப் பற்பசையையும் விட உலகிலே அதிக மக்கள் கால்கேட் பற்பசையையே வாங்குகிறார்கள்.




நீங்கள் பற்பொடியை விரும்பினால், இப்பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பா பல மாதங்களுக்கு வரும்.

DC.G 38 TM



## ஒரு பொய் (நாடகம்)

பப்ளிக் பிராசிக்யூடராக இருக்கும்பொழுது வக்கீல் சத்தியநாதன் என்பவர், தாம் அறிந்த நிகழ்ச்சியைக் கொண்டு ஒரு டிரைவருக்குப் பதினான்கு ஆண்டுகள் கடுந் தண்டனை வாங்கிக் கொடுத்துவிடுகிறார். உண்மையை அறிந்த பொழுது தமது மனச்சாட்சியின் உந்தல் காரணமாக அவ்வேலையை ராஜினாமாச் செய்து பிராயச்சித்தம் தேடிக் கொள்கிறார். உண்மை தவிர வேறு அறியாத வக்கீல் என்ற நல்ல பெயரும் பெறுகிறார்.

அப்படிப்பட்ட ஒரு நல்லவரைக் கடைசியில் 'ஒரு பொய்'யாவது சொல்ல வைத்து நாடகம் தனது மகுடத்தை நிலை நாட்டிக் கொள்ள முயலுகிறது. 'பொய்மையும் வாய்மையிடத்த புரைதீர்ந்த நன்மை பயக்கும் எனின்' என்னும் குறள் கருத்து கைகொடுத்து உதவுகிற நம்பிக்கையில்தான்.

கதைப் போக்கின்படி முடிவில் ஒரு பொய்க்குக்கூட இடம் கொடுக்காமல் முடிந்திருந்தாலும் நாடகத்தின் மகுடம் நிலைத்திருக்க இடம் உண்டு.

தனக்கு இழைத்த தீங்குக்காகப் பழி வாங்கும் வேகத்துடன் வரும் ஒருவன், மாதக் கணக்கில் பொறுமையைக் கடைப் பிடிப்பது கதைக்கு ஓர் ஒட்டைதான். என்றாலும், பொத்தல் வாளியைப் பூந்தொட்டியாக்கி நறுமண மலர்ச் செடியை நடுவது போன்ற காரியத்தைச் செய்திருக்கிறார்கள். அதற்குச் சிறந்த நடிப்பு உரமேற்றுகிறது.

இல்லாவிட்டால், வக்கீல் சத்தியநாதனாக வரும் திரு எஸ். ஆர். வீரராகவனின் அமெரிக்கையான அற்புத நடிப்பு பரிமளிக்க முடியுமா? வேதநாயகமாக வேஷப் பொருத்தத்தோடு திரு சுந்தரராஜன் அவருக்கு ஈடு கொடுத்து நடித்திருக்க முடியுமா? வக்கீல் குமாஸ்தாவாக வரும் திரு வி. ராஜகோபால், கல்யாணத் தரகராக வரும் ஐ. எஸ். ஆருடன் மோதி நகைச் சுவையை உதிர்த்திருக்க முடியுமா?

ஆனால் அளவுக்கு மிஞ்சிய அமுதமாக ஒருசில வாக்கியங்கள் மீண்டும் மீண்டும் நகைச் சுவைக்காக வந்து, கேலிச் சுவையாகி 'அமெச்சூர்' தன்மையை அதிகமாக்கிக் காட்டுகின்றன.

தாயும் மகளுமாக வசந்தாவும், வி.ஜே. புவனாதேவியும் பாத்திரத்துக்கேற்ப நடித்து நடிப்புக்கு மெருகு கூட்டுகிறார்கள்.

'என்னெஸ்ஸென் தியேட்டர்' அளிக்கும் இந்த நாடகம், சில பல திருத்தங்களுடன் மேடை ஏறி ல் மேலும் சிறக்கும்.

---

டான். அவர்கள் வேறு ஓர் ஏற்பாடும் செய்து கொண்டார்கள். மாதத்தில் ஒரு ஞாயிற்றுக் கிழமை அவன் காரியாலயத்துக்கு லீவு போடுவான். அன்று முழுதும் அவ்விருவரும் மகாபலிபுரமோ, வேடந்தாங்கல் ஏரியோ போய் வருவார்கள். அதே போல் அவன் மாதம் ஒரு திங்கட் கிழமை லீவு போடுவான். அன்றும் அப்படியே பிரயாணம் மேற்கொள்வார்கள். மாதம் இரண்டு நாள் இப்படி நடந்தது. அந்தத் தம்பதி இருவரும் சந்தோஷமாக இருக்கிறார்கள்.

உத்தியோகம் பார்த்து வந்த ராஜேசுவரியைத் திருமணம் ஆனவுடன் உத்தியோகம் பார்க்க வேண்டாம் என்று அவள் கணவன் வீட்டார் சொல்லி விட்டார்கள். அதில் அவளுக்கு ஆட்சேபணை ஒன்றும் இல்லை. ஆனால் கலகலவென்று பத்துப் பேர்களுடன் பழகிச் சுதந்திரமாக இருந்துவிட்டு இப்போது முதியவர்கள் நிறைந்த அந்தக் குடும்பத்தில் சில வரையறைகளுக்கு அடங்கி நடப்பது அவளுக்கு என்னவோ போலிருந்தது.

தன் நிலையைக் குறித் தாபப்பட்டவளுக்கு, ''இது ஒன்றும் புதிசில்லே அம்மா! ஆபீஸிலே ஹெட் கிளார்க்கோ, சூப்பிரண்டெண்டோ கடிந்து கொண்டால், நாம் உணர்ச்சி வசப்படுவதில்லையா? கொஞ்ச நாளைக்கு உன் மாமியார் வீட்டையும் ஆபீஸ் மாதிரியே நினைத்து பயபக்தியுடன் நடந்து கொள். அவர்களுக்கு உன்மேல் திருப்தி ஏற்பட்டு விட்டதோ, உனக்கு அப்புறம் எல்லாமே டபுள் பிரமோஷன்தான்!'' என்றேன்.

இந்த சம்பாஷணை நாலைந்து மாதங்களுக்கு முன் நடந்தது. சென்ற வாரம் ராஜேசுவரியை ஒரு நாள் அவள் கணவனுடனேயே சேர்ந்து பார்த்தேன். ''சார்! நீங்க இவளுக்குப் பண்ணின அட்வைஸுக்கு ரொம்ப தாங்ஸ்! இப்போ எங்க அம்மா, ராஜேசுவரியைப் போல மாட்டுப் பெண் உண்டா என்று ஊர் முழுதும் தமுக்குப் போடுகிறாள்'' என்றான் அவன் பெருமிதத்துடன்.

தீர்க்க முடியாத பிரச்னைகளே வாழ்க்கையில் இல்லை. விவேகத்துடன் அணுகுவதில் இருக்கிறது நல்ல முடிவு.

— மோனா

# தலைவலியா?

## போக்க ஒரே ஒரு ஸாரிடான் போதும்

'ரோஷ்'



## அது உங்களை புத்துணர்ச்சியுடன் திகழச் செய்யும்!

**அதுவே ஸாரிடானின் தனிச் சிறப்பு**

வலிக்கு நீங்கள் சாப்பிட வேண்டியது ஸாரிடான் தான். வலிகளைப்பலவகை யில் போக்க ஸாரிடானுக்கு ஈடான இதர வழிகள் இருக்கலாம். ஆனால் வலியுடன் கூடவே நரம்புகளில் அநுபவமாகும் அழுத்தத்தையும் போக்கி தெம்பும் உற்சாகமும் ஊட்டுவதற்காக பிரத்தியேக முறைப் படி தயார் செய்யப்படுவது ஸாரிடான் ஒன்று மட்டுமே. ஆகவேதான் ஒரே ஒரு ஸாரிடான் சாப்பிட்டதும் வலி நீங்கி உங்கள் மூளை சுறுசுறுப் பாக வேலைசெய்ய ஆரம்பிக்கிறது, வேலையில் உற்சாகம் ஏற்படுகிறது. சிடு மூஞ்சி போய் சிரித்த முகத்துடன் திகழ முடிகிறது. ஸாரிடான் அளிக்கும் நிவாரணம் நிலையானது. எப்பொழுதும் ஸாரிடான் உங்கள் கைவசம் தயாராய் வைத்திருங்கள்!

## ஸாரிடான் சாப்பிடுங்கள்



பல்வலி, உடல்வலி, அசௌகரியமான நாட்களில் வலி, இவற்றிற்கும் ஸாரிடான் கைமேல் பலன் தருகிறது. குழந்தைகளுக்கு ½ இருந்து ½ வில்லை வரை மட்டுமே போதும்.

'ரோஷ்' தயாரிப்பு

ஸோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள் : வால்டாஸ் லிமிடெட்

VT 7648

# பொன்னிவனத்துப் பூங்குயில்

கொத்தமங்கலம் சுப்பு

### அத்தியாயம் 42

## கோயில் வளரக் குலம் வளரும்

ஆதி பராசக்தியும் ஆடவல்லவளா என்று ஆச்சரியத்துடன் சிங்கனைக் கேட்டாள் குயிலி.

''ஆம், சக்தி ஆடும். முருகன் ஆடுவான். விநாயகர் ஆடுவார். மன்மதன் ஆடுவான். ரதி ஆடுவாள். அண்ட சராசரங்களும் ஆடும். சூரியன் முதலிய கோள்களும் ஆடும். நிலம் ஆடும். நீர் ஆடும், மரம் ஆடும். மான் ஆடும். நிழல் ஆடும். நீயும் நானும்கூட ஆடுவோம். ஆட்டந்தான் உலகத்தின் உயிர். உள்ளும் மேலும் ஓடும் மூச்சு ஓர் ஆட்டம். எடுத்த காலும் வைத்த காலும் ஆட்டம். அதனால்தான் தமிழ் மக்கள் கூத்தபிரானுக்குக் கோயில் எடுத்து அதற்குப் பொன்னோடு வேய்ந்து கோயில் என்றாலே சிதம்பரம் என்று சொல்லி, சத்தியம், சிவம், சுந்தரம் என்று அழகிலும் கலையிலும் அவனை வணங்கினார்கள்'' என்று படபடவென்று பேசி முடித்தான் சிங்கன். ஆனால் குயிலியோ சிலை போல் நின்றாள். மேலும் பேச மாட்டானா என்று எதிர்பார்ப்பது போல் நின்றாள். ஏன் குயிலியின் கூட்டத்தினர் எல்லாருமே அவன் பேச்சில் மயங்கித்தான் நின்றனர்.

''சிங்கா, கொஞ்ச நேரத்துக்கு முன்னாலே நீ என்னிடத்தில், 'நீ ஆடினால் நான் தலைக்கோல் தட்டுவேன்'னு சொன்னியில்ல!'' என்று ஆவலோடு கேட்டாள். சிங்கன் ஆவலோடு அவளைப் பார்த்தான். அந்தப் பார்வையில் 'ஆம், சொன்னேன்' என்ற பாவம் ஒளித்தது. குயிலி அவனைப் பார்த்துவிட்டு எதையோ கேட்கத் தயங்கித் தலை குனிந்தாள்.

'எனக்குக் கற்றுக் கொடுக்கிறாயா?' என்று அந்தப் பார்வை கேட்டது.... 'ஆகட்டும்' என்று அவன் தலையாட்டினான்.

இருவரும் பேசவில்லை. அங்கே மொழி உதவிக்கு வரவில்லை. ஆனால் விழிகளும் முக பாவமுமே பேசிக் கொண்டன.

''சபாஷ்! இதுதான் பரதநாட்டியம். பேச்சே தேவலை போல் இருக்குதே! எங்களுக்குக்கூடப் புரிஞ்சு போச்சே!'' என்றான் சின்னத்தம்பி.

''ஆமாம், ஆமாம்!'' என்று எல்லாப் பையன்களும் குதூகல ஆரவாரம் செய்தார்கள்.

''குயிலி! பாவம், ராகம், தாளம் ஆகிய மூன்றின் முதலெழுத்தும், கடையெழுத்தும் கலந்துதான் பரதம். அது மொழியா மொழி. மொழிகள் பிறப்பதற்கு முன்பே பிறந்தது. அதற்கு அபிநயக் கைகளே அரிச்சுவடி. விழியும் பார்வையும், விடுகின்ற மூச்சும், மோகன முறுவலும், முக பாவமும்தாம் பாட்டுகள். உயிர் எழுத்து, மெய்யெழுத்து, உயிர்மெய்யெழுத்து ஆகிய மூன்றும் நம் உடலாகிய மெய்யிலிருந்துதான் தோன்றின. இதனால்தான் கூத்தாடும் தெய்வத்துக்குக் கோயில் எடுத்து வணங்குகிறோம். நமது பெரிய கோயிலும் கூத்தபிரான் கோயில். நமது பெரும் தமிழ் நூலோ நாம் வாழ்த்தி வணங்கும் அவனது மலர்ச் சிலம்படியிலுள்ள சிலம்பு. நாட்டியத்தைப் பற்றிச் சொல்லும் பெருங்காவியம் சிலப்பதிகாரம்.''

''சிங்கா, இதையெல்லாம் நீ எங்கு கற்றாய்?'' என்று கேட்டாள் குயிலி.

''அதையேன் கேட்கிறே? நானும் உன்னைப் போலத்தான் அரண்மனை பிடிக்காம ஓடி வந்தவன். நம்ப தஞ்சாவூர் மகாராசா இருக்கிறாரே, துக்கோஜி மகாராசா. அவரு ஆடல் பாடல்களிலே கைகண்டவரு. சங்கீத சாரம்னு அவங்க ஓர் இலக்கியமே எழுதியிருக்காரு. நான் அங்கேகொஞ்ச நாளைக்குச் சமையல் கட்டுலே எச்சி இலை எடுத்துக்கிட்டு இருந்தேன். அவுங்க சாப்பிடுகிற போது சதுரு, நாட்டியம்

இதைப் பற்றிப் பேசிக்கிட்டே சாப்பிடுவாங்க. அந்த எச்சிலில்தான் எனக்கு இந்தக் கலை கிடைத்தது'' என்று கீர்த்திசிங்கன் நாத் தழுதழுக்கத் தம் தந்தையின் கீர்த்தியைச் சொன்னான்.

''சே, அந்த எச்சில் பருக்கையை விட உனக்கு இந்தப் பிச்சைப் பருக்கை பெரிசாப் போயிட்டுதா? அப்படிப்பட்ட ராசாவை விட்டு ஏன் வந்தே? அவர் இந்தக் கோயிலுக்கெல்லாம் வந்திருப்பாரில்லே?''

''வருவார். கலை, சிலை, காவேரி இந்த மூன்றையும் காப்பாத்தறதுதான் அவர் கடமை. அவரு இல்லாட்டி இந்தச் சிலைகளை யெல்லாம் எப்பவோ உடைச்சு எறிஞ்சிருப்பான்.''

இதைக் கேட்ட குயிலி தன் இரு கரங்களையும் தூக்கித் தஞ்சையை நோக்கிக் கும்பிட்டாள்.

''எவன் உடைக்கிறவன்? என் உசிரைக் கொடுத்தாவது தடுப்பேன்'' என்று அவள் வாயிலிருந்து ஒரு வார்த்தை துள்ளி விழுந்தது. திடீரென்று பராசக்தி காளியாக மாறியதைப் போல் குயிலி நின்றாள்.

''சிங்கா, நீ ஏன் அந்த வேலையை விட்டு விட்டு வந்தாய்? மறுபடியும் அங்கே போய் அவங்க காலைக் கழுவிக் கொண்டாவது இரு.''

''அது முடியாதே. எனக்கு அத்தனை கோயிலையும் பார்க்கணும்னு ஆசை. அரண்மனைக்குள் கட்டிப் போட்டாப் போல இருக்க முடியுமா? அதுதான் தப்பிச்சுக்கிட்டு வந்திட்டேன்.''

''அப்படியானால் இன்று சிங்கன் சமைத்தது அரண்மனைச் சமையல்'' என்றான் முந்திரிக் கொட்டை.

''போடா, நீ ஒரு தின்னிப் பய. சிங்கா, நீ எனக்கு எப்போ நாட்டியம் சொல்லித் தருவாய்?''

''அதுதான் உனக்கு வந்துவிட்டதே! இனி நானா சொல்லித் தர வேண்டும்? ஆசைதான் கலைக்கு அடித்தளம். அதுக்கு வகுப்பு நடத்தினால் வராது. வா, சிதம்பரத்துக்குப் போவோம்.''

''ஏன், அங்கே என்ன?''

''அங்கே கீழக் கோபுரத்திலே நாட்டிய சாஸ்திரத்தை நூறு சிலைகளிலே செய்து வைச்சிருக்கிறாங்க.''

''நினைச்சாப் போயிட முடியுமா? அதுவரைக்கும் நான் காத்துக்கிட்டுத் தான் இருக்க முடியுமா?''

''அது வேண்டாம். தஞ்சாவூருக்கு வா. அங்கே பெரிய கோயிலுக்குள்ளே பெருவுடையார் கருவறைக்கு எதிரிலே சிவதாண்டவம் முழுவதும் சிற்பமா செதுக்கியிருக்கிறாங்க.''

''ஏண்டா, சின்னத் தம்பி! நீ பார்த்தியாடா?'' என்றாள் குயிலி.

''அந்தப் பெரிய லிங்கம் கண்ணிலே படுமா? இருட்டிலே இருக்கிற சிற்பம் கண்ணிலே படுமா? இனிமே போனாப் பார்ப்பேன்!'' என்றான் அவன்.

''என்னாலே தஞ்சாவூருக்கும் வர முடியாது. அங்கே மாமன் பிடிச்சுப்பான். இல்லாட்டி மன்னர்களோட ஆட்கள் கொண்டு போய் மங்கள விலாசத்திலே அடைச்சிடுவாங்க. தஞ்சாவூர் போகும் வரை என் ஆசை தாங்காது சிங்கா!''

''அப்படியானா ஒரு நல்ல நாளைப் பார்ப்போம்.''

''நல்லதைச் செய்யற நாளே நல்ல நாள்தான்.''

''சரி, தஞ்சாவூரையும் சிதம்பரத்தையும் உனக்காக இங்கே வரச் சொல்றேன்'' என்று சொல்லிக் கொண்டே சிங்கன் தன்னுடைய மத்தளத்தின்மேல் கட்டியிருந்த உறையை அவிழ்த்தான்.

இதற்குத்தான் குயிலியைக் கோயிலுக்கு அழைத்து வந்தான் சிங்கன். மற்றொருவர் சொல்லி அவளை ஆட வைக்க முடியாது. அந்த அக்கறை அவள் மனத்திலே தானாக ஏற்பட வேண்டும். உத்தரவு போட்டால் ஓர் அரும்பைக் கூட உண்டாக்க முடியாது. ஆசை அரும்ப வேண்டும். நமது கோயில்களில் நுழைந்து விட்டால் யாருக்குத்தான் கலையில் ஆசை வராது? இசையும், ஆடலும் இறைவன் திருமுன் என்றும் இருப்பவை ஆயிற்றே!

உலகில் சில பொருள்கள் மிகவும் அழகாக இருக்கின்றன. அது இயற்கை அழகு. மலர் இயற்கை. அதன் மணம் இயற்கை. அதை யாரும் செயற்கையாகச் செய்துவிட முடியாது. பனைமரத்திலே ஊசலாடும் தூக்கணாங்குருவியின் கூட்டைக் குருவிதான் கட்ட வேண்டும். எந்தக் கொத்தனாரும் அதைக் குருவிக்குச் சொல்லிக் கொடுக்க முடியாது. கறையான் புற்றும் அப்படித்தான். சிலந்தியின் வலையைச் சிலந்திதான் பின்ன வேண்டும். இதைத் திட்டம் போட்டு ஒருவர் பின்ன ஆரம்பித்தால் ஒரு கூடை கோடி வராகன் பெறும். மயிலுக்கு ஆடலும், குயிலுக்குப் பாடலும் அவற்றின் மனத்தில் பிறக்க வேண்டும். குயிலியின் மனத்தில் நாட்டியக் கலையில் ஆவல் பிறந்து விட்டது. மாட்டையே போக்கில் விட்டுத்தான் மடக்க வேண்டும் என்றால் பாட்டை உடனே மடக்க முடியுமா? மனத்தை உடனே மடக்க முடியுமா? வயிறு நிரம்பினால் கலை வரும்

அதற்காகவே சிங்கன் தன் கையால் சமைத்து அவர்களுக்கு வயிறு நிரம்பச் சோறிட்டான். அது தன் சோறு என்ற திருப்தியையும் உண்டாக்கினான். கலைக் கோயிலின் வாசலிலே அன்ன பூரணியின் சிலையை இராச ராசன் அமைத்ததும் இந்தக் கருத்தில்தான். சோழவள நாடு சோறு தரும் நாடு. அதிலும் திருக்குடந்தை புவிமடந்தையின் திலகம். வற்றாத பொன்னியும் வளமான செய்களும் இன்று கற்றோர் பலரை உண்டாக்கியிருக்கின்றன. கலைக் கோயில்களை இங்கு எழுப்புவோம். கோயில் தலமனைத்தும் பள்ளி செய்வோம். பயம், பக்தி, விசுவாசம் ஆகிய மூன்றும்தான் கலையின் அடிப்படை, இந்தப் பண்புகளை அடிப்படையாகக் கொள்ளாத கல்வி, அதைக் கற்றவர்களுக்கும், மற்றவர்களுக்கும் தீமையைத்தான் உண்டாக்கும். ஆகவே, கலையைக் கடவுள் சந்நிதியில் வைப்போம் என்று வைத்தார்கள் சோழ மன்னர்கள். அதிலும் ஆடல், பாடல், ஓவியம் போன்ற நுண் கலைகள் மனத்தை எளிதில் கவரக் கூடியவை. இவற்றினை பக்தியுடன் கலக்கா விட்டால் நாட்டைப் பாழ்படுத்திவிடும் என்று கருதினார்கள். அதே எண்ணத்தில்தான் தாராசுரம் கோயில் மண்டபத்திலே 'தித் தித் தை!' என்று தலைக்கோலைத் தட்டினான் சிங்கன். அவன் மத்தளத்திலிருந்து ஓர் ஏட்டையும், ஒரு குச்சியையும் எடுத்தான். அந்த நாட்டியக் கோலைக் கண்ணில் ஒற்றிக் கொண்டு ஏட்டைப் பிரித்தான் சிங்கன். அருமையான அகலமான கூந்தல் பனைஓலைகளில் சிதம்பரத்திலுள்ள நாட்டிய கரணச் சிற்பங்கள் தொண்ணூற்று ஆறும் தஞ்சைக் கோயில் சிற்பங்களும் வர்ணத்தால் தீட்டப்பெற்றிருந்தன...பார்த்தாள் குயிலி. பிரமித்தாள். முதல் ஏட்டில் இருந்த நடராஜ மூர்த்தியின் வண்ண ஓவியம் அவளுடைய எண்ணத்தில் விளக்கை ஏற்றியது. உற்றுப் பார்த்தாள். மான்



ஆடியது. மழுவிலே உள்ள அனல் ஆடியது. ஒரு பதம் எடுத்து ஆடியது. ஒரு பதம் மிதித்து ஆடியது. அரையிலே கட்டிய புலித்தோல் ஆடியது. உலகம் படம் எடுத்து ஆடியது. இடை ஆடியது. உடுக்கை ஆடியது. உலகமே அவன் ஆட்டத்தில் ஆடியது. குயிலியும் ஆடத் தொடங்கினுள்.

தில்லை நடராசன் முன் எல்லையற்ற ஆனந்தத்தில் அவள் மிதந்தாள்.

ராஜ ராஜேசுவரம் கோயில் வாசலில் நந்தி மண்டபத்துக்குமுன் உள்ள திறந்த நாட்டிய சாலையில் குயிலி நாட்டியம் பயில ஆரம்பித்தாள். கண் பார்த்ததைக் கையும் செய்யும் என்பதை அவள் விஷயத்தில் முன்பு தஞ்சைச் சித்திரக்காரர் வீட்டில் கண்டோம். இப்பொழுது கண் பார்த்ததைக் கைகளும், கால்களும் செய்தன. அன்று ஒரே நாளில் அஸம்யுத ஹஸ்தங்கள் என்று நாட்டிய பாஷையில் அழைக்கப்படும் தொழில் கை அபிநயங்கள் அத்தனையையும் கற்றுக் கொண்டு விட்டாள். சிங்கன் சொல்லிக் கொடுக்காதது போல் சொல்லிக் கொடுத்தான். அவளது கைகளும், கால்களும் கண்களும் பேசின..... ''போதும். உனக்கு உடம்பு வலிக்கும்'' என்று சிங்கன் எத்தனையோ முறை எடுத்துச் சொல்லியும் அவள் கேட்கவில்லை. ஆடினுள். அலுக்காமல் ஆடினுள். அவளா ஆடினுள்? அவளுடைய கலை ஆர்வம் ஆட வைத்தது.

மனிதனுக்கு மனம் இருக்கிறது. அது உற்சாகத்தில் உடலை ஆட்டி வைக்கும். ஆனல் மத்தளத்துக்கு—மனமா இருக்கிறது? ''குயிலி பசிக்கிறது'' என்ருன் சிங்கன்.

''என்னய்யா, இப்பத்தான் சாப்பிட்டாய். அது என்ன வயிரு, குதிரா? இன்னும் கொஞ்ச நேரம் ஆடலாம்'' என்ருள் அவள்.

''எனக்குப் பசிக்கவில்லை. என் மத்தளத்துக்குப் பசிக்கிறது. அதில் இருந்த சோறெல்லாம் உதிர்ந்து போச்சு'' என்ருன் சிங்கன்.

''ஏய்யா, கையை வலிக்குதா? அப்படிச் சொல்லுவே. ஏன் மத்தளத்தின் மேலே குத்தம் சுமத்தறே? சரி, நாளைக்குப் பார்த்துக்குவோம்'' என்ருள் குயிலி.

தாராசுரம் ஊர் ஓரத்திலே உள்ள கருமான் பட்டறையை நாடி வந்தான் சிங்கன். பட்டறை வாசலில் ஏழெட்டுக் குதிரைகள் நின்றன. குடி வெறியோடு இன்னும் ஏழெட்டுப்பேர் பதினைந்தாம் புள்ளி விளையாடிக் கொண்டிருந்தார்கள். கருமான் இன்னும் ஐந்து குதிரைகளுக்கு லாடம் கட்ட வேண்டும் என்றும், ஒவ்வொரு லாடத்தையும் இரும்பைக் காய்ச்சி அடித்து வளைக்கவே நேரமில்லை என்றும், கொல்லன் கிட்டம் கொடுக்க முடியாது என்றும் சிங்கனிடம் கூறிவிட்டான். ஆயினும் சலிக்காமல் தரையிலே தேடிப் பார்த்தான் சிங்கன். இரும்புப் பொடியும் மணலும் உருகி, கலந்து கல் ஆகிய கிட்டம் ஒன்று கிடைத்தது. அதைப் பொடி செய்து அந்தப் பொடியைச் சோற்றுடன் கலந்து மத்தளத்தின் வலது பக்கத்தில் தேய்ப்பது போல் தேய்த்துவிட்டு சங்கேதமாக மூன்று ததிங்கிணத் தோம்களை முழக்கினுன் சிங்கன்.

இரவு முதல் ஜாமத்தில் இம் மத்தள நாதம் கேட்கவே பட்டறையிலிருந்த ஆட்களும் குதிரைகளுக்கு லாடம் கட்டச் சொன்னவர்களும் அவனைச் சூழ்ந்து கொண்டார்கள்.

''நல்லா அடிக்கிறியே! இன்னும் கொஞ்சம் அடிய்யா.'' என்ருன் ஒருவன்.

''அடிக்கவில்லிங்க. சோறு போட்டுச் சுருதி பார்க்கிறேன்'' என்று அவன் சொல்லிக் கொண்டிருக்கும்போதே ஒரு பிச்சைக்காரன் பின்வரும் பாட்டைப் பாடிக் கொண்டே வந்தான்.

**முல்லை மணக்குது முல்லை மணக்குது**
**முருகன் வாசலிலே**
**எல்லையில்லாமண முல்லை மணக்குது**
**ஏரகக் கோயிலிலே.**

இதற்குச் சிங்கன் மத்தளத்தில் அபூர்வமாக வாசிக்கவே அங்கிருந்த குதிரைக்காரர்கள் அத்தனை பேரும் ''சபாஷ், சபாஷ்!'' என்று தலையை ஆட்டினுர்கள். ஏற்கனவே குடி வெறியில் ஆடிக் கொண்டிருந்த தலைகள் ஆதலால் இப்பொழுது அவைகள் நிற்காமல் மேலும் ஆடின.

**குதிரை இருக்குது குதிரை இருக்குது**
**கொல்லன் திடலிலே**
**கோலு நடக்குது கோலு நடக்குது**
**கோட்டைக் கோயிலிலே**
**துளசி மணக்குது துளசி மணக்குது**
**துயில் அரங்கத்திலே**
**அரசங்கன்னையே துளசி தேடுது**
**ஆகனும் கலியாணம்.**

''நிறுத்தய்யா பாட்டை!'' என்ருன் ஒரு குதிரைக்காரன். அரசங்கன்னுக்கும் வேப்பங் கன்னுக்கும் கல்யாணம் பண்ணுவாங்க. அரசுக்கும் துளசிக்கும் கல்யாணம் உண்டா?

**ஈஸ்வரி** மற்றும் எல்லா புதிய தீபாவளி கலர் பட்டுச் சேலை ரகங்களும் கிடைக்கும்




6-10-68
13-10-68
20-10-68

ஞாயிற்றுக்கிழமைகளில் விற்பனை உண்டு!

## பட்டுச் சேலைகள்

- சோளி பீஸ்கள்
- நூல் சேலைகள்
- மற்றும் பல நூதன ஜவுளி ரகங்களுக்கு

*

# நல்லி

## டெக்ஸ்டைல்

போன்: **442567**

பாண்டி பஜார்
தியாகராயநகர், மதராஸ் -17

பின்னி ஸ்பெஷல் ரகங்களுக்கு
**நல்லி & ஸன்ஸ்**
பாண்டி பஜார் - தி. நகர்

மில் & கைத்தறி ரகங்களுக்கு
**நல்லி ஸ்டோர்ஸ்**
லஸ் - மயிலாப்பூர்










என்று ஒரு குறுக்குக் கேள்வியைப் போட்டான் அவன். தங்கள் ஆட்களில் ஒருவனின் கெட்டிக்காரத்தனத்தைப் பார்த்து அத்தனை குதிரைக்காரர்களும் ''ஒ....ஒ....கெக்கெ...''— என்று கைகொட்டிச் சிரித்தார்கள்.

'' நிறுத்துங்கள், நிறுத்துங்கள் '' என்று சினத்தோடு எழுந்தான் சிங்கன். ''வீரர்களே, ஏன் சிரிக்கிறீங்க? அரியும் சிவனும் ஒண்ணு. அறியாதவன் வாயிலே மண்ணு. அரசங் கண்ணுக்கும் துளசிக் கண்ணுக்கும் கல்யாணம்னு அதைத்தான் குறிக்குது. பாடுறவங்க ஆயிரம் கருத்தை உள்ளே அடக்கி வைச்சுப் பாடுவாங்க. அது புரியறவங்களுக்குத்தான் புரியும் உங்க கையிலே காசு இருந்தாப் போடுங்க. இல்லேன்னா குதிரை மேலே ஏறிக்கிட்டு ஓடுங்க.''

'' குதிரைக்கு லாடம்கட்டும் கொல்லனாரே
ஐயா கொல்லனாரே
குருத்தைப் பார்த்துப் பொருத்த
வேணும் கொல்லனாரே''

என்று வாத்தியத்தில் தானே தட்டிக் கொண்டு சிங்கன் பாடினான். அதோடு அவன் ஆட்டமும் சேர்ந்து கொள்ளவே அங்கிருந்த வீரர்கள் அனைவரும் அவனோடு சேர்ந்து ஆட ஆரம்பித்தார்கள். ஆட்டம் ஏற ஏற மற்றவர்கள் காசை அள்ளி எறிந்தார்கள். ஆனால் கொல்லன் பட்டறையில் துருத்திக் கம்பை ஆட்டி ஆட்டித் துருத்தியை ஊதிக்கொண்டிருந்தவன், ''குருத்தைப் பார்த்துப் பொருத்த வேண்டும்'' என்ற வரியைத் தனக்குத் தானே சொல்லிக் கொண்டான்.

கீழே விழுந்த காசுகளை அக்கறையுடன் பொறுக்கினான் சிங்கன். தனக்கென்று ஒரு காசைக்கூட எடுத்துக் கொள்ளாமல் அத்தனை காசுகளையும் குருட்டுப் பிச்சைக்காரன் மடியில் அவன் முடிந்து விட்டதைப் பார்த்துக் குதிரைக்காரர்கள் ஆச்சரியப்பட்டனர்.

''போங்க பெரியவரே. ஒரு வாரத்துக்குக் கவலையில்லாமல் சாப்பிடலாம்'' என்று சொல்லிவிட்டு, ''வீரர்களே வணக்கம்'' என்று கூறி நடந்தான் சிங்கன். வரும் வழியில் திருக்குளத்தின் படித்துறையில் உட்கார்ந்து கொண்டு மாடு அசை போடுவதுபோல் பிச்சைக்காரன் பாடிய பாட்டை ஆராய்ந்தான் சிங்கன்.

முல்லை வேந்தனின் ஆட்கள் சுவாமி மலைப் பகுதியில் குயிலியைத் தேடுகிறார்கள். திருச்சியில் நவராத்திரி ஏற்பாடு மும்முரமாக நடக்கிறது. துளசி மகராஜா தம் மகனாகிய அரசிளங்குமரனை ஐந்நூறு ஒற்றர்களை விட்டுத் தேடச் சொல்லி யிருக்கிறார்! 'சபாஷ் சர்க்கரை' என்றார் கீர்த்தி சிங்கன் வேடத்திலிருந்த பிரதாப சிம்மர். அவரையும் அறியாமல் ஒரு சிரிப்பு வந்தது. குதிரைக்கு லாடம் கட்டும் கருமான் சியாமா, குருத்தைப் பார்த்து ஆணிகளைப் பொருத்திவிடுவான் என்ற எண்ணமே அவர் சிரிப்புக்குக் காரணம்.

தீர்த்தக்கரை மண்டபத்தில் படுத்திருந்த குயிலியின் கூட்டம் அந்தக்






குளிர்ந்த காற்றில் குறட்டை விட்டுத் தூங்கியது. குயிலிக்கு உறக்கமே வர வில்லை. ஆடிய ஆட்டத்தில் அவ ளுடைய இரு தொடைகளிலும் அசைக்க முடியாத வலி ஏற்பட்டு விட்டது. அவளது கைவிரல்கள் 'இன்னும் இரு தினங்களுக்கு எங்களால் சோற்றைக் கூடப் பிசைய முடியாது' என்று கூறின. கழுத்தும் தலையும் திரும்பவே மறுத்தன. ஒரே நாளில் நாட்டியத் தைக் கற்றுக் கொண்டு விட முடியுமா? நரம்புகள் எவ்வளவுதான் வளையும்? உடலில் இத்தனை அலுப்பு இருந் தாலும் அவளது உள்ளம் குயிலாகப் பாடியது. குளத்தங்கரைக் காற்றைக் காட்டிலும் குளிர்ந்த எண்ணங்கள் அவள் மனத்தில் ஓடின.

''அடி அம்மா நான் பிறந்த பிறப்பு நல்ல பிறப்பு. கணிகையர் வீட்டிலா பிறந்தேன்? கலையின் மடியிலல்லவா பிறந்திருக்கிறேன். கணிகை என்றால் என்ன அர்த்தம்? கணிதக் கை. தாளத் தைக் கணக்கிட்டு அபிநயிக்கும் கை என்று இன்னிக்குத்தானே புரிஞ்சுக் கிட்டேன். அம்மா! அந்த நடராசா வின் அழகு கண்ணுக்குள்ளேயே நர்த் தனம் ஆடுதே. கலைக் கண், பக்திக் கண் இந்த ரெண்டு கண்ணும் இருந்தா கோயில்களெல்லாம் பள்ளிக்கூடம்தான். இன்று கோயிலைக் காணக் கொடுத்து வைத்தேன். எப்படித்தான் இவ்வளவு சிற்பங்களை வெட்டினார்களோ? அவுங்க கை எப்படி வலித்திருக்கும்! ஒவ் வொரு கண்ணையும் செய்ய எத்தனை நாள் பிடித்திருக்கும்? வேலையத்துப் போயா வெட்டியிருப்பாங்க? கல்லுலே வெட் டுற வேலை இல்லே. கல்லும் புல்லும் உள்ளவரை இருக்க வேண்டிய கருத் துக்களைத்தான் வெட்டியிருப்பாங்க. எழுதி அழிக்கிறதா யிருந்தா அல்லது படிச்சுக் கிழிக்கிறதா யிருந்தா எதை யும் எழுதலாம். கோயில்கள் அதிகமா இருக்கிறதனாலேதான் கும்பகோணத் திலே இத்தனை கெட்டிக்காரத்தனம் இருக்குது. ஒவ்வொரு கோயிலும் தலைமுறை தலைமுறையாய்க் கலைகளை வளர்த்தது. சிற்பம், சங்கீதம், நாட் டியம் எல்லாம் காவேரிக் கரையில் செழிப்பா இருக்குதே ஏன்? ரசிக்கிற துக்குக் கலை இங்கே இருக்குது. ரசிக்க ரசிக்க மூளையும் சாணை பிடிச்சாப் போல ஆகுது. ரசிகன் வித்வானாகி விடுகிறான். இத்தனையும் கோயில்களிலே விளைந்த பயிர்தானே. ஊரிலே ஒரு கோயில் இருந்தா நாலு மேளம் வருது. பத்துப் பாட்டுக் கச்சேரி நடக்குது. தெருவெல்லாம் நாட்டியம் நடக்குது. கலைகளைப் பரிவாரமாக வைச்சுக்கிட்டுக் கடவுள் ஒவ்வொரு வீட்டு வாசலி லேயும் வந்து நிக்கிறாரு. கருத்துத் தெரி யாத வயசுலே கலையும் கடவுளும் கண்ணுக்குள்ளே பதியுது. கருத்தோட சேர்ந்து வளருது. காவடியிலே பாட்டு, பூசையிலே பாட்டு, பள்ளி யெழுச்சி யிலே பாட்டு. நாலு பெரியவங்க பிர சங்கம், அழகு, அலங்காரம், நறுமணம், நல்ல பேச்சு, சுத்தம், சுகம் எல்லாம் கோயிலாலே கிடைக்குது. எல்லாரும் சேர்ந்து வாழறாங்க. சேர்ந்து கும்பிட றாங்க. சேர்ந்து தேரிழுக்கிறாங்க. ஊரே ஒண்ணு சேர்ந்து ஒத்துமை வளருது. கோயில் இல்லா ஊரில் குடி யிருக்க வேண்டாமென்று சொன்னாங் களே எவ்வளவு நல்ல வார்த்தை! மனமே, கோயிலுக்குப் போ. மனிதர் களே, கோயிலுக்குப் போங்கள். பள்ளிக் கூடத்து நிழலிலே கூட ஒதுங்காத குயிலி சொல்லுகிறேன். எனக்குப் படிப்பைத் தந்தது கோயில். எனக்குக் கலையைத் தந்தது கோயில். என் கண்ணைத் திறந்தது கோயில். தூங்காமல் கலை யாசையிலே என்னை விழித்திருக்கச் செய்வது கோயில்.

''சின்னத்தம்பியும் முந்திரிக் கொட் டையும் தூங்கறாங்க. சின்னத்தம்பி அன்பின் உருவம். எனக்காக உயிரையும் கொடுப்பான். முந்திரிக் கொட்டை அதிகப்பிரசங்கி. அவன் பேச்சிலே அறிவு இருக்கும். சட்டாம்பிள்ளை படிச் சவன். மத்தப் பசங்களெல்லாம் ஏழைகள். அநாதைகள். அடேய்! இந் தக் குயிலி எப்பவும் உங்களுக்குச் சோறு போட முடியுமா? தூங்காதீர்கள். விழி. எழு. போ கோயிலுக்கு. அங்கே தான் அறிவுக் கண் திறக்கும்.

''எழுப்பி விட்டுவிடவா? பாவம். தூங்கட்டும். தானே நாளைக்குக் கோயி லுக்கு வருகிறார்கள். 'வா, வா, வா' என்று கெண்டா மணி கூப்பிடும்போது போகிறார்கள்.

''கோயிலுக்குள் நுழையறபோது நான் எப்படி நுழைஞ்சேன்? இப்பொழுது எப்படி இருக்கிறேன்? ஆட ஆட ஆனந் தம் வருது. பாடப் பாடப் பரவச மாகுது. நூற்றெட்டு ஆட்டமும் நொடி யிலே பாடமாகிவிட்டது. உடம்பு என் சொல்லைக் கேட்கிறது. மனசு எனக்கு அடங்கி நடக்கிறது. ஆனால் குயிலி சிரித்துக் கொண்டாள். ஹூம்... ஹூம் மனசு அடங்கலே. அடிக்கடி அந்தச் சிங் கன் மேலே பாயுது. இது ஏன்? அவன் கெட்டிக்காரன். கேட்ட கேள்விக்கு பதில் சொல்லுவான். ஆட்டமும் பாட்டமும் அவனுக்கு அத்துபடி ஆகியிருக்கு. அவன் பேச்சே இனிக்குது. ஆளும் அழகன்.''

**(தொடரும்)**

"ரவி, சீக்கிரம் உங்க பாட்டியை வரச் சொல்லு. ஹேமாகிட்டேயிருந்து லெட்டர் வந்திருக்கு" என்று உற்சாகம் பொங்கக் கூறி யபடி கடிதத்தை உடைத்தார் ராமஸ்வாமிர்தம்.

கைக் காரியத்தை அப்படியே போட்டுவிட்டு அடுக்களையிலிருந்த பத்மாஸனி அம்மாள் வேகமாகக் கூடத்துக்கு வந்தாள். கூடவே, "ஹேமாகிட்டே யிருந்தாப்பா, கடிதம் வந்திருக்கு?" என்று கேட்டபடி மூத்த பெண் கலோசனு மாடியிலிருந்து இறங்கி வந்தாள்.

"ஆமாம், ஹேமா பம்பாயிலிருந்து வெள்ளிக்கிழமை காலமே வண்டிக்கு நல்ல துணையோடு இங்கே புறப்பட்டு வர்றாளாம். மாப்பிள்ளைக்கு லீவ் கிடைக்காததினுலே தீபாவளிக்குக்கூட வர முடியாதாம். ஹேமாவோட பிரசவம் ஆனப்புறம் ஒரு நாள் பார்த்து எழுதினு, கூட்டிண்டு போக மாப்பிள்ளையே வர்றாராம். இதுதான் விஷயம்."

"ஹேமாவுக்கு இது எத்தனை மாசம் அம்மா?"

"நாலு முடிஞ்சு அஞ்சாகிறது." மருமகள் பார்வதியினுடைய கேள்விக்குப் பதில் கூறிக் கொண்டே காரியங்களைத் தொடர்ந்து கவனிக்கப் பத்மாஸனி அம்மாள் அடுக்களைக்குச் சென்று விட்டாள்.

கதவில் சிறு இடைவெளி உண்டாக்கிக் கொண்டு, ஹாலில் நடைபெற்ற அத்தனை காட்சிகளையும் கண்டு விஷயத்தைக் கிரகித்துக் கொண்ட அருணு—அந்த வீட்டின் கடைசி மருமகள்—தன் அறைக் கதவை மீண்டும் சாத்திவிட்டு அருகில் இருந்த கணவனை நோக்கி ஒரு புன்னகை புரிந்தாள்.

அந்தப் புன்னகையின் பொருளைப் புரிந்து கொண்டு சந்திரனும் முறுவலித்தான்.

கணவன் ஆபீசுக்குப் புறப்பட்டுச் சென்றதும் அருணு மாடிக்குச் சென்றுள். குழந்தைக்குப் பால் கொடுத்துக் கொண்டிருந்த கலோசனு அருணுவைக் கண்டதும், "ஹேமாகிட்டேயிருந்து லெட்டர் வந்திருக்கு, அருணு...." என்றுள் மகிழ்ச்சி பொங்க.

"தெரியும். கொஞ்ச நாளிலே இந்த வீடு மெடர்னிடி ஆஸ்பத்திரியாகப் போகிறது: சென்சஸ்லே ஒரு புள்ளி சேரப் போறது."—கண்களைச் சிமிட்டிக் கேலியாகச் சிரித்தபடி அருணு கூறினுள். கலோசனுவின் முகம் கூம்பிவிட்டது.

"அப்படியெல்லாம் பேசப்படாது அருணு!" அதற்கு மேல் கலோசனு கூறியதை யெல்லாம் கேட்டுக் கொண்டிருக்க அருணு அங்கே இருந்தால்தானே! அவள் மாடிப்படி இறங்கிக் கொண்டிருந்தாள்.

அடுக்களைக்குச் சென்ற அருணு, "சாப்பிடலாமா அம்மா?" என்றுள்.

அருணு சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போது இடுப்பில் இருமிக் கொண்டிருக்கும்



கே.பி.நீலமணி

கைக் குழந்தையுடன் உள்ளே வந்த பார்வதி ''ஹேமா வர்ற விஷயம் அருணாவுக்குத் தெரியுமா அம்மா?'' என்றாள் யதார்த்த மாக. ஆனால் அருணாவின் குணம் தெரிந்து பத்மாஸனி அம்மாள் மௌனம் சாதித்தாள்.

பார்வதி விடாமல் அருணாவைப் பார்த்துச் சிரித்தபடி, ''அடுத்தது நம்ம அருணாவுக்குத் தான் பிறக்கணும், இல்லியாம்மா?'' என் றாள் மகிழ்ச்சியுடன்.

''போதும், போதும்! எனக்கொண்ணும் வேண்டாம். நான் நிம்மதியா இருக்கேன். என்ன வேண்டியிருக்கு! பொழுதுக்கும் வியாதி பிடுங்கிண்டு, குழந்தையும் குட்டிகளும்?''

அருணாவின் இந்த வார்த்தைகள் பார்வதி யின் நெஞ்சில் 'கருக்'கென்று தைத்தன. உற்சாகம் குன்றி அவள் முகம் தொங்கி விட்டது.

ராமாமிர்தம் தம்பதிகளுக்குச் கலோசனா, ஹேமா என்று இரண்டு பெண்கள். சந் திரன், ரமணன் என்று இரண்டு பிள்ளைகள். அருணாவைத் தவிர எல்லாருக்கும் — பெண் களுக்கும், மருமகளுக்கும்—மூன்றும் நான்கும் குழந்தைகள். குடும்பம் இப்படி ஆலமர மாக வளர்ந்து பெருகியிருந்தாலும், அந்த வீட்டில் இன்னும் பாகப் பிரிவினை என்னும் பிரச்னை எழாமல் எல்லோரும் ஒரே குடும்ப மாக இருப்பதில் பிரியம் உள்ளவர்கள் போலவே இருந்தனர்.

அத்தனை பேர்களுடைய மனத்திலும், 'அருணா இன்னும் தாயாகாமல் இருக்கிறாளே' என்பதுதான் வருத்தம். ஆனால் அருணா வுக்கோ...?

அப்படி இருப்பதே ஒரு பெருமையாக இருந்தது. அதில்தான் தன்னுடையகௌரவ மும், அழகும் இருப்பதாகக் கர்வப்படக் கூடச் செய்தாள். படித்த பெண்ணான அவள், தன்னுடைய அந்தக் கர்வத்தைச் சமயம் வாய்த்த போதெல்லாம் வெளிப் படுத்தவும், மற்றவர்களை மட்டம் தட்ட வும் தயங்குவதில்லை. இதைக் கண்டு சந்திரன் திடுக்கிட்டான்.

ஒருவிதப் பிக்குப் பிடுங்கல் இல்லாமல், ஹாய்யாக நினைத்த போது கணவனுடன் கையைக் கோத்துக் கொண்டு வெளியே சுற்ற முடிகிற ஒரு சுதந்திரத்தையே அருணா போற்றினாள். அழகும், இளமையும், குலையாமல், அன்றலர்ந்த மலர் போல



இருக்க முடிகிற ஒரு பொய்யான மயக்கத்தில் அவனது மனம் ஊறிப்போய் இருந்தது.

அன்று வெள்ளிக்கிழமை. கடிதத்தின்படி காலையிலேயே ஸ்டேஷனுக்குப் புறப்பட்டுச் சென்றுவிட்ட அப்பா, பெண்ணுடன் திரும்பி வந்தார்.

ஹேமாவை அம்மாவோடு சேர்ந்து கலோசனும் பார்வதியும் வாசலில் நின்று வரவேற்றனர். குழந்தைகள், 'சித்தி...அத்தே...'' என்று கோஷமிட்டன. அருணாவின் சுபாவம் தெரியுமாதலால், மீண்டும் வயிறும் பிள்ளையுமாக வீட்டுக்குள் நுழையும் போது அருணாவைப் பார்த்துவிட்ட ஹேமாவின் பார்வை மற்றவர்களிடம் தஞ்சம் புகுவது போல் இருந்தது. ஆனால் அருணா யாரையாவது லட்சியம் செய்தால்தானே !

வயிறும் பிள்ளையுமாக வந்திருக்கும் ஹேமாவை அப்பாவும் அம்மாவும் தாங்கினார்கள். சகோதரர்கள் அன்பு மழை பொழிந்தார்கள். அவளை ஒரு வேலைவெட்டி செய்ய அனுமதிப்பதில்லை. குழந்தைகளை யெல்லாம் ஊரில் விட்டு வந்ததற்காக ரமணனும் பார்வதியும் கோபித்துக் கொண்டார்கள்.

அன்று சனிக்கிழமை. அரை நாள் லீவு போட்டுவிட்டு ஓர் ஆங்கிலப் படத்துக்குப் போவதாக ஏற்பாடு. அருணா கண்ணாடி முன் அமர்ந்து தன்னை அழகு செய்து கொள்வதில் முழுமூச்சுடன் முனைந்தாள்.

ஆபீஸிலிருந்து வந்த சந்திரன், ''அருணா, ஒரு குட் நியூஸ்!'' என்று கூறிக் கொண்டே அறைக்குள் நுழைந்தான்.

''என்ன?'' என்கிற பாவனையில் ஒப்பனையில் ஈடுபட்டிருந்த அருணா புருவத்தை வளைத்தாள். சந்திரன் அவள் கையில் ஆபீஸிலிருந்து கொண்டு வந்திருந்த ஒரு கடிதத்தைக் கொடுத்தான். அதில் —

'புதன்கிழமை காலை 'ஃப்ளைட்டு'க்கே லண்டன் புறப்பட' உத்தரவு கண்டிருந்தது.

அருணாவின் உற்சாகம் கணப்பொழுதுக்குள் புஸ்வாணமாகி விட்டது.

''இதைப் பற்றி நீங்கள் எங்கிட்டே ஒரு வார்த்தைகூடச் சொல்லல்லியே ?''

''எனக்கே காலமேதான் தெரியும், அருணா ! பெரிய ஆபீஸர் கூப்பிட்டு, 'சந்தர், இந்த 'ஜாப்புக்கு' நீதான் லாயக்குன்னு உன்னைச் சிபாரிசு செய்திருக்கேன். இதைத் தொடர்ந்து, உன் 'குட்லக்' அமெரிக்கா விஜயம் ஏற்பட்டாலும் ஏற்படலாம்'னு சொன்னார்.''

'' அப்படீன்னா தீபாவளிக்குக்கூட நீங்க இங்கே இருக்கப் போறதில்லையா?''

''ஊஹூம்! இந்தத் தீபாவளிக்குக் கங்கா ஸ்நானம் தேம்ஸ் நதியிலேதான் அருணா!''

அன்று கணவனுடன் சினிமாவுக்குச் சென்ற அருணாவுக்குத் தியேட்டரில் ஆங்கிலப் படம் பார்ப்பதாகவே தோன்றவில்லை. லண்டன் மாநகரத்து ஒவ்வொரு அழகுச் சதுக்கத்திலும் தானும் கணவருடன் கைகோத்துக் கொண்டு சுற்றுவது போலவே அத்தனை பெருமையில் மனம் துள்ளிக் கொண்டிருந்தது.

குறிப்பிட்ட தினத்தன்று விமான நிலையத்துக்குப் புறப்பட வேண்டிய நேரத்துக்கு ராமாமிர்தத்தின் வீட்டு வாசலில் சந்திரன் ஆபீஸ் 'வான்' ஒன்று வந்து நின்றது. டிரைவர், பெட்டிகளை வண்டியில் ஏற்றிக் கொண்டிருந்தார்.

சந்திரன் அப்பா அம்மாவை நமஸ்கரித்தான். பிறையிலிருந்த விபூதி மடலிலிருந்த திருநீற்றை எடுத்துப் பிள்ளையின் நெற்றியில் இட்டு ஆசீர்வதிக்கும் போது பத்மாஸினி அம்மாளுடைய கண்கள் கலங்கிவிட்டன. பிள்ளை கண்காணாத தேசத்துக்குப் போகிறான் என்கிற நினைப்பில் பீறிட்டு வந்த அழுகையை அடக்க, வயதின் காரணமாகத் தளர்ந்து போன அந்த விழிகள் வலிமை இழந்து விட்டன போலும். அம்மா தன்னையும் மீறி அழுதுவிட்டாள். ராமாமிர்தம் இந்தக் கட்டத்தில் தமது பார்வையை எதிர்ப்புறச் சுவரிலிருந்த ஏழுமலையான் படத்தின் மீது செலுத்திக் கொண்டிருந்தார்.

எல்லோரிடமும் விடைபெற்றுக் கொண்டு வானின் முன் ஸீட்டில் சந்திரன் ஏறிக் கொண்டான். பின் ஸீட்டில் — விமான நிலையம் வரையில் வழியனுப்பவென்று — அருணாவும் கலோவும் அவர்களோடு அத்தனை வாண்டுப்பட்டாளங்களும் ஏறிக்கொண்டன.

பிரயாணிகள் புறப்படுவதற்கு முன்பு உள்ள பூர்வாங்கச் சடங்குகள் எல்லாம் ஒரு வழியாய் முடிந்தன. பம்பாய் மார்க்கமாக லண்டன் செல்லும் 'ஃப்ளைட்' புறப்படுவதற்கான அறிவிப்பு ஒலித்தது.

சந்திரன் அருணாவின் காதருகே மெல்லக் கிசுகிசுத்தான். ''அசடே, தைரியமாயிரு. நான் லண்டன் போறது உனக்குப் பெருமை இல்லையா? நீதான் புத்திசாலியாச்சே !''

உற்சாகமூட்டும் கணவருடைய வார்த்தைகளைக் கேட்டு வசமிழந்த அருணா, கண்ணீருக்கிடையே சிரித்தாள்.

பிரசவத்துக்கு வந்திருந்த ஹேமாவுக்கு மூன்றாவது குழந்தை பிள்ளையாகப் பிறந்தது. இதில் அவளுக்கு உள்ளூற — பெண் பிறக்குமென்று இருந்த ஆசையால் — ஓர் ஏமாற்றம்; மனக் குறை.

ஹேமாவை அவள் கணவர் வந்து அழைத்துக் கொண்டு போய் இரண்டு மாதங்களுக்கு மேல் இருக்கும்.

சந்திரனைப் பற்றி ஏதோ சந்தர்ப்பம் வரும் போது அதுவும் அவன் சம்பந்தப்பட்டதாக இருந்தால் வீட்டில் எல்லோரும் ஒரு முறை அவனை நினைத்துக் கொண்டு பேசி ஓய்வதோடு சரி. அதன் பிறகு அவரவர்கள் தங்கள் தங்கள் குழந்தைகளுடன் சீராடுவதும், கண் எதிரே உள்ளவர்களைக் கவனிப்பதும், வீட்டு வேலைகளைச் செய்வதுமாக இப்படி அன்றாட அலுவல்களில் அனைவரும் மூழ்கிப் போனார்கள். ஆனால் அருணா மட்டும் —

மற்றவர்களிடமிருந்து மாறுபட்டவளாக, எப்போதும் கணவனை நினைத்துக் கொண்டு அந்த வீட்டில் தன்னையொத்த ஒருவருக்கும் கிட்டாத ஒரு பேறு தனக்குக் கிட்டியிருப்பதையும், கணவன் திரும்பி வந்த பிறகு, தன் அந்தஸ்து இன்னும் ஒரு படி உயரப் போவதையும் கற்பனையில் எண்ணி எண்ணி மனம் பூரித்தாள். ஆனால் —

# "எங்கே, பான் எடுத்துவா!"

**ஒரு நொடியில் நல்ல மணமும் சுவையுமுள்ள காபி பெறுவதற்குச் சுலபமான வழி!**

இதோ வந்து விட்டார்கள்—எதிர் பாராத விருந்தினர். தொந்தரவு ஒன்றுமில்லை: மிக நல்ல கோப்பைகளும் பானும் எடுத்துவா. பானின் உற்சாகமளிக்கின்ற நல்ல சுவையுள்ள காபி மணத்தை அவர்கள் பெரிதும் விரும்புவார்கள்! எனக்கு பான் ரொம்பப் பிடித்திருக்கிறது. காரணம், அது ஒரு நொடியில் தயாராகி விடுகிறது! எனவே, பான் வழங்கிடுகும் விருந்தினர்களுக்கு மிகவும் ஏற்றது.




**இன்னொரு பான் வாங்குங்கள்**

ப்ருக் பாண்டினுல் அதிகக் கவனத்துடன் தயாரிக்கப்பட்டது.

629A/27 AM

— அந்தப் பூரிப்பு பெரும் பொருமலாக ஒரு நாள் அவன் உள்ளத்தில் வெடித்துச் சிதறப் போகிறது என்பதைப் பாவம் அருணா எப்படி அறிவாள்?

மூன்று வருஷங்களில் திரும்பி வர வேண்டிய சந்திரன், அதன் பிறகும் ஊருக்குத் திரும்பவில்லை. ஆரம்பத்தில் லண்டனிலிருந்து ஒழுங்காக வந்து கொண்டிருந்த கடிதமும், மெல்ல மெல்லத் தடைப்பட்டு ஒரு நாள் அறவே நின்று விட்டது.

அருணாவின் உற்சாகம் எல்லாம் போன இடம் தெரியவில்லை. ஏதோ இனம் புரியாத ஒருவிதக் குறுகுறுப்பு அவளது உள் மனத்தை உறுத்திக் கொண்டிருந்தது. யாரிடம் போய் முறையிடுவது ?

ரமணன்தான் பிரச்னையைக் கிளப்பினன்.

''சந்திரனை இப்படியே விட்டு விடறதா, அப்பா ? போட்ட லெட்டர் ஒண்ணுக்காவது பதிலைக் காணோம்.''

''அதுக்கு என்னை என்னடா பண்ணச் சொல்றே ?''

''அவன் ஆபீஸரை ஒரு நாள் சந்திச்சேன். அவர் ஒன்றும் அவனை அங்கேயே இருந்தாகணும்னு வற்புறுத்தல்லியாம்.'' ..

''பின்னே இவன் பேசாம ஊரைப் பார்க்க வந்து சேர வேண்டியதுதானே ?''

''அதைத்தான் அப்பா, நானும் உங்களைக் கேட்கிறேன்!''

''என்னைக் கேட்டு என்னடா பண்ண ? அதையும் அந்த ஆபீஸர்கிட்டேயே கேட்கிறதுதானே ?'' — ராமாமிர்தம் தலைநிப் போய் இந்த யோசனையைக் கூறிவிட்டார். ரமணன் 'கன்' என்று விழுந்தான்.

''நாம சந்தேகப்படற இந்த வெக்கக் கேட்டை, ஆபீஸர்கிட்டே வேறே போய்ச் சொல்லணுமாப்பா....?''

''பின்னே..... இதைப் பற்றியெல்லாம் என்னை ஏண்டா கேட்கிறே ? அதோ, உங்க அம்மா வர்ரு பாரு!'' என்று ராமாமிர்தம் கையைக் காட்டி, பிள்ளையின் கோபத்தைத் திசை திருப்பி விட்டார்.

''இதுக்கெல்லாம் அம்மாகிட்டே போகப் படாது அப்பா !''

ரமணன் ஒருகணம் ஆழ்ந்த சிந்தனையில் இருந்தான்.

''அப்பா, ஒரு 'பஸ்ட் கிளாஸ் ஐடியா!' ஆனு... நீங்க 'பெர்மிஷன்' கொடுப்பேளா?''

''என்னடா இது! கொஞ்சம் புரியும்படி சொல்லேன்.''

''மதர் வெரி ஸீரியஸ். ஸ்டார்ட் இம்மீடியட்லி.''

''என்ன இது, அபத்தம்....?''

ஆமாம், அப்பா ! இதுதான் நான் கொடுக்கப் போகிற 'கேபிளின்' வாசகம். அம்மான்னு சந்திரனுக்கு உசிராச்சே !''

''அதுக்காக ?''

''கேபிளைப் பார்த்ததும், அலறிப் புடைச்சிண்டு வருவான். அப்புறம் அவனை விடாமப் புடிச்சிக்க வேண்டியது அருணாவோடு பொறுப்பு..... என்னப்பா சொல்றேள்?''

''உங்கம்மாவைக் கேளு....!''

''ஒருத்தரையும் கேட்க வேணும்டா. நீ சொன்னாலும் சொல்லாட்டாலும், நான் ரொம்ப 'சீரியஸா'த்தான் இருக்கேன்.




''வாசலில் யார் வந்திருக்காடா?''

''எப்பொழுதும் வெறும் கையோடு நம்மைப் பார்க்க வரும் மாமா இன்று கையில் பெட்டி படுக்கையுடன் வந்திருக்கார்!''

* * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * *

உடனே போய்த் தந்தியைக் கொடுத்திட்டு வா....!'' என்று பத்மாஸனி அம்மாள் பிள்ளையை விரட்டினாள்.

கேபிளைப் படித்துவிட்டுச் சந்திரன் என்னவோ ஏதோ என்று அலறிப் புடைத்துக் கொண்டு வந்து சேர்ந்தான். ஆனால் தனியாகவல்ல —

அவனது வலக்கை ஆள்காட்டி விரலை அழகிய இரண்டு வயதுப் பெண் குழந்தையின் பிஞ்சுக் கரம் ஒன்று இறுகப் பற்றி இருந்தது. அந்தப் பற்றுதல் அல்லது அந்தப் பிஞ்சுக் கரத்தின் இறுகிய பிடிப்பு —

இந்திய மண்ணில் பிறந்த சந்திரனையும் லண்டனில் உள்ள ஸ்டெல்லாவையும் பிணைத்திருந்தது என்பதைப் புரிந்து கொள்ள அருணாவுக்கோ, மற்றவர்களுக்கோ அதிக நேரம் ஆகவில்லை.

அருணா அழுதாள். அப்படி அழுவது அவளுக்கு அவளுடைய நாகரிகத்துக்கேகூட இழுக்காகத்தான் ஒரு கணம் தோன்றியது. ஆனால் யாருடைய அழுகையையும் துயரத்தையும் சந்திரன் லட்சியம் செய்ததாகத் தெரியவில்லை. மாறாக —

'அம்மாவுக்கு ஆபத்து' என்று பொய்த் தந்தி' அடித்ததற்காகச் சந்திரன் ரமணனை அளவுக்கு மீறிக் கோபித்துக் கொண்டான்.

எந்த மண்ணில் பிறந்தால் என்ன? தனக்கொரு குழந்தை பிறந்து பார்க்க வேண்டும் என்று துடித்த அம்மாவின் ஆசைக்காகவே அத்தனை தூரத்திலிருந்து மகளை அழைத்துக் கொண்டு வந்து காட்டிய தன்னுடைய அன்பையும் பெருந்தன்மையையும் உணர்ந்து கொள்ளத் தெரியாதவர்கள் என்று பொதுப் படையாக எல்லோர் மீதும் சீறி விழுந்தான்.

இறுதியில் பெட்டி படுக்கைகளுடன் அவன் புறப்பட முனைந்த போது, அப்பாவும் ரமணனும் குறுக்கே நின்று தடுத்துப் பார்த்தனர். சந்திரன் கேட்கவேயில்லை.

''ஸ்டெல்லாவை விட்டு என்னாலே இருக்க முடியாது'' என்று கூறி விட்டான்.

''இந்தக் கண்ணராவியை எல்லாம் பார்க்காம நான் போயிருக்கக் கூடாதா ?''

என்று பத்மாஸனி அம்மாள் அழுது புலம்பினாள். சந்திரன் மனம் அதில் ஒன்றும் மாறவில்லை. குழந்தை 'பெய்க்'குடன் விமானமேறி விட்டான். இப்போது அவனை வழியனுப்ப அந்த வீட்டிலிருந்து யாருமே செல்லவில்லை.

சிறிது நேரம் வரை அங்கு பயங்கரமான தோர் அமைதி — புயல் அடித்து ஓய்ந்தாற் போன்ற பீதி நிறைந்த ஓர் அமைதி—அந்த வீட்டில் நிலவியிருந்தது.

பார்வதி தன் அறையில் குழந்தைக்குப் பால் கொடுத்துக் கொண்டிருந்தாள்.

அதுவரை அங்கு நடந்த அனைத்தையும் ஒன்று விடாமல் பார்த்துக் கொண்டிருந்த அருணா, பொங்கி வந்த துக்கம் தாளாமல், ''அக்கா !'' என்று பார்வதியின் மடியில் தலையைப் புதைத்துக் கொண்டு சிறு குழந்தையைப் போலத் தேம்பித் தேம்பி அழுதாள்.

அருணாவுக்கு ஆறுதல் கூற நினைத்த பார்வதிக்கு ஏனோ கோபம்தான் வந்தது.

''இப்போ அழுது என்னடி பண்ண, அருணா? கணவனும் மனைவியும் கண்ணுக்கழகாக டிரஸ் பண்ணிண்டு ஹாய்யா கையைக் கோத்துண்டு 'மாட்னி' போறது மட்டும் வாழ்க்கையில்லே அருணா. புருஷன், மனைவி என்கிற அன்புப் பிணைப்பு அறுந்து போகாம அந்த உறவு உறுதியா, நிரந்தரமாப் பிணைஞ்சு இருக்கணும்னா, குழந்தை என்கிற பாலம் — மக்கள் செல்வம் என்கிற அந்தப் பிணைப்புச் சங்கிலி அவசியம் வேணும். பிள்ளைப் பாசம் என்கிற அந்தப் பிணைப்புச் சங்கிலி காரணமாகத்தான் கண்காணாத அக்கரைச் சீமையிலே உள்ள ஸ்டெல்லாவை விட்டுப் பிரியமுடியாமல் சந்திரன் அவளைத் தேடிண்டு ஓடிட்டான் இல்லையா?''

''தப்புப் பண்ணிட்டேன், அக்கா !''— அருணா விம்மினாள்.

''சின்னத் தப்பில்லே, அருணா ! பெரிய தப்பு. வயசான மாமியார், மாமனாருடைய மனசை — அதிலே அலைமோதற ஆசையை நீ எண்ணிப் பார்க்காதது மாத்திரமில்லே, அதைப் பூர்த்தி செய்யணும்கிற விருப்ப முள்ள உன் புருஷனையே நீ புரிஞ்சுக்கத் தவறிட்டியே !''

அருணா கதறியே விட்டாள்.

மாடியிலிருந்து இறங்கி வந்த ரமணன்; எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டுதான் இருந்தேன் — என்கிற பாவனையில் புன்னகையுடன் மனைவியைப் பார்த்தான்.

பார்வதியும் பதிலுக்குச் சிரித்தாள். ''மூணு வருஷம் பெண்டாட்டியை விட்டுப் பிரிஞ்சிருந்தது போதும்.....'' என்றாள். ''உத்தரவு'' என்ற ரமணன் சட்டையை மாட்டிக் கொண்டு தந்தி ஆபீஸை நோக்கி விரைந்தான்.

ராமாமிர்தம் கவரைப் பிரித்தார். கடிதத்துக்குள் கடிதம் இருந்ததால் கனத்தது. ஒட்டாமல் இருந்த கடிதத்தைப் படித்த அவர் உற்சாகம் பொங்க, ''ரவி, உங்க பாட்டியைக் கூப்பிடுடா ! ஹேமா சித்தி கிட்டேயிருந்து கடுதாசி வந்திருக்கு'' என்றார்.

''அடியே, கலோ! பகவான் என் வயித்திலே பாலை வார்த்துட்டார்டி ! தங்கக் கம்பியாயிருந்த பிள்ளை, சீமைக்குப் போய் இப்படி மாறிப் போயிட்டானேன்னு என் மனசு பட்டபாடு அந்தப் பகவானுக்குத்தான் தெரியும். சந்திரன் இங்கே கல்யாணம் ஆயிட்டதா நாடகம் ஆடினானும். அவன் இங்கே கூட்டிண்டு வந்த குழந்தைகூட யாரோ பம்பாய் கம்பெனியிலே இருக்கிற அவன் சிநேகிதர் துரையோடதாம்.....!'' என்று பத்மாஸனி அம்மாள் கூறிக் கொண்டிருக்கும் போதே கலோசனா இடைமறித்தாள், ஓரக் கண்ணால் பார்வதியைப் பார்த்தபடி.

''அம்மா, இந்த நாடகம் சந்திரனா ஆடல்லே. இந்த மன்னியும் அண்ணாவும் சேர்ந்து அவனை இப்படி ஆட்டி வச்சிருக்கா.

''மூணு வருஷம் முடிஞ்சதும் சந்திரன் நேரே இங்கேதான் வர்றதாக இருந்தானும். 'அது வேண்டாம். லண்டன்லே இருக்காப் பலேயே உன் பம்பாய்க் கம்பெனி பிராஞ்சிலேயே கொஞ்ச நாள் இரு'ன்னு சொன்னது அண்ணாவோட ஐடியா. 'அம்மாவுக்கு உடம்பு சரியில்லேன்னு தந்தியடி'ன்னது ஹேமாவோட ஐடியா. 'லண்டன்லேருந்து வர்றப்பிலே வர்றவனை வெறும் கையோடு அனுப்பி வைக்காதே, ஒரு வெள்ளைக்காரக் குழந்தையையும் கொடுத்தனுப்பு; மீதியை நான் பார்த்துக்கறேன்'னது மன்னியோட ஐடியா !'' என்றாள்.

''என்ன நாடகமோ, என்ன ஐடியாவோ, எப்படியோ என் செல்ல அருணா மனசு மாறிட்டா. நல்லபடியா சந்திரனும் நாளைக்கு வந்துடுவான். அதுவே எனக்குப் போதும்'' என்று பத்மாஸனி அம்மாள் கூறி முடிப்பதற்குள், ''உனக்கு அது போதும். அருணாவுக்கு ஏதாவது வேண்டாமா? இதோ சந்திரன் ஒரு லெட்டர் எழுதியிருக்கான். உள்ளே போய் அவளை அனுப்பு'' என்றார் ராமாமிர்தம்.

மாமனாரிடமிருந்து பெற்றுக் கொண்ட கணவரின் கடிதத்துடன் தன் அறைக்கு ஓடப் போன அருணாவைச் கலோ தடுத்து நிறுத்தினாள்.

''ரூமுக்குள்ளே என்ன? இங்கேயிருந்தே படி மன்னி, எல்லாரும் கேட்கிறோம்'' என்று பிடிவாதம் பண்ணினாள்.

அருணாவும் மறுக்க மனமின்றி, கடிதத்தை உடைத்தாள்: முதல் வரியைப் படிப்பதற்குள் அவள் முகம் 'குப்'பென்று நாணத்தால் சிவந்து குங்குமம் போல் ஆகிவிட்டது. கால்கள் தரையில் நிலை கொள்ளாமல் தடுமாறின. விழிகள் எல்லாரையும் நோக்கி, 'கெஞ்சுவது போல்' இருந்தது.

''அவளை விடுடி போகட்டும்!'' என்று பார்வதி அருணாவைச் கலோவின் பிடியிலிருந்து அனுப்பி வைத்தாள். ஆனால் உள்ளே சென்று மீதிக் கடிதத்தையும் படித்த அருணாவால் சந்திரனின் அன்புப் பிடியிலிருந்து மீளவே முடியவில்லை.

மன்னிப்பை வேண்டி இறைஞ்சுவதுபோல் சந்திரனின் கையெழுத்துக்களின் மீது அருணாவின் விழிகள் உதிர்த்த கண்ணீர்த் துளிகள் தடுமாறிக் கொண்டிருந்தன.


விசேஷ
அளிப்பு!
ஸ்டாக் உள்ளவரை
60 பைசா
மதிப்புள்ள அழகான
பிளாஸ்டிக் டம்ளர் இந்த
டப்பாவினுள் உங்களுக்காக
10 பைசாவிற்கு
மட்டுமே!
Cadbury's
Bournvita
450g
net
Bournvita
சக்திக்கும்
வலிமைக்கும் —
மற்றும்
திடச்சுவைக்கும்
காட்பரிஸ்
போர்ன்விடா!

# அன்புப் பிடியிலே அண்ணா!

சென்ற மாதம் 16–9–68 அன்று இரவு சுமார் எட்டு மணிக்கு மேற்கு மாம்பலம் ரயில்வே கேட் அருகே ஒரு பஜனை கோஷ்டி மிக உருக்கமாகத் தேவாரம் பாடியவண்ணம் சென்று கொண்டிருந்தது.

ஏதோ ஒருவித மன அமைதியின்றிச் சென்று கொண்டிருந்த நான் அந்தப் பஜனைக் கூட்டத்தினருடன் சென்றால் ஓரளவு மனம் தேறும் என்று எண்ணி அவர்களுடன் சேர்ந்து போக எண்ணினேன்.

பஜனை கோஷ்டியின் அருகில் நெருங்கினேன். அறிஞர் அண்ணா அவர்களது படத்தை ஒருவர் சைக்கிளில் கொண்டு வர, அதைச் சுற்றி இருபது முப்பது சிறுவர்கள் தேவாரம் பாடி வர, ஒரு பெரியவர் அடிக்கடி முருகன் பெயரை உச்சரித்து, 'அண்ணா உடல் நலம் தேற அருள் புரிவாய்' என முருகனைப் பிரார்த்தித்தபடி நடந்தார். அக்காட்சியைக் கண்டு என் நெஞ்சம் நெகிழ்ந்தது. ஒரு பெரிய துணியில் கீழ்க்கண்டவாறு ஒரு வெண்பா எழுதி அதை இருவர் பிடித்து வந்தனர்.

''முத்தமிழைக் காக்கும் முருகா<br>
இதுமுறையோ<br>
எத்திக்கும் செந்தமிழை இன்பமுடன்<br>
தித்திக்கப்<br>
பேசிப் பெருமையுறச் செய்த<br>
அண்ணா நோயினைத்<br>
தூசியென நீஒழியச் செய் !''

என் உள்ளச் சுமையையும் மறந்து அக் கூட்டத்தினூடே சிவ விஷ்ணு ஆலயம் வரை சென்று கோயில் முன் நின்ற பொழுது என்னை அறியாமல் கண்களில் நீர் பனித்தது.

சென்னை<br>
17–9–68 சத்யநாராயணா

''எழுத்தில் புதுமை'' என்ற தலைப்பில் ஜனாப் அப்துல் வஹாப் அவர்கள் எழுதிய தித்திக்கும் திருமறை என்ற நூலிற்கு திரு மகரம் எழுதிய விமரிசனம் மிகச் சிறப்பாக இருக்கின்றது!

வாசக அன்பர்கள் தரமும் திறமும் உள்ள நூல் எது என்று தேடித் தவிக்கின்ற நிலையில் உள்ளனர்! அத்தகையவர்களுக்கு இது போன்ற நூல் விமரிசனமும் நூல் எழுதியவரின் நுண்ணறிவைப் பற்றிய விளக்கமும், பிறவும் வரப்பிரசாதம் போன்ற ஒன்று.

ராவணசமுத்திரம்<br>
13-9-68 ம.மூ. பீர்முஹம்மது எம்.எல்.ஏ.




திரு தேவரின் பதிலைக்கண்டு என் போன்ற தமிழ் சினிமா ரசிகர்களின் மனம் மிகவும் வேதனையடைகிறது. ''டப்பாங்குத்து'' படங்களைத் திரையிடுகிறார்கள். தமிழ்நாட்டு சினிமா ரசிகர்களின் ரசிகத்தன்மையைத் தரம் குறையச் செய்தது தேவர் போன்ற படத் தயாரிப்பாளர்கள்தானே!

தற்பொழுது 'ஓணம்' வெளியீடாக திரு வின்சென்டின் டைரக்ஷனில் உருவாகிய ''துலாபாரம்'' என்ற படம் திரையிடப்பட்டிருக்கிறது. இயற்கையை ஒட்டிய சம்பவங்களைக் கொண்ட இந்த மலையாளப் படம் இங்கு நல்ல வசூலையும், வெற்றியையும் அளித்திருக்கிறது. ஜனங்கள் திரள் திரளாக வந்து பார்க்கிறார்கள்! இக்கதையை நல்ல முறையில் தமிழில் எடுத்துத் திரையிட்டுப் பார்க்கட்டும். படம் வெற்றிகரமாக ஓடுகிறதா இல்லையா என்று அப்போது தெரிந்து கொள்ளலாம்.

கொல்லம்<br>
16–9–68 நா. ஆராஅமுதன்

இயற்கையான சம்பவங்களைக் கொண்டு தயாரிக்கப்பட்டுள்ள எந்தப் படமும் ஓடிய தில்லை என்று திரு சின்னப்பாதேவர் கூறுவது முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைப்பதற்கு ஒப்பாகும். 'பாலும் பழமும்', 'பாச மலர்', 'கை கொடுத்த தெய்வம்', 'கற்பகம்' ஆகிய படங்களின் வெற்றிக்குக் காரணம் அந்தப் படங்களில் நிகழும் சம்பவங்கள் இயற்கையானவை என்பதால்தான். 'பராசக்தி' இன்றும் வசூலில் நிகரற்று நிற்பதற்கும் அதே காரணம் பொருந்தும்.

மதுரை — 6<br>
15–9–68 கோ. முருகன்

திரு தி. ஜானகிராமனின் 'அம்மா வந்தாள்' பற்றிய கட்டுரை சுவையாக இருந்தது. திரு ஜானகிராமனின் 'கண்டாமணி' (கல்கியில் வெளியான அவரது சிறுகதை) இன்னும் என் காதுகளில் ஒலிக்கிறது. கலைஞன் ஒரு படைப்பை உருவாக்குவது அவனது அனுபவத்தின் அடிப்படையில்தான். அனுபவம் என்பது எல்லோருக்கும் பொதுவானது என்றாலும் கலைஞன் தன் கைவண்ணத்தால், கற்பனையால் அனுபவித்ததை அழகுபடுத்துகிறான். கலைஞன் அழகுபடுத்துவது கரியானாலும் ஒளி கொடுப்பது போன்ற பிரமை தட்டுகிறது. 'அம்மா வந்தா'ளின் 'கரு' இகைப்பைத் தரலாம். ஆனால் அது வேஷம் போடும் சமூகத்தின் அழகான பிரதிபலிப்பு.

சென்னை—28<br>
31–8–68 ஸ்ரீவித்யா

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam




# மனம் கவர்வது!

நாளுக்கு நாள் மாறும்
அற்புதம் தான் நாகரிகம்.
அப்படி அலாதியாக
மாறும் ஒரு வாயில் இதோ
எல்லை மீறினாலும் அடக்கம்
குன்றாதது. இது போன்ற
வாயில்களில் எதிர்பார்க்க
முடியாததை நீங்கள் எதிர்
பார்க்கலாம். உங்கள் மன
நிலைக்கு இணையான ஒரு
மஃபத்லால் க்ரூப்
வாயிலை அணிந்து
மகிழுங்கள் —எந்நிலைக்கும்
ஈடு கொடுக்கும் உங்கள்
எழில் தோற்றம்.



## மஃபத்லால் க்ரூப்

2×2 வாயில்களும்
லெனோக்களும்
'டெரின்'/காட்டன்,
'டெரிலெஸ்டு' மற்றும்
'டெரீனெஸ்டு' ரகங்கள்.

M 365 TM

நியூ ஷோரக் (ஷோரக்), அகமதாபாத் . நியூ ஷோரக், நதியாத் . ஸ்டாண்டர்டு, பம்பாய் . ஸ்டாண்டர்டு (நியூ சைனு), பம்பாய் . ஸ்டாண்டர்டு (தேவாஸ்) . ஸஸூன், பம்பாய் . ஸஸூன் (நியூ யூனியன்) பம்பாய் . ஸூரத் காட்டன், ஸூரத் . மஃபத்லால் ஃபைன், நவசாரி . மிஹிர் டெக்ஸ்டைல்ஸ், அகமதாபாத்

GISTERED No. M. 4392
egistered as a Newspaper in Ceylon